# சிறந்த அமிலநாசினியும், மலமிளக்கியும்




## நம்பிக்கை

ஒவ்வொரு துறையிலும சில தயாரிப்புகள்தான்
சிறந்த குணமும், பல வருடங்களாக நம்
பிக்கையானதாகவும் பெயர் பெற்று உயர்ந்த இடம்
பெற்றிருக்கின்றன. இந்த நம்பிக்கையான தன்
மைதான் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா உலகில்
எல்லோராலும் அங்கீகரிக்கப்பட்டும் 75
வருடங்களுக்கு மேலாக சிபார்சு
செய்யப்பட்ட உலகமறிந்த
தாயரிப்பும் ஆகும்.

அதிகாரம் பெற்ற தயாரிப்பாளர்கள் :
டேஸ் மெடிகல் ஸ்டோர்ஸ் (மான்யுபாக்சரிங்) பிரைவேட் லிமிடெட்

# ACOSTO

## அகாஸ்டோ




விநியோகஸ்தர்கள்:

**சுந்தர்தாஸ் டிரேடிங் & மானுபாக்சரிங் கோ.**

"லிவ்ராஜ் மான்ஷன்"

150-A, மவுண்ட் ரோடு, சென்னை-2 - போன்: 84979

மார்ச் 9ஆ முதல்

பாரகன். ஸ்ரீகிருஷ்ண
உமா. நூர்ஜஹான்
மற்றும் தென்னுடெங்கும்







கண்ணதாசன்
புரொடக்ஷன்ஸ்
அளிக்கும்

# வானம்பாடி

ஒளிப்பதிவு & டைரக்ஷன் G.R.நாதன்
இசை K.V.மஹாதேவன்
திரைக்கதை-வசனம் வலம்புரி சோமநாதன்
பாடல்கள் கண்ணதாசன்
கலை அழகப்பன்
எடிட்டிங் S.சூர்யா
தயாரிப்பு K.முருகேசன்
ஸ்டுடியோ மெஜஸ்டிக்

NEGATIVE RIGHTS CONTROLLED BY.. B.MUTHUKOMARAPPA REDDIAR MAJESTIC STUDIOS MADRAS.. 26.

# கல்கி

## பொருளடக்கம்

சுபகிருது, பங்குனி மீ 11உ. ★ மார்ச், 24உ. 1963



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.


'அனாஸின்'

வலி நிவாரணத்திற்கு சிறந்தது

ஏனெனில் அது நான்கு வழிகளில் வேலை செய்கிறது

வலியைப் போக்குகிறது.

ஜுரத்தைத் தணிக்கிறது.

நரம்புகளைச் சமனப்படுத்துகிறது

சோர்வைப் போக்குகிறது.



அனாஸின் அதிலுள்ள மருந்துகளின் சேர்க்கையால் சிறந்த நிவாரணியாகிறது. தலைவலி, ஜலதோஷம், பல்வலி மற்றும் தசைவலி முதலிய எல்லாவிதமான வலிகளுக்கும் அது சிறந்தது. மேலும் அனாஸின் ஜுரத்தைத்தணிக்கிறது. நரம்புகளுக்குசமனமூட்டுகிறது, சோர்வைப் போக்குகிறது. ஞாபகமிருக்கட்டும், இரண்டு அனாஸின் மாத்திரைகள் வலிகளுக்கு சிறந்த நிவாரணி.




2 மாத்திரைகளுக்கு 13 ந. பைசேதான்.

*Registered User:* GEOFFREY MANNERS & CO. LIMITED.

O-38-TAM

புகைபிடிக்கும் இங்கிதம்

# உதவுவீர் முன்னே, ஊதுவீர் பின்னே




நாலுபேருக்கு நடுவில் புழங்கும் போது, சொந்த சிகரெட்டைப் பற்றவைப்பதற்கு முன்பாக, பிறருக்கு வழங்குவதே ஒழுங்கு. ஒரு பெட்டியைக் கச்சிதமாக நீட்டினீர்களேயானால் அதுவே மெச்சதற்குரிய வழி. பிறரிடமிருந்து பெறும் ரகங்களைக் குறைகூறாமலிருத்தல் சிறந்த பண்பாட்டுக்கு அறிகுறி.

உயரிய பண்போடு உபயோகிப்பதற்கும் உதவுவதற்கும் உகந்தது **பனமா**

Panama

20

CIGARETTES

இழுக்க இழுக்க இன்பம் — இறுதிவரை

விசேஷக் கலவை செய்வோர்:
கோல்டன் டொபாக்கோ கம்., ப்ரைவேட் லிட்.
பம்பாய்-56.

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

GT. 616 TA-1 Greens' Advtg.



மலர் 22 | தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 34

# எங்கே முரண்பாடு?

சீனர்கள் இந்தியாவின் மீது எடுத்த படையெடுப்பைத் தடுக்கக் கூடிய நிலையில் இந்திய ராணுவத்தை வைத்திருக்கவில்லை என்று குறை கூறியவர்களே இன்று பட்ஜெட்டையும் அதன் வரிப் பிரேரணைகளையும் எதிர்ப்பதைக் கண்டு தமக்கு வியப்பாக இருப்பதாகப் பிரதமர் போபாலில் பேசியிருக்கிறார்.

பாமர மக்களை ஏமாற்றும் இந்த மட்டரக வாதங்களைப் பிரதமர் பயன்படுத்துவது வருந்தத்தக்கது. கொஞ்சம் யோசித்துப் பார்த்தாலுங்கூட இந்த வாதத்தின் சொத்தையைக் காணக்கூடும்.

தலைவாசலில் யுத்த சன்னத்தனாக நுழைந்து விட்டவனை விரட்ட இப்பொழுது நவீன தளவாடங்களைச் செய்கிறோம் என்று ஆரம்பித்தால், நாம் செய்து முடிக்கும் வரையில் எதிராளி பொறுத்திருப்பான் என்று கருதுகிறாரா பிரதமர்?

இந்தத் தளவாடங்கள் செய்யக் கோடிக்கணக்கான ரூபாய்கள் செலவழியும். அவற்றை இந்திய மக்களை எவ்வளவு கசக்கிப் பிழிந்தாலும் திரட்டிவிட முடியாது. இந்திய மக்களை இப்போது கசக்கிப் பிழிந்தால், வறுமை மேலிட்டு, உற்சாகம் குன்றி, வீர உணர்ச்சி குன்றி நடைப் பிணங்களாகிப் போவார்கள். இப்படிப்பட்ட மக்கள், எதிரியைத் தாக்க எப்படி உறுதியுடன் நிற்க இயலும்? தேசப் பாதுகாப்புக்காகப் போடப்படுவதாகக் கூறப்படும் பட்ஜெட் அதற்கு மாறான பலனை உண்டாக்கக்கூடும். அதனால்தான் விஷயம் உணர்ந்தவர்கள் எல்லாம் இந்தப் பட்ஜெட்டை எதிர்க்கிறார்கள்.

எதிரி தலைவாசலில் நிற்கும்போது, காலம் தாழ்த்தாமல் நண்பர்களிடம் உதவி கோரிப் பெறுவது தவிர வேறு வழியில்லை என்று எதிர்க்கட்சியிலுள்ளவர்கள் கூறுகிறார்கள்.

நமக்கு உதவி செய்ய முன்வரும் நாடுகள் நம்மைப்போல் ஜனநாயக வாழ்க்கை முறையைக் கொண்டவர்கள். நம் நாட்டில் ஜனநாயகம் வளர்வதிலும் நாம் சுதந்திரமாக வாழ்வதிலும் அக்கறை கொண்டவர்கள். அவர்களுடைய உதவிக்கு, நோக்கங்கள் கற்பிக்காமல், தக்கபடி அணுகி உதவியைக் கோரிப் பெற்றால் சீனாவின் கர்வம் குறையும். கிழக்காசிய நாடுகளில் நமது செல்வாக்கு வளரும்.

பிரதமர் எதிர்க் கட்சியிலுள்ளவர்கள் பேச்சில் ஏதோ முரண்பாடு இருப்பதாகப் போபாலில் பேசியிருப்பதில் பொருள் இல்லை. இது பிரதமருக்கே தெரியும். ஆனால் மக்கள் மனத்தில் ஒரு பிரமிப்பை உண்டாக்க முயன்று இப்படிப் பேசியிருக்கிறார்.

எதிர்க் கட்சிகளின் செல்வாக்கைக் குறைத்து, தங்கள் கட்சியின் செல்வாக்கைப் பலப்படுத்தும் நோக்குடன் பேசாமல், நாட்டு நலனுக்குரியவற்றை யார் சொன்னாலும் கேட்டு நடப்பதுதான் இன்றைய நிலைக்கு அவசரமான செயலாகும்.

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப(து) அறிவு

# என்ன சேதி?

## மொரார்ஜியின் பிடிவாதம்

நாட்டில் உள்ள தங்கமெல்லாம் சர்க்காரிடம்தான் இருக்க வேண்டும் என்று நிதிமந்திரி மீண்டும் கோபமாக வற்புறுத்தி யிருக்கிறார். வாதத்துக்கு மருந்துண்டு. ஆனால் பிடிவாதத்துக்கு மருந்து ஏது?

நமது நிதி மந்திரி புதிது புதிதாகத் தொழில்கள் ஏற்படுத்தி மக்களுக்கு வேலை வாய்ப்புக்களை ஏற்படுத்தா விட்டாலும், மக்கள் புரியும் தொழில்களை அழித்துத் தெருவில் பிச்சைக்காரர்களாக நடமாட விடுவதில் அசாத்தியத் திறமை காட்டி வருகிறார். தூக்கணாங் குருவியைப் பார்த்துக் குரங்கு 'எனக்குக் கூடு கட்டத் தெரியாது. கட்டிய கூட்டைப் பிரிக்கத்தெரியும்' என்றதாம்.

## வேலையில்லாத் திண்டாட்டம்

மந்திரி பக்தவத்ஸலம் மேலும் மூன்று கல்லூரிகளில் தமிழைப் போதனாமொழியாக உபயோகப்படுத்த இணங்கியிருக்கிறார்.

அவரே தமிழ் போதனாமொழிக்கு மாணவர்களிடையே போதிய ஆதரவு இல்லை என்று சென்ற ஆண்டு கூறினார். மாணவர்கள் இம்முயற்சிக்குப் போதிய ஆதரவு காட்டவில்லை என்றார்.

மாணவர்கள் தமிழ் போதனாமொழியை ஏற்றால் அகில இந்தியாவில் வேலை வாய்ப்பில்லாமல் கஷ்டப்பட நேருகிறது. தமிழ் மூலம் பயின்றவர்கள் ராஜ்யத்துக்குள்ளேயே முடங்கிக் கிடக்க நேர்கிறது. நமது ராஜ்யத்தில் அவ்வளவு வாய்ப்புக்களும் கிடையாது. அதனால்தான் மாணவர்கள் முன்வரவில்லை.

இவற்றை யெல்லாம் மந்திரி பக்தவத்ஸலம் புள்ளி விவரங்களோடு கூறினார். இருந்தாலும் அந்தத் திட்டத்தை விஸ்தரிக்க இணங்கி யிருக்கிறார். மக்களைத் திருப்திசெய்வது ஜனநாயக முறை. ஆனால் மக்களைக் கெடுக்கும் நாசகர முறைகளை ஏற்றுக் கொள்ளலாமா?

தமிழைப் போதனாமொழியாக ஏற்றுக் கொள்ளும் மாணவர்களுக்குக் கல்லூரிச் சம்பளம் கட்ட வேண்டிய நிர்ப்பந்தம் கிடையாது. அது மட்டுமல்ல; மாதா மாதம் ரூபாய் முப்பது சன்மானம் கூடக் கிடைக்கிறது!

இதெல்லாம் எதற்கு? கல்லூரிப் படிப்பைப் பெற்று வேலையில்லாமல் திண்டாடுவதற்கு!




## கைத்தறி நெசவாளர்

சீன ஆக்கிரமிப்பைக் காட்டி, மக்களுக்குக் கடும் வரிகள் விதித்துப் பணம் வசூலிக்கும் நிலையில், சர்க்கார் கைத்தறித் துணி வாங்குவோருக்கு ரூபாய்க்குப் பத்து நயாபைசா கழிவு தர முன் வந்திருக்கிறார்கள் என்பதிலிருந்தே கைத்தறி நெசவாளர்கள் நிலை எவ்வளவு மோசமாக இருக்கிறது என்பதையும் கைத்தறித் துணிகள் எவ்வளவு தேங்கிப் போய்க் கிடக்கின்றன என்பதையும் உணர்ந்துக் கொள்ளலாம்.

சென்ற பத்து ஆண்டுகளாகச் சர்க்கார் கைத்தறி நெசவாளர்கள் கஷ்டம் தீர எவ்வளவோ முயற்சி செய்து வருகிறார்கள். முயற்சியின் பலனாகக் கூட்டுறவுச் சங்கக் கட்டிடங்கள் மிகுந்தன; காரியாலய உத்தியோகஸ்தர்கள் எண்ணிக்கை பெருகின. கைத்தறி நெசவாளியின் நிலை அப்படியேதான் இருந்து வருகிறது!

இதைப் பார்த்துத் திரு ஈ. வெ. ரா. கடைசியில் ராஜாஜி கூறிய முடிவு சரி என்று சொல்ல வந்துள்ளார். கரை போட்ட வேஷ்டியும் சேலையும் கைத்தறிக்கு ஒதுக்க வேண்டும் என்று கூறி யிருக்கிறார், திரு ஈ. வெ. ரா. பெரியார்.

ஒரே கடவுள்!

குரல் கேட்குமா ?

"வீட்டிலே எப்படி
அடுப்பைப்பற்ற
வைக்கிறதாம்?"

வரி

மண்ணெண்ணெய்

பற்பல கருத்துக்களில் மாறுபட்ட அபிப்பிராயம் கொண்டிருக்கும் ஈ.வெ.ரா. இவ்விஷயத்தில் ராஜாஜியுடன் ஒத்துப் போவதைக் கண்டு தமிழ்மக்கள் மகிழ்வார்கள்.

### சட்ட விரோதம்

பம்பாய் பிரபல வழக்கறிஞரான பிரோஸ் ஷராப் பின்வரும் முக்கிய விஷயத்தை நினைவுகூருகிறார்:

இந்திய அரசியல் சட்டத்தின் 19வது ஷரத்தின்படி ஒவ்வொரு பிரஜைக்கும் சொத்து வாங்கும் உரிமையும் விநியோகிக்கும் உரிமையும், தொழில், வியாபார உரிமையும், அடிப்படை உரிமைகளாக அளிக்கப்பட்டிருக்கின்றன. சர்க்காரின் தங்கக் கட்டுப்பாடு உத்தரவுகள் இந்த ஆதார உரிமைகளுக்கு விரோதம் ஆகும். தவிரவும் அரசியல் அமைப்பில் அடங்கியுள்ள கோட்பாடுகளுக்கும் இவை முரணாக உள்ளன. அரசியல் சட்டத்தின் 39-வது பிரிவின் கீழ் ''பிரஜைகளுக்கு, ஆண் பெண் இருபாலாருக்கும் ஜீவிப்பதற்குப் போதுமான வசதிகளைப் பெற உரிமை உண்டு என்பதை அங்கீகரித்து அவற்றை அளிக்கும் வகையில் அரசாங்கம் தனது கொள்கைகளை வகுத்துக் கொள்ள வேண்டும்'' என்று கூறப்பட்டுள்ளது. 41வது பிரிவின் கீழ் ''அரசாங்கம் தனது பொருளாதார வசதிகளுக்கும் அபிவிருத்திக்கும் உடன்பட்டு ஒவ்வொரு பிரஜைக்கும் அவனுடைய வேலை செய்யும் உரிமையையும், கல்வி பயிலும் உரிமையையும் பாதுகாப்பதுடன் வேலை இழந்த காலம், வயோதிகம், உடல் நலம் குன்றிய காலம் முதலிய காரணங்களால் ஏற்படும் கஷ்டங்களிலிருந்து பொதுப் பணத்தைக் கொண்டு நிவாரணம் அளிக்க உருப்படியான வழிவகை செய்ய வேண்டும்'' என்று வற்புறுத்தப்பட்டிருக்கிறது.

பரவலாக வேலையில்லாக் கஷ்டத்தை உண்டாக்கி, கணக்கற்ற பிரஜைகளின் ஜீவனத்தை இழக்கச்செய்து அவர்கள் மீது தகாத முறையில் வீண் கஷ்டத்தைச் சுமத்தி இடுக்கண்களை விளைவிப்பதால் தங்கக் கட்டுப்பாடு விதிகள் 19, 39, 41 பிரிவுகளில் இடப்பட்டுள்ள கட்டளைகளை மீறுகின்றன.

உரிமைகளைப் புறக்கணிக்க அனுமதிக்கும் அவசரச் சட்டத்தை வைத்துக் கொண்டு பிரஜைகளின் ஜீவனத்துக்கு வழிவகை செய்வதற்கு மாறாக இந்த உத்தரவுகள் ஏற்கெனவே உள்ள ஜீவனத்தை அழித்துவிட்டன.

---

### சூடு கண்ட பிறகும்.....











சென்னையில் அமெரிக்கக் கான்ஸல் ஜெனரலாக விளங்கி வரும் ஸ்ரீ தாமஸ் டபிள்யூ. ஸைமன்ஸ் அவர்கள் தமது உத்தியோகத்திலிருந்து ஓய்வுபெற்றுத் தாய்நாடு திரும்பியிருக்கிறார். அதையொட்டி சென்னை மயிலாப்பூர் உட்லண்ட்ஸ் ஹோட்டலில் டாக்டர் ஸி. பி. ராமஸ்வாமி அய்யர் தலைமையில் ஒரு பிரிவுபசார வைபவம் நடைபெற்றது. தொழிலதிபர்கள், அரசியல் வாதிகள், கலைஞர்கள், பத்திரிகையாளர்கள், சமூகத் தொண்டர்கள் போன்ற பலதரப்பினரும் உள்ளடங்கிய ஒரு குழு இந்தத் தேநீர் விருந்தை ஏற்பாடு செய்திருந்தது. ஸ்ரீ ஸைமன்ஸ் அவர்கள் எந்த அளவுக்குத் தமிழக மக்களின் அன்புக்கும் அபிமானத்துக்கும் பாத்திரமாகி யிருக்கிறார் என்பதனை எடுத்துக் காட்டியது.

1. டாக்டர் ஸைமன்ஸுக்கு ராஜாஜி மாலை அணிவிக்கிறார். 2. ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி ஸ்ரீமதி ஸைமன்ஸுக்கு மலர் மாலை சூட்டுகிறார். 3. தேநீர் விருந்தில் கலந்து கொண்ட பிரமுகர்களில் ஒரு பகுதி. 4. ஸ்ரீ அனந்தராமகிருஷ்ணனுடன் ராஜாஜி அளவளாவி மகிழ்கிறார். ராஜாஜிக்கு இடப்புறம் ஸ்ரீ ஸைமன்ஸ், டாக்டர் ஸி. பி., ஸ்ரீமதி ஸைமன்ஸ் ஆகியோர் அமர்ந்திருக்கிறார்கள்.

---

## மாற்று வேலை

**வ**ங்கத்தில் வேலையிழந்த பொற் கொல்லர்களுக்குச் சிறிது மான்யம் அளிக்க வங்க சர்க்கார் தீர்மானித்திருக் கிறார்கள். இதை நிதிமந்திரி தேசாய் கண்டித்திருக்கிறார். வேலை யிழந்த பொற்கொல்லர்களுக்கு மாற்று வேலை கிடைக்கச் செய்ய சர்க்கார் முயலவேண் டும் என்று சொல்லியிருக்கிறார். மாற்று வேலை கிடைக்கும் வரை பொற்கொல் லர்கள் பட்டினியாய்க் கிடப்பார்களா? மாற்று வேலை பொற் கொல்லர்கள் செய்யக் கூடியதாக இருக்குமா? சும்மா யிருக்கிற சங்கை ஊதிக்கெடுத்த ஆண்டி யின் கதைதான் இது.

## சர்க்காரும் விலை ஏற்றமும்

**வி**லைவாசிகளைக் கட்டுப்படுத்துவது பற்றிச் சர்க்கார் அடிக்கடி தீவிரமாகப் பேசி வருகிறார்கள். பேசுவதனால் மட்டும் ஏதாகிலும் சாதிக்க முடியுமானால், இத் தனை நாட்களுக்குள் விலை எவ்வளவோ குறைந்திருக்க வேண்டும். ஒரு பக்கம் விலைகளை ஏற்றும் காரியங்களைச் செய்து கொண்டே போகிறது. மற்றொரு பக்கம் விலைகளைக் குறைப்பதற்கான பேச்சுக்க ளும் நடக்கிறது. இதுவல்ல ஜனநாயகம்.



# அதர்மத்தின் தர்பார் நடக்கிறது!

எம். எஸ். சிவசாமி

அமைச்சர் மொரார்ஜி தேசாயின் 'பட்ஜெட்' சமர்ப்பிக்கப்பட்டு இரண்டு வாரங்களுக்கு மேல் ஆனாலும் அதன் கொடுமை பற்றிய புலம்பல்களும், கண்டனங்களும் ஓய்ந்தபாடில்லை. அவர் விதித்துள்ள புது வரிகளும், பழைய வரி விஸ்தரிப்புக்களும் அவற்றின் விளைவுகளும் நாட்டு மக்களில் எந்தப் பகுதியையும் விட்டு வைக்கவில்லை. எந்தப் பகுதி மக்களை எப்படி எந்த அளவுக்கு இவ்வரிகள் பாதிக்கின்றன என்பதை முற்றிலும் புரிந்து கொள்வதுகூடச் சுலபமல்ல. வரி கொடுப்பவர்களின் சக்தி, தகுதி, பொருளாதார நிலைமை முதலிய அம்சங்கள் எல்லாம் புறக்கணிக்கப்பட்டு விட்டன. எங்கெங்கு எவ்வாறு எவ்வளவு பணம் சுரண்டுவது என்ற ஒரே லட்சியத்தைக் கொண்டே வரிகள் போடப்பட்டிருக்கின்றன என்பது மட்டும் தெரிகிறது. தங்கக் கட்டுப்பாட்டு உத்தரவுகள் நாட்டின் மாதர்கள் மீதும், பொற்கொல்லர்கள் மீதும் அரசாங்கம் நடத்தும் போர் என்று கருதினால், மொரார்ஜியின் 'பட்ஜெட்' நாட்டு மக்கள் அனைவரின் மீதே தொடுக்கப்பட்டுள்ள போர்.

கிராமங்களில் வாழ்பவர்கள்தான் நமது மக்களில் பெரும்பான்மையினர். நாகரிகம், சுக வாழ்வு என்றெல்லாம் வெகுவாகப் பேசப்பட்டாலும், இன்னமும் வாழ்க்கைத் தரத்தில் அடித்தளத்திலேதான் அவர்கள் இருக்கின்றனர். அவர்கள் சுமார் முப்பது கோடி மக்கள். இவர்கள் எப்படிப் பாதிக்கப்படுகிறார்கள் என்று கவனிப்போம்.



விளக்கு ஏற்ற உபயோகிக்கப்படும் மண்ணெண்ணெயின் விலை புட்டிக்குப் பத்து பைசாவாக உயருகிறது. நாகரிகத்தின் சின்னம் என்று கிராமப்புறங்களில் எல்லோரும் உபயோகிக்கும் பொருள் இது ஒன்றுதான். அதற்கு இப்படி ஒரு வரி. சோப்பு உபயோகிக்கும் வழக்கம் வெகுவாகப் பரவி வருகிறது. அது கூடாது என்பதற்காகவோ என்னவோ இதற்கும் வரி போட்டிருக்கிறார்கள். தபால் கார்டு, கவர், ரிஜிஸ்தர் முதலிய எல்லா வசதிகளையுமே கிராம மக்கள் அதிகப் பணம் கொடுத்துத்தான் இனிமேல் அடைய முடியும். எக்ஸைஸ் வரி பல பொருள்கள் மீது அதிகரிக்கப்பட்டிருப்பதால், துணிமணிகள் முதல் கிராமமக்கள் உபயோகிக்கும் சிமிட்டி போன்ற பல்வேறு பொருள்களின் விலை கூடுதலாகவே ஆகும். மின்சார வசதி பெற்றுள்ள கிராமங்களாக இருந்தால் பல்புகள், ஸ்விட்சுகள், மின் கம்பிகள் எல்லாம் அதிக விலை கொடுத்துத்தான் இனி வாங்க வேண்டும். மற்ற மின்சாரச் சாமான்களும் இதைப் போலவே. காப்பி கூட இனி பழைய விலைக்குக் கிடைக்காது. வீடுகளைச் செப்பனிடவோ விவசாயத்துக்குக் கிணற்று உறைகள், சுவர் கட்டவோ சிமெண்டு எப்போதுமே கிராமங்களில் கிடைப்பது அரிது. இப்போது சரக்கு கிடைக்காததுடன் விலையிலும் கணிசமான ஏற்றம். இவற்றினால் கிராமவாசிகளுக்கு வாழ்க்கைச் செலவு உத்தேசமாகப் பார்த்தால் 25 சதவிகிதமாவது நிச்சயமாக உயரும்.

இப்படி உயரும் செலவுகளைச் சமாளிக்க அவர்களுக்கு வருவாயில் ஏதாவது உயர வகை உண்டா என்றால் இல்லை. விளை பொருள்கள், முக்கியமாக நெல்விலை சென்னை மாநிலத்தில் சரிந்துள்ளது. மேலும் குறையாது பார்த்துக்கொள்ள என்ன செய்யலாம் என்று யோசிக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. இந்த நிலையில் விவசாயச் செலவுகளே இனிமேல் உயரப்போகின்றன. நிலவரி உயர்வும், தண்ணீர்த் தீர்வை உயர்வும், ராஜ்ய சர்க்காருடைய ஆதிக்கத்துக்குட்பட்டவை. இவ்விரு இனங்களிலும் வரிகளைச் சென்னை சர்க்கார் உயர்த்தி விட்டார்கள். மற்ற ராஜ்யங்களிலும் அப்படியே செய்வார்கள். அவர்களுக்கு உத்தரவு அந்தமாதிரி. இது ராஜ்ய சர்க்காரின் கைங்கரியம். இப்போது கட்டாய சேமிப்பு என்ற புது வரி போடப்பட்டிருக்கிறது. நில வரி செலுத்தும் எல்லா விவசாயிகளும் நில வரியைத் தவிர, அதன் பாதி அளவு கட்டாய சேமிப்பு என்று மத்திய சர்க்காருக்குச் செலுத்த வேண்டும். சேமிப்பு என்றாலும் வரி என்றாலும் நடைமுறையில் இரண்டும் ஒன்றுதான். சேமிப்பும் ஆண்டுதோறும் பசலிக்குப் பசலி செய்ய வேண்டியதுதான். என்றைக்கோ சொற்ப வட்டியுடன் திரும்பி வரப் போகின்ற தொகை அப்படித் திரும்பி வருகின்ற காலத்தில் பணவீக்கம் காரணமாக மதிப்பிழந்து இருக்கும். எவ்வளவு மதிப்புக் குறைந்திருக்கும் என்று சொல்ல முடியாது. இன்றைக்கு வயிற்றிலடித்து நாளைக்கு மண்டையில் அடிக்கும்

கிலை. மேலும், நகர்ப்புறங்களில் மாதச் சம்பளம் பெற்று வாழும் மக்கள் விஷயத்தில் ஆண்டுக்கு 1500க்குக் குறைவாக வருமானம் இருந்தால் கட்டாய சேமிப்பிலிருந்து அவர்களுக்கு விலக்களிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் கிராம மக்களுக்கு இப்படி எவ்வித விலக்கும் அளிக்கப்படவில்லை.

ஜனத்தொகையில் நான்கில் ஒரு பகுதி நகரங்களில் வாழ்கின்றனர். அவர்கள் மாதச் சம்பளம் பெற்றோ, சுயேச்சையாகத் தொழில் நடத்தியோ ஜீவிப்பவர்கள். ஆண்டு வருமானம் 20,000க்கு மேலுள்ளவர்களைப் பணக்காரர்கள் என்று ஒதுக்கி விட்டால் மத்தியதர வகுப்பினரின் எண்ணிக்கைதான் கணிசமானது. இவர்கள் சமூகத்துக்கு முதுகெலும்பு போல் உள்ளவர்கள். நமது நாட்டுப் பண்பு, கலாசாரம், தொழில் வளர்ச்சி, உயர் கல்வி, தத்துவம், தேசிய உணர்ச்சி முதலியவற்றை வளர்ப்பதும் அவற்றுக்கெல்லாம் உறைவிடமாக இருப்பதும் இந்த வர்க்கத்தினரே. சமூகப் புரட்சி ஏற்படுவதும் இவ்வர்க்கத்தினருடைய மனப்பான்மையைப் பொறுத்தே இருக்கிறது. இவர்களில் பலர் ஏற்கனவே இன்ஷ்யூரன்ஸ் திட்டங்களிலும், பிராவிடெண்ட் பண்டுகள் முறையிலும் சேமிப்பு செய்து அரசாங்கத்துக்கு உதவி வருபவர்கள். ஆண்டுதோறும் உயர்ந்து கொண்டே போகும் வாழ்க்கைச் செலவைச் சரிக் கட்ட முடியாமல் தவித்துக் கொண்டிருக்கும் இவர்களின் நிலைமை இப்போது விதிக்கப்பட்டுள்ள வரிகளினால் பரிதாபகரமானதாக மாறும். வரிச் சுமையின் முழுப் பளுவையும் இந்த வர்க்கத்தினர்தான் தாங்க வேண்டிவரும்.

ஆண்டுக்கு ஐயாயிரம் ரூபாய் வருமானம் உள்ளவர்கள் இப்போது நாற்பத்திரண்டு ரூபாய் மட்டும் வரி செலுத்தினால் போதும். ஆனால் புது திட்டத்தின்படி வரி என்றும் சேமிப்பு என்றும் ரூ. 242 கொடுக்க வேண்டும். ''சிறு சேமிப்பு திட்டம்'' தோல்வியே கண்டுள்ளது என்பதனால், இந்தக் கட்டாய சேமிப்பு முறை மேற் கொள்ளப்பட்டது என்று விளக்கம் சொல்லப்படுகிறது. ஏன் தோல்வியுற்றது என்பதை மட்டும் ஒருவரும் ஆராய வில்லை. பொருள்களெல்லாம் விலை உயர்ந்துவிட்டதால், மக்களின் சக்தி, சேமிப்பு செய்ய முடியாதபடி குன்றி விட்டதுதான் உண்மை. விளக்குகளுக்கு மட்டுமின்றி இதர உபயோகங்களுக்கும் பெருமளவில் மின்சாரம் உபயோகிப்பவர்கள் நடுத்தர வர்க்கத்தினர். மின்சாரத் தீர்வை சென்னை நகரத்தில் சென்ற ஆறு மாதங்களாக உயர்த்தப்பட்டு விட்டது. 'நெருக்கடி காலம்' என்ற காரணத்தினால். இது ராஜ்ய சர்க்காரின் பங்கு. தற்போது மின்சார சாமான்கள் பலவற்றுக்கும் உயர்ந்த விகிதத்தில் வரிகள் விதிக்கப்பட்டுள்ளன.

குடியிருப்பு வீட்டுக்குச் சென்னை நகரசபை சொத்து வரியை ஐந்து சதவிகிதம் உயர்த்தத் தமிழக அரசாங்கத்திடம் அனுமதி பெற்றிருக்கிறது. இப்போது குடியிருப்பு நிலத்துக்கும் ''மார்க்கெட் மதிப்பு''ப்படி நிலவரி விதிக்க ஏற்பாடுகள் நடந்து வருகின்றன.

கிராம வாசிகளையும் நகர மக்களையும் சேர்ந்தாற் போலவே பாதிக்கும் வரி மோட்டார் வண்டிகள் மீது உயர்த்தப்பட்டுள்ள வரிகள். மோட்டார் உற்பத்தியில் இன்றி







யமையாத பல வேறு டயர்கள் போன்ற தனி இனங்களின் மீது விதிக்கப்பட்ட வரிகளைச் சேர்த்துப் பார்த்தால் ஒரு லாரிக்கு 2775 ரூபாயும், சிறிய மோட்டாருக்கு 1425 ரூபாயும் விலையில் கூடுதலாகின்றன என்று விஷயமறிந்தவர்கள் கணக்குப் போட்டுச் சொல்லுகிறார்கள். வாகனத்தின் விலையே இப்படி உயரும் என்றால், இதை ஓட்டுவதில் ஏற்படும் வருஷாந்தரச் செலவு மட்டும் நின்ற இடத்தில் நிலைக்குமா? சாமான்கள் ஏற்றிச் செல்லும் ஒரு லாரிக்கு மட்டும் ஒரு வருஷத்துக்குச் சுமார் 4500 ரூபாய் அதிகச் செலவு ஆகிறது என்று சொல்லப்படுகிறது. அதாவது, சுமார் 240,000 லாரிகளும், பஸ்ஸுகளும் போக்குவரத்தில் ஈடுபட்டிருக்கிற நமது நாட்டில் இந்த ஆண்டு வரி விதிப்பின் காரணமாக மட்டும் 108 கோடி ரூபாய் அதிகச் செலவு ஆகப் போகிறது. இந்த 108 கோடியை யார் செலுத்தப் போகிறார்கள்?

பஸ் பிரயாணம் செய்யும் லட்சோபலட்சம் சாதாரண மக்களும், லாரிகளில் அனுப்பி வைக்கப்படும் தினசரித் தேவைப்பண்டங்களையே நம்பி அவற்றை வாங்கி உபயோகித்து வாழ்க்கை நடத்த வேண்டிய நிர்ப்பந்த நிலையிலுள்ள மத்தியதர வகுப்பினரும்தான் கொடுக்க வேண்டும். இந்தச் சுமையின் பளு எத்தகையது என்பதை நிதி அமைச்சர் கணக்கு போட்டுப் பார்த்தாரா? அல்லது பஸ்களுக்குத் தேர்தலுக்கு முன் தீர்வை போட்டுப் பதவிக்கு வந்தவர்கள்தான் யோசித்தார்களா?

# தமிழ்மகன் திருக்கோயில்

"கறையான் வாயில் மண்ணைப் போட்டவர்" என்று ஒரு பட்டப் பெயரை யாரும் அவருக்குக் கொடுக்கவில்லை. ஆனால் அப்படிக் கொடுத்திருந்தால் எவ்வளவோ பொருத்தமாக இருக்கும். இந்தப் பாழும் கறையான் ஐம்பெருங் காப்பியங்களில் குண்டலகேசியைத் தின்று ஏப்பம் விட்டு விட்டது. வளையாபதியைக் கரைத்துக் குடித்து விட்டது. சிலப்பதிகாரத்தை அணுகிக் கொண்டிருந்தது. அப்போதுதான் அதன் வாயில் மண்ணைப் போட்டு அந்த அற்புதமான தமிழ்க் களஞ்சியத்தை மீட்டார் அமரர் டாக்டர் உ. வே. சாமிநாத அய்யர் அவர்கள். சீவக சிந்தாமணியும் மணிமேகலையும் கறையான் என்னும் யமன் வாயில் அகப்படாமல் அவரால் காப்பாற்றப் பெற்றன.

சங்க நூல்களைக் கறையான் வாயினின்றும் காப்பாற்றினார் அந்த மகான். மூலைமுடுக்குகளிலுள்ள ஊர்களில் கறையான்களின் பசிக்கு உணவாகியிருக்கக் கூடிய பல ஏடுகளைக் காத்து எடுத்து வந்தார். கம்பராமாயணச் சுவடிகள் பலவற்றைச் சேகரித்தார்.



கம்பராமாயணத்தில் யுத்தகாண்டம் என்று ஒரு காண்டம் இருக்கிறது. ஆனால் பாட பேதங்களையும் செருகுகவிகளையும் பார்த்தால் எல்லாக் காண்டங்களுமே யுத்தகாண்டமாக ரத்தக் களரியாகத் தோன்றுகின்றன. நல்ல பாடத்தைத் நிர்மாணிக்க உதவும் பழைய சுவடிகளை அவர் தொகுத்து வைத்திருக்கிறார். இன்னும் வெளியாகாத பல நூல்கள் ஏட்டில் இருக்கின்றன. அவற்றையெல்லாம் கெடாமல் பாதுகாத்து நல்ல முறையில் பதிப்பிக்கும் பணியை நடத்த ஸ்ரீமதி ருக்மிணிதேவி அவர்களின் முயற்சியால் **டாக்டர் சாமிநாதய்யர் அவர்கள் நூல் நிலையம்** என்ற ஸ்தாபனம் ஒன்று அடையாற்றில் அவருடைய உதவிகொண்டு நடந்து வருகிறது. இது வரையில் பல வெளியீடுகளை இந்த நூல் நிலையம் வெளியிட்டிருக்கிறது.

இதற்கென்று தனியே கட்டடம் அமைத்து வேலை செய்தால் நன்றாக ஆராய்ச்சியை நடத்தலாம் என்று இந்த நூல்நிலையப் புரவலர்கள் எண்ணி அரசாங்கத்துக்கு விண்ணப்பித்துக் கொண்டார்கள். கட்டடம் உருவாவதற்கான ஒன்றரை லட்சம் ரூபாய் செலவில் பாதியை மத்திய அரசாங்கமும் மீதியில் ஓரளவு தமிழ் நாட்டு அரசாங்கமும் உதவி செய்ய முன்வந்திருக்கின்றன.

கறையான் புற்றினிடையே தவம் செய்து வெளிவந்த வான்மீகி முனிவர் ஆசிரமம் திருவான்மியூரில் இருக்கிறது. அவ்வூரில் கறையான் வாயிலிருந்து தமிழை வெளிவரச் செய்த முனிவர் பெயரால் அமைந்த நூல் நிலையத்துக்கு இடம் வாங்கியிருக்கிறார்கள். தமிழ் மக்கள், தமிழ்மகன் திருக்கோயிலாகிய இந்த நூல் நிலையக் கட்டடம் எழும்ப நூற்றுக் கணக்காகவும் ஆயிரக் கணக்காகவும் அள்ளி வழங்கி உதவ முன்வர வேண்டும். வடநாட்டில் ஒரு பாண்டார்க்கர் ஆராய்ச்சி நிலையம் இருப்பது போலத் தென்னாட்டில் இத்தனை பெரிய ஆராய்ச்சி நிலையம் ஆக்குவதற்குரிய வாய்ப்பு கிடைத்திருக்கிறது. தமிழ் மக்கள் தங்கள் பொருளுதவியை, **"கௌரவ அமைச்சர், டாக்டர் சாமிநாதய்யர் நூலகம், அடையாறு, சென்னை - 20"** என்ற முகவரிக்கு அனுப்பி உதவும்படி வேண்டுகிறோம்.






**மானேர்ஸ்**
**கிரைப்**
**மிக்ஸ்சர்**

*குழந்தையைச்*
*சிரித்த முகத்துடன்*
*வைத்திருக்கிறது.*

இக்காலத் தாய்மார்கள், தங்கள் குழந்தைகளுக்கு இனிமையான சுவைதரும் மானேர்ஸ் கிரைப் மிக்ஸ்சர் தருகிறார்கள். ஒழுங்காக மானேர்ஸ் கிரைப் மிக்ஸ்சர் கொடுத்து வந்தால் குழந்தைகள் உடல் நலத்துடனும் உற்சாகத்துடனும் இருக்கும்.


















**முடிவுகள்!** மானேர்ஸ் அதிர்ஷ்டக் குழந்தை விழா 1963ம் வருஷம் ஜனவரி, பிப்ரவரி மாதத்தில் பிறந்த குழந்தைகளுக்கு ★ அதிர்ஷ்ட நேரம். தேதி: இரவு 8-26 மணி, பிப்ரவரி 11, 1963 ★ முதல் பரிசு (பிரதி மாதம் ரூபாய் 22.50 வீதம் ஐந்து வருஷங்களுக்கு) பேபி கானி தாம்ஜீட் அஹமத், 241/B, மூன்றாவது பிளாக், ராஜாஜி நகர், பெங்களூர்-10 ★ இரண்டாவது பரிசு: (ரூபாய் ஐந்நூறு) பேபி உமா மகேஸ்வரி, செட்டியார் காலனி, போத்தனூர் ★ மூன்றாவது பரிசு: (ரூபாய் இருநூற்றைம்பது) பேபி ஷாஜி, பிளாக் செ. 5, யூனிட் செ.டி. அவின்யூ ஏ, செக்டார் VII, பிலாய் ★ அடுத்த விழா: 1963 மார்ச், ஏப்ரல் மாதங்களில் பிறந்த குழந்தைகளுக்கு. முடிவு தேதி: 1963 மே 5ந் தேதி. விவரங்கள் உங்கள் வியாபாரியிடம் கிடைக்கும்.

GEOFFREY MANNERS & CO., LTD.

ASP/GM-21TAMIL

# போகிற போக்கில்....

சிட்டுக் குருவி

"மரத்துள் மறைந்தது மா மத யானை; மரத்தை மறைத்தது மா மத யானை" என்பார்கள். இந்தப் பாட்டை எழுதியவர் 1963-ம் ஆண்டில் நடைபெறும் காரியங்களை யெல்லாம் எதிர் பார்த்திருக்க வேண்டும்!

கல்கத்தா கம்பெனி ஒன்றைப் போலீஸார் வேறு ஒரு காரியத்துக்குச் சோதனை போட்டார்கள். கணக்குப் புத்தகங்களில் பல பிரபலமான பெயர்கள் இருந்தன. அந்தப் பெயர்களுக்கு எதிராக நன் கொடைகொடுத்ததாகப்பெரும் தொகைகளும் குறிக்கப்பட் டிருந்தன. போலீஸாருக்கு அதிர்ச்சி! மோசடிக் கம்பெனியில் பிரபல காங்கிரஸ் தலைவர்கள் (இதில் சிலர் மத்திய சர்க்கார் மந்திரிகளாம்—ஒருவர் மாநில மந்திரியாம்) நன்கொடை பெற்றிருப்பார்களா என்று!



கல்கத்தா பத்திரிகை ஒன்றில் இந்தச் செய்தி பிரசுரமாகியது. நேருவிடம் கேள்விகள் கேட்டார்கள். நேரு விசாரணை நடத்த உத்தரவிட்டார். விசாரணை நடந்து முடிந்து விட்டது. முடிவு என்னவென்றால்:

"பிரபலஸ்தர்கள் பணம் வசூலித்திருப்பது உண்மை. ஆனால் அப்பணம் அவர்களுக்காக அல்ல. காங்கிரஸ் கட்சியின் தேர்தல் நிதிக்காகவே அவர்கள் அப்படி வசூலித்திருக்கிறார்கள். ஆகவே ஊழல் அல்ல...."

என்பதாகத் தீர்ப்புக் கூறிவிட்டார்கள். காங்கிரஸ்காரருக்குப் பரம திருப்தி. சம்பந்தப்பட்டவர்களுக்கு நிம்மதி. யானை மரத்தில் மறைந்து விட்டது!

ஃ ஃ ஃ

நாகரிகத்தின் விளைவாக எத்தனையோ வசதிகள் கிடைத்திருக்கின்றன. இந்த வசதிகளை அவரவர்கள் சக்திக்கேற்ற வகையில் அனுபவிக்கிறார்கள். பணக்காரன் ரேடியோ, கார் என்கிறான். இவற்றை ஏழை எதிர்பார்க்க முடியாது; அனுபவிக்க முடியாது. எல்லா ஏழைகளும் அனுபவிக்கிற வசதி ஒன்று உண்டு என்றால் அதுதான் கிரோஸின். ஏனைய நாகரிக வசதிகள் அவனுக்குக் கிடைக்காவிட்டாலும் இந்த ஒரு வசதி மட்டும் அவனுக்கு இது வரை வசதியாகக் கிடைத்து வந்தது.



அந்த வசதியின் தலையிலும் புட்டிக்கு ஒன்றேமுக்காலணா என்று வரி போட்டுக் கை வைக்கப் போகிறார்கள். "பாவகரமான செயல்" என்று ராஜாஜி முத்தியால்பேட்டைப் பகுதிக் கூட்டத்தில் கூறினார். வேர்க் கடலை விற்கும் தள்ளு வண்டியில் எரிந்து கொண்டிருந்த கிரோஸின் விளக்கை அப்போது பலர் பார்த்தார்கள். அந்த வண்டிக்காரனும் பார்த்தான். விளக்கிலே சுடர் விட்டுக் கொண்டிருந்த ஒளி படபடத்தது!

ஃ ஃ ஃ

பிரிட்டனில் அவசர கால மிருந்தபோது பல மந்திரிகள் பஸ்ஸில் காரியாலயத்துக்கு வந்து சென்றார்கள். வயதானஒன்றிரண்டு மந்திரிகள் மட்டும் காரில் வந்து சென்றார்களாம். அந்தக் கார்களும் பெட்ரோல் செலவைச் சிக்கனப் படுத்தும் சின்னக் கார்கள். பிரிட்டனில் நடந்தது பழைய கதை என்பதாக ஒதுக்கிவிட்டு இப்போது ஒரு புதுக் கதைக்கு வரலாம்.

டில்லியில் உள்ள மந்திரிமார்களுக்கு நாற்காலி, மின்சாரக் கருவிகள் இவையெல்லாம் வாங்க 13 லட்ச ரூபாய் செலவாகி யிருக்கிறதாம்!

இந்தச் செலவு எப்போது ஏற்பட்டது என்றால் சமீப காலத்தில். இந்த 13 லட்ச ரூபாய்கூடக் குறைவான செலவு என்று கருதப்பட்டாலும் ஆச்சரியப் படுவதற்கில்லை. போகட்டும், மொத்தச் செலவுதானே என்று விட்டு விட்டு இன்னொரு கணக்குக்கு வருவோம்.

இன்னொரு செலவு ஒன்று மாதா மாதம் நடந்து கொண்டிருக்கிறதாம்! அதாவது: 13,500 ரூபாய் மின்சார, தண்ணீர் சப்ளைக்குச் செலவாகிறதாம்!

அதில் திரு லால்பகதூர் சாஸ்திரியாரின் பங்கு மட்டும் மாதம் ஒன்றுக்கு ரூ. 580. இந்தக் கணக்கைப் பார்த்த திரு சாஸ்திரியார் தாம் வெட்கப்படுவதாகவும், இனி ஆறு மாதத்துக்குத் தம் சொந்தப் பணத்தில் இக் கட்டணத்தைச் செலுத்தப் போவதாகவும் அறிவித்திருக்கிறார். மற்ற மந்திரிகள் அவ்வளவு சுலபமாய்க் குற்றத்தை ஒப்புக் கொள்ளத் தயாராக இல்லை.

மூன்றாவது கணக்கு அதிர்ச்சி தரும். அதாவது நீர்ப் பாசன மந்திரியின் மாளிகைக்கு மட்டும் நாற்காலி, பெஞ்சு முதலியவை வாங்கிப் போடச் செலவான தொகை ரூ. 45,000! இந்த ஊதாரிச் செலவுகளுக்கு யார் பணம் கொடுக்கிறார்கள்? மக்கள்தான்!

ஃ ஃ ஃ

ஒரிஸ்ஸா முதலமைச்சர் ராணுவ உதவி பெறுவது குறித்துப் பேச்சு வார்த்தை நடத்த அமெரிக்கா போயிருக்கிறார். அவரை ஒட்டி திரு டி. டி. கே. அடுத்த மாதம் போகப் போகிறார். திரு டி. டி. கே.யுடன் ராணுவத் தலைமைக் காரியாலய அதிகாரிகளும் போகிறார்கள். இந்நேரத்தில் இந்தியாவில் 'ராடார் விமானக் குடைகள்' அமைக்கக் காரியங்களும் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன.

இவற்றைப் பார்க்கிற நண்பர், பழைய பிடிவாதப் போக்கு டில்லியில் மாறுவதாகச் சந்தோஷப் படுகிறார். இந்தச் சந்தோஷம் இரட்டிப்பாக ஆக ஏன் ராஜாஜி மாதிரி மனம் விட்டுப் பேசக்கூடாது என்று கேட்கிறார்.

இப்படிச் சிறுகச் சிறுகக் கொள்கையைக் கைவிட்டு வந்தால் கடைசியில் காங்கிரசுக்கு மிஞ்சுவது எதுவும் இருக்காதே என்ற கவலை ஒரு காரணமாக இருக்கலாம்.;

''மிஞ்சுவது'' பற்றிக் கவலைப்பட அவசியமே இல்லை. குதிரை போனாலும் லாயமும் போய் விடுமா என்ன?

லாயம் போனாலும் அதில் உள்ள உத்திரமாவது இருக்குமே! எனவே, உத்திரத்தைப் பிடித்துக் கொண்டு, நடு நிலைமையை ஜபித்துக் கொண்டிருக்கலாம்.... யாரும் ஆட்சேபிக்க மாட்டார்கள்.

ஃ ஃ ஃ

''ஆந்திராவுக்கு விரோதமாக மகாராஷ்டிரமும், மைசூரும் ஆறுகள் உபயோக விஷயத்தில் சதி செய்கின்றன. இதைக் கண்டிக்கும் முறையில் சட்டசபையிலுள்ள நாம் அனைவரும் நம் அங்கத்தினர் பதவிகளை ராஜிநாமா செய்ய வேண்டும்'' என்று ஹைதராபாத் சட்டசபைக் கூட்டத்தில் ஒரு காங்கிரஸ் அங்கத்தினர் முழங்கியிருக்கிறார். ஆந்திர ஒற்றுமையைக் காட்டும் சரியான நேரம் வந்து விட்டது என்றும் அவர் டில்லிக்கு எச்சரிக்கை தந்து, ஆந்திரத்துக்குப் போர்க் கவசம் மாட்டியிருக்கிறார். இதைப் பார்க்கும்போது இன்று சண்டை சீனாக்காரன்மீது அல்ல, அருகிலுள்ள மைசூர், மகாராஷ்டிரக்காரர்கள் மீது என்றுதான் தோன்றுகிறது. நம்மை ஆண்டவன்தான் காப்பாற்ற வேண்டும்!







# ராஜாஜி-சோமு

எழுதும்

# முதல் மூவர்

என்கிற தொடர் கட்டுரையில் ராஜாஜி அவர்கள் வைஷ்ணவ முதலாழ்வார்கள் பாடிய பாக்களிலிருந்து எடுத்து உரையும் விளக்கமும் எழுதி வருவார். பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் இவர்கள் பாடிய வெண்பாக்களில் தமிழ்ப் பண்பும் பக்தியும் தத்துவமும் எல்லாம் ஒன்று கூடி மக்களுக்கு அறிவும் ஆனந்தமும் தரும்.

# கல்கி

புத்தாண்டு மலரில்

ஆரம்பமாகிறது



★

ஸ்ரீ கே. ஆர். சந்திரன் அவர்கள் குமாரி சௌபாக்கியவதி துர்கா வுக்கும், சிரஞ்சீவி டி. வெங்கட் ராமன் B. Sc., (Agri) அவர் களுக்கும் சமீபத்தில் சென்னையில் திருமணம் வெகு விமரிசையாக நடைபெற்றது.

வாழ்க, மணமக்கள்!

★


உற்சாகமளிக்கும் குளுமையான புத்துணர்ச்சியை அனுபவிக்க

# தினமும் கால்கேட் மென்தாலேடெட் ஷேவிங் க்ரீமினால் க்ஷவரம் செய்துகொள்ளுங்கள்!




அந்த அதிகாரி போன்ற, சுறுப்பான தோற்றம்...அதற்கு உறுதுணையாயிருப்பது கால்கேட் மென்தாலேடெட் ஷேவிங் க்ரீம் ஏனெனில், கால்கேட் மென்தால் சேர்க்கப்பட்டுள்ளதால், அந்த அடர்த்தியான குளுமையான க்ரீம் போன்ற லேதர் சுத்தமான சுகமுள்ள க்ஷவரத்தைப் பெற சருமத்தை பதமாயும் தாடியை மிருதுவாயும் ஆக்குகிறது. நீங்கள் எப்பொழுதும் கண்டிராத, உற்சாகமளிக்கும், குளுமையான புத்துணர்ச்சியுடன் கூடிய க்ஷவரத்தை அளிப்பது கால்கேட் ஒன்றுதான்!




மிக சிக்கனமானது கால்கேட் ஷேவ் ஸ்டிக் க்ஷவரத்திற்கும் சிக்கனத்திற்கும் பிரபலமானது.



# வானம்பாடி

காந்தன்

திரைக் கதையின் மர்மமும், குழப்பமும், வலிய ஏற்படுத்தப்பட்ட 'சஸ்பென்ஸ்'களுமாகச் சிறிது நம்மைக் குழப்பினாலும், ஏற்கெனவே நமக்குத் தெரிந்த கதைதான். ''முத்துமண்டபம்,'' ''காத்திருந்த கண்கள்'' இந்த இரண்டு படங்களும் சேர்ந்ததுதான் ''வானம்பாடி.''

தேவிகா இரட்டை வேடம் தாங்கி இரண்டு பாத்திரங்களையும் திறம்படச் சமாளித்திருக்கிறார். மீனாவின் பயந்த தோற்றத்தில் இருந்த போது அவர் முகத்தில் கண்ட கலவரத்துக்கும், கௌசல்யாவின் அலட்சிய பாவத்தில் கண்ட செருக்குக்கும் தான் எத்தனை வேற்றுமை! நீதிமன்றத்தில் தன்னைப் பற்றிய உண்மையைக் கூறித் தனக்கு வாழ்வளிக்கும்படி கண்ணீருக்கு இடையில் மாமனைக் கெஞ்சுவது மிகவும் உருக்கமா யிருக்கிறது.

கண்ணீர் விடுவதும், கடிந்து கொள்வதும் கடைசியில் இழுத்த இழுப்புக்கு வருவதும் ராஜேந்திரனுக்குப் புதியன அல்லவே!

தணிகாசலத்தின் தாயார், மீனாவை அனாதை என்று ஏசிப் பேசி, அவள் பூஜைக்காகக் கொண்டு வந்த பூவைத் தட்டிக் கொட்டுவதில் என்ன உருக்கம் இருக்கிறதோ தெரியவில்லை. மீனாவை அழ வைத்துப் படத்தை உருக்கமாக்குவதற்காக இந்தக் கொடுமையைச் சேர்த்திருக்கிறார்களோ!

திரைக் கதைக்கு வட நாட்டைத் தேடி ஓடும் நம் படாதிபதிகள், குழந்தைப் பாத்திரங்களுக்கும் வட நாட்டையே எதிர்பார்ப்பது வழக்கமாக இருந்து வருகிறது. மாஸ்டர் கமலஹாஸன் அந்தக் குறையைப் போக்குவதோடு நன்றாகவும் நடித்திருக்கிறான். அவனுக்கு இன்னும் கொஞ்சம் அதிகமாகவே 'சான்ஸ்' கொடுத்திருக்கலாம்.

புஷ்பலதாவை ''வானம்பாடி''யில் அதிகமாகவே பார்க்க முடிகிறது. டி. ஆர். ராமச்சந்திரனுக்கு ஜோடியாக வந்து நன்றாகவே நடிக்கிறார். டி. ஆர். ராமச்சந்திரனின் நடிப்பு மிக இயல்பாகவும் நன்றாகவும் இருக்கிறது.

ஜாவர் சீதாராமன் வக்கீலாக வந்து நம் உள்ளத்தில் இடம் பெற்று விடுகிறார்.

மீனாவின் கல்யாணத்தை நிறுத்தும் மனோகர் அவளைத் தீர விசாரியாமல் வழக்குத் தொடர்வது சற்று விந்தையாக இருக்கிறது. (மீனாவை நிதானமாக விசாரித்திருந்தால் திரைக் கதையின் 'குட்டு' வெளிப்பட்டு மர்மமும் மறைந்து போயிருக்குமே!)

இரட்டைப் பிறவியைக் கண்டு குழம்பிக் குழம்பித் தவிக்கும் கதை எத்தனையோ தமிழ்ப் படங்களில் வந்து விட்டதே என்று எல்லோரும் நினைத்து அலுத்துக் கொள்வார்கள். (ஆனால் நவரஸங்களையும் சுவைத்து ரசிப்பவர்களுக்கு அலுத்துக் கொள்வதற்கும் ஏதாவது வேண்டும் அல்லவா?)

''வானம்பாடி'' என்ற தலைப்புக்கும் படத்துக்கும் என்ன சம்பந்தம் என்று என்னைக் கேட்காதீர்கள். படம் என்றால் அதற்கு ஒரு பெயர் இருந்துதானேயாக வேண்டும்! ''ஷேஷ் பரீஷ்'' என்ற வங்காளிக் கதையைத் தழுவியதாகக் கூறப்படுகிறது. வங்காளக் கதை யென்ற பெருமையைத் தவிரத் தமிழ்க் கதையில் இல்லாத புதுமையோ புரட்சியோ எதுவும் இல்லை.

கண்ணதாசனின் பாடல்கள் யாவும் நன்றாக இருக்கின்றன. என்றாலும் ''கங்கைக் கரைத் தோட்டம்'', ''கல் தோன்றி மண் தோன்று முன்'', ''கடவுள் மனிதனாய்ப் பிறக்க வேண்டும்'', ''ஊமைப் பெண் ஒரு கனவு கண்டாள்'', ''தூக்கணாங் குருவிக் கூடு'' என்னும் பாடல்களின் கருத்தும் இசையும், குறிப்பாக மனத்தில் பதிகின்றன.

படத்தின் ஒளிப் பதிவு பாராட்டத் தக்க முறையில் அமைந்திருக்கிறது.

கே. முருகேசனின் தயாரிப்பான ''வானம் பாடி'' நன்றாய்ப் பாடுகிறது!

# அறிவுக் கனலே, அருட்புனலே!

ரா. கணபதி

இந்து தர்மத்தின் உத்தமமான அம்சங்கள் என்று தாங்கள் கருதுவதைக் காத்து, அதன் 'குறுகிய மனப்பான்மை'யைப் போக்கடித்து அதனை 'விசாலமான'தாக்க வேண்டும் என்பதுதான் பிரம்ம சமாஜத்தின் நோக்கம். உண்மையிலேயே அக்காலத்து சநாதனிகள் மிகவும் இளக்கமற்றவர்களாக இருந்ததாலும், முக்கியமாக, பூர்விக சமூகப் பகுப்பு நியதிகளைத் தீவிரமாகப் பின்பற்றியதாலும்தான் படித்தவர்கள் இந்து மதத்தைப் புறக்கணித்ததற்கும், படிக்காதவர்கள் கூட்டம் கூட்டமாகக் கிறிஸ்துவ மதத்தில் சேர்ந்ததற்கும் இடமுண்டாயிற்று.

இந்து மதம் என்பது எளிதில் இலக்கணம் கூறவொண்ணாதது. வேதம் கூறும் வேள்விகள், நீத்தார் கடன் முதலிய கர்மாநுஷ்டானங்கள்; ஞான மயமான உபநிஷதங்கள் முக்கியமாகக் கூறும் ஆத்ம விசாரம், நிர்க்குணப் பிரம்ம உபாசனை; பக்தி மயமான புராணங்கள் கூறும் தெய்வீக சரிதங்கள்; மந்திர தந்திர சாஸ்திரங்கள் கூறும் வழிபாட்டு முறைகள்; யோக சாஸ்திரம் விதிக்கும் சாதனைகள்; கர்மத்துக்கு முதலிடம் அளிக்கும் தர்ம சாஸ்திரங்கள் கூறும் ஆசாரங்களும், சமூக நீதிகளும்—இவை யாவும் பின்னிப் பிணைந்தது இந்து சமயம். இவற்றில் ஒன்றுக்கொன்று ஆங்காங்கே உரசல்களும், முரண்பாடுகளும் இருப்பதாகவும் தோன்றும். ஒருவன் இந்து மதத்தைச் சேர்ந்தவன் என்னும் போது அவன் இவை யாவற்றையும் அறிந்திருக்கிறான் என்று நிச்சயமாகச் சொல்ல முடியாது. இப்படி ஒருவரும் பூரணமாக எல்லாத் துறைகளையும் அநுஷ்டிக்காத மதமாக இந்து சமயம் இருக்கும் போது அதில் காலத்துக்கேற்ப மாறுதல்கள் செய்வதில் தவறில்லை என்று சீர்திருத்த வாதிகள் கருதினர். நிரந்தர தர்மங்கள் வேறு, யுக தர்மங்கள் வேறு என்பதாகவும் யுக தர்மங்கள் முன்பே பலமுறை மாறியிருக்கின்றன என்றும் கூறினர். களை எடுத்தே பயிரைக் காக்க வேண்டும் என்றனர். ஆனால் சநாதனிகள், எது களை எது பயிர் என்று நிர்ணயிப்பது அவரவர் மனோபாவத்தைப் பொறுத்த விஷயமாகி விடும் என்றும், இன்று ஒரு சிலர் சில தத்துவங்களைக் 'களை'யாக எண்ணிக் களைந்தால், எதிர்காலத்தில் யார் யார் எந்தெந்தக் கோட்பாடுகளைக் கைவிடுவார்கள் என்று சொல்ல முடியாமல் பயிரே நாசமாகிவிடும் என்றும் கூறினார்கள். தற்போது இந்து மதத்தின் முக்கியமான அம்சமாக எவை இருக்கின்றனவோ அவற்றை இழக்கக் கூடாது என்று உறுதியாக நின்றனர் சநாதனிகள். சநாதனிகளின் கருத்தில் உண்மை இல்லை என்று நாம் சொல்ல முடியாது. எனினும் அவர்களின் தீவிரம் காரணமாகவே, தாழ்த்தப்பட்ட உணர்ச்சி கொண்ட பலரும், அவர்களைத் தாழ்த்தி வைத்திருக்கிறோம் என்று வருந்திய சிலரும் இந்து மதத்தைப் புறக்கணித்தார்கள் என்பதையும் நாம் மறுப்பதற்கில்லை. தர்ம சாஸ்திரங்களின் சமூக நீதிகள் யாரையும் உயர்வு — தாழ்வு உணர்ச்சி கொள்ளாமல் தொழில் பிரிவினை செய்து கொண்டு பற்று இன்றிக் கர்மங்களைப் புரியத்தான் விதிக்

இன்றன என்று நாம் சொல்லி விடலாம். என்றாலும், நடைமுறையில் உயர்வு தாழ்வு மனப்பான்மைகள் ஏற்படவில்லை என்று நாம் எங்கேனும் கூற முடியுமா?

முக்கியமாக இந்த ஓர் அம்சத்தைத்தான் சென்ற நூற்றாண்டில் மேல் நாட்டினர் எடுத்துக் காட்டி மக்களின் மனசில் கொந்தளிப்பை ஏற்படுத்தினர். சமூகத்தில் பின் தங்கிய ஏராளமான மக்கள் கிறிஸ்துவ சமயத்தைத் தழுவலாயினர். அதைத் தடுப்பது உண்மையிலேயே மதாபிமானம் உள்ளவர்களாலும் இயலாமற் போயிற்று. மதம் என்றால் அதில் எல்லா தர்மங்களும் எல்லோருக்கும் பொதுவாக இருக்க வேண்டும் என்ற அபிப்பிராயம் படித்தவர்களிடையே ஏற்படத் தொடங்கியது. இதோடு மட்டுமின்றி, சென்ற இதழில் கூறியது போல, இந்து மதத்தில் சேர்ந்துவிட்ட கட்டுக் கதைகளும், சில அநாகரிகப் பழக்க வழக்கங்களுமே அதன் ஜீவ நாடியோ என்பது போல ஒரு பிரமையும் அவர்களுக்கு ஏற்பட்டது.

இந்து மதத்தினர் என்ற பெயரில் தாங்கள் சீர்திருத்தங்கள் செய்ய இயலாது என்பதைக் கண்டு கொண்ட சீர்திருத்தவாதிகள் தனி ஸ்தாபனங்களாகவே பிரிந்து செயலாற்ற நேரிட்டது. இவற்றில் ஒன்றே பிரம்ம சமாஜம்.

இந்து சமயத்தில் வேறு பல மாறுபாடுகளும் செய்துகொண்டவர்கள் பிரம்ம சமாஜத்தினர். பல தெய்வங்களை வழிபடுவது, விக்கிரக ஆராதனை, ஆண்டவன் அவதரிக்கிறான் என்ற நம்பிக்கை, குருமுகமாகவே உபதேசம் பெற வேணும் என்ற கோட்பாடு, வேத வாக்கியங்களை மறுக்காது ஏற்பது இவை யாவற்றையும் பிரம்ம சமாஜத்தினர் எதிர்த்தனர். ஜாதி பேதங்களை ஒழிப்பது, பெண் கல்வி, விவாகப் பருவத்தை உயர்த்துவது, விதவா விவாகம் முதலியன அவர்களது சமூக நிர்மாணத் திட்டத்தின் அம்சங்களாகும். ராஜா ராம்மோகன் ராய்தான் பிரம்ம சமாஜத்தின் தோற்றுவாய்க்குக் காரண புருஷர்.

இந்து மதம், இஸ்லாம், பௌத்தம், கிறிஸ்துவம் முதலிய பல மத நூல்களைப் படித்திருந்த ராஜா ராம்மோகன் ராய் (1774–1833) எல்லாவற்றிலும் சிறிதுசிறிதை இணைத்து, பிரம்மசமாஜக் கோட்பாடுகளை உருவாக்கினார். பிரம்ம சமாஜத்தினர் உருவற்ற, ஆனால் குணங்களுள்ள, கடவுளை வழிபட்டனர்.




கல்வியும் செல்வாக்கும் மிக்க பலர் பிரம்ம சமாஜத்தில் சேர்ந்தார்கள். கவீந்திரராகிய ரவீந்திரநாத தாகூரின் தந்தையாரான தேவேந்திர நாத தாகூர் (1817 – 1905) ராம்மோகன் ராய்க்குப் பின் சமாஜத்தின் முக்கியஸ்தர் ஆனார். அவர் உபநிஷதங்களில் ஆழ்ந்து ஊறியவர். ஒப்பற்ற உள்ளத் தூய்மையுடன் வாழ்ந்து வந்த அவர் 'மகரிஷி' என்றே போற்றப் பெற்றவர். பிரம்ம சமாஜத்தின் பிரதான புருஷராகக் கருதப்பெற்ற கேசவ சந்திரசேனர் (1838–1884) கிறிஸ்துவக் கோட்பாடுகளில் மட்டுமின்றி, கத்தோலிக்கரது போன்ற வழிபாட்டுக் கிரமத்திலும் தனி ஆர்வம் காட்டினார். பிரம்மசமாஜத்தின் வழிபாட்டு முறையை மாதா

கோயிலின் பிரார்த்தனை — பிரசங்க பாணியில் அமைத்தார்.

முக்கியமாக, பகுத்தறிவு மூலமே மத உணர்வைப் பூர்த்தி செய்ய முனைந்த ஒரு ஸ்தாபனம் பிரம்ம சமாஜம். எனவே இளைஞர்களை அது கவர்ந்ததில் வியப்பேதும் இல்லை. நரேந்திரனும் அதில் சேர்ந்தான்.




அநுபவ பூர்வமாக முனிவர்களும், ரிஷிகளும், வேறு பல மகான்களும் உணர்ந்த இந்து வேதாந்த மதத்தின் நிலைக்களனை பரமஹம்ஸர் அந்தக் காலத்தில்தான் அந்த அநுபவ வயலில் விதைக்க வேண்டிய வித்தைத் தேடித் தேடித் தவித்துக் கொண்டிருந்தார். அந்த வித்தாகிய நரேந்திரனோ அறிவைக் கொண்டே சத்தியத்தை நிர்ணயிக்கப் புகுந்த பிரம்ம சமாஜம் என்ற நிலத்தில் ஊன்றிக் கொள்ள முயன்றான். காந்த சக்தியும், திட்பமான புத்தியும், ஆழ்ந்த உணர்ச்சியும், அயராத ஊக்கமும் படைத்த கேசவ சந்திர சேனரைப் போலவே தானும் சமாஜத்தின் கொள்கைகளைப் பரப்ப வேண்டும் என ஆவல் கொண்டான் நரேந்திரன்.

என்றாலும் நாள்பட நாள்பட பிரம்ம சமாஜம் அவனுக்குப் போதவில்லை. அந்த நிலத்தில் முளைக்க முடியாத வித்தாக அவன் இருந்தான். உலகுக்கு மூலகாரணமாகிய பரம் பொருள் உலக மாந்தரின் துயர் துடைப்பதற்காக உருவெடுத்து வந்து உதவும் என்ற நம்பிக்கை மிகமிக லேசாக அவனுக்குத் தோன்றிற்று. அறிவினால் மட்டும் கடவுளைக் கிரகிக்க முடியாது; அதனிடம் அன்பும் செலுத்த வேண்டும் என்ற உணர்வு சிறுகச் சிறுக நரேந்திரனிடம் ஏற்படலாயிற்று. 'கடவுளுக்கும், மனிதனுக்குமுள்ள தொடர்பென்ன? அந்தத் தொடர்பை நிலைநிறுத்திக் கொள்ள என்ன செய்ய வேண்டும்?' என்ற கேள்விகளுக்கு பிரம்ம சமாஜம் அளித்த விடைகளில் அவன் திருப்தி காணவில்லை. அறிவினால் மட்டும் ஆராய்ச்சி புரியாமல் அதிகமாகத் துதிப் பாடல்களைப் பாடிப் பிரார்த்தனை புரிந்தான். அப்போது நரேந்திரனுடைய உணர்ச்சிகளுக்கு ஓர் ஆறுதல் கிடைத்தது. எனினும் அதுவும் அவனுக்குப் போதவில்லை. இந்தப் பிரார்த்தனைகளின் பயன் என்ன என்பதை யாரும் சொல்லக் காணோம். ஆகவே, பிரம்ம சமாஜம் கடவுள் தரிசனத்துக்கு வழி வகுக்காது என்று அவனுக்குத் தோன்ற ஆரம்பித்தது. 'கடவுள் தரிசனம்' என்று சொல்வதால் உருவு படைத்த கடவுளை நரேந்திரன் இதய பூர்வமாக நம்பத் தொடங்கிவிட்டான் என்று நிச்சயமாகச் சொல்லிவிட முடியாது. கடவுள் அநுபவத்தையே கடவுள் தரிசனமாகக் கருதினான் அவன். எனினும் அவன் இதயவானின் ஒரு மூலையில் கடவுளைக் கண்களால் காண முடியுமா என்ற அவாவும் பிஞ்சு மேகமாக எழும்பத் தொடங்கியிருந்ததோ என்னவோ? இதனால்தான் 'கடவுளைக் கண்டவர் உண்டா?' என்று அவன் ஏங்கத் தொடங்கினானோ என்னவோ?

சமாஜிகளில் கடவுளைக் கண்ட பெரியோர் யாரேனும் இருக்கிறாரா என்று தேடலானான் நரேந்திரன். 'இல்லையெனில் சமாஜக் கொள்கையால் கடவுளைக் காணமுடியாது என்றுதானே பொருள்?' என்றும் அவனது சிந்தனை படர்ந்தது.

கடவுளைக் காண உதவாத மதம் தனக்குத் தேவையில்லை என்ற எண்ணத்துடன் மகரிஷி தேவேந்திர நாத தாகூரைக் காணப் புறப்பட்டான் நரேன். முன்பே சில நண்பர்களுடன் தேவேந்திர நாதரை அவன் கண்டதுண்டு. அப்போது அவர் அவனை ஆழ்ந்து தியானிக்கும்படி நல்லுரை கூறியிருக்கிறார். 'அவர் அப்படித் தியானம் செய்து பரம்பொருளை கிரகித்திருப்பாரா?' என்ற வினா எழவேதான் அவரை மீண்டும் நாடினான் நரேந்திரன்.

கங்கைத் துறையிலே, ஒரு படகையே ஆசிரமமாக்கி அதில் வாழ்ந்து வந்தார் தேவேந்திரநாத தாகூர். அவரை ஒரே ஆவேச மயமாக அணுகினான் நரேன்.

'இவர் கூறும் விடையில்தான் தன்னுடைய மதமே — வாழ்க்கையே — இருக்கிறது' என்ற எண்ணம் அவன் உள்ளம் முழுவதையும் அழுத்த, அந்த அழுத்தத்தின் கனமையிலேயே புறப்பட்ட கேள்வி அவன் வாயில் அக்கினிக் கொழுந்தான உச்சாரணத்துடன் புறப்பட்டது.

''மஹாசய! தாங்கள் கடவுளைக் கண்டதுண்டா?'' என்று படபடப்புடன் தேவேந்திரநாத தாகூரைக் கேட்ட நரேந்திரனின் இதயத்தில் கனன்ற கொழுந்து வாக்கில் ஜொலித்ததோடு அவன் கண்களிலும் ஒளி வீசிற்று. அறிவுக்கனலாக ஒளிர்ந்த அந்த அழகிய பெருங்கண்களையே நோக்கினார் தேவேந்திரர். ''என் குழந்தாய்! உனக்கு ஒரு யோகியின் கண்கள் இருக்கின்றன''— என்று கூறினார்; மௌனமானார்.

நரேந்திரனுடைய நம்பிக்கை அடி மட்டமாகச் சரிந்தது. அவன் கேட்ட கேள்விக்கான விடை அவரிடமில்லை.

வேறு பல மதத் தலைவர்களிடம் ஓடினான். ஒவ்வொருவரிடமும் அதே அதிசயமான மாபெரும் கேள்வியைக் கேட்டான்:

''நீங்கள் கடவுளைக்கண்டதுண்டா?''

யார் அந்தக் கேள்விக்கு நேரிடையாக விடை கூற முடியும்?

வெடி மருந்து உள்ளத்தில் வெடிப்பது போல இனம் தெரியாத ஐயங்கள் நரேந்திரனைத் தகர்த்தன! அந்த ஐயங்களைத் தீர்க்கக் கூடியது யார்?

திடீரென்று நரேந்திரனுக்கு நினைவு வந்தது. நம் நாடு செய்த புண்ணியத்தால் அந்த நினைவு வந்தது. பேராசிரியர் ஹேஸ்டி, பரவசத்தைப் பற்றி விளக்கும்போது குறிப்பிட்ட பரமஹம்ஸ ராமகிருஷ்ணர் தன் கேள்விக்கு விடை கூறுவாரா?

ஹேஸ்டி கூறியது மட்டுமல்ல; ராமச் சந்திர தத்தர் என்று நரேந்திரனுக்கு ஓர் உறவினர். அவர் கூட பரமஹம்ஸ மகாபுருஷரைப் பற்றி நிறையச் சொல்லியிருக்கிறார். கலியாணம் கார்த்திகை எல்லாம் வேண்டாம் என்று நரேந்திரன் எண்ணுவது அவருக்குத் தெரிந்தபோது அவர் அவனிடம் ''நீ ஆன்மீக வாழ்க்கையை விரும்பினால் தக்ஷிணேசுவரத்து ராமகிருஷ்ணரைத் தரிசித்து வா'' என்று கூறியிருக்கிறார்.

தக்ஷிணேசுவரம் செல்லாமலே அவரைத் தரிசித்தும் இருக்கிறான் நரேன். 1881ம் ஆண்டு நவம்பர் மாதத்தில் சுரேந்திரநாத் மித்ரா என்ற பக்தரின் இல்லத்துக்குப் பரமஹம்ஸர் விஜயம் செய்தார். மித்ராவுக்கு நரேந்திரன் பழக்கமானவன். எனவே அன்று துதிப் பாடல்கள் பாடுவதற்காக நரேந்திர நாதனையும் தம் வீட்டுக்கு அழைத்திருந்தார் சுரேந்திர நாதர். நரேந்திரனும் அருமையாகப்பாடினான். அறிவினால் கடவுள் தத்துவத்தை அவன் தேடினான் எனினும் அவனையுமறியாமல் இதய பூர்வமாக ஆண்டவனைத் தொழ இசை அவனுக்கு வகை செய்தது. ஐயங்களில் அறிவு செறியபோதே, சங்கீதம் மட்டும் அவன் அகத்தை ஒன்று சேர்த்துப் பிடித்துக் காத்து வந்தது. இன்றைக்கும் அப்படித்தான் இதயம் திறந்து பாடினான் நரேந்திரன். பாட்டைக் கேட்டு மகிழ்ந்த பரமஹம்ஸர் அவனைப் பாராட்டினார். அவனைப் பற்றி அன்புடன் விசாரித்து விட்டு அவனைத் தக்ஷிணேசுவரம் வருமாறு அழைத்தார்.

அந்த அழைப்பு இன்று நரேந்திரன் காதுகளில் மீண்டும் ஒலித்தது.

வழி தெரியாமல் தவித்த நவீன பாரதத்துக்குப் புராதன பாரதத்தின் அருள் அழைப்புக் கேட்டு விட்டது.

அறிவுக் கனலுக்கு அருட்புனலின் அழைப்புக் கேட்டு விட்டது.

''நீங்கள் கடவுளைக் கண்டதுண்டா?'' என்ற மகத்தான வினவைச் சுமந்து கொண்டு நரேந்திரநாதன் தக்ஷிணேசுவரத்துக்குப் புறப்பட்டான்.

ஃ ஃ ஃ

கல்கத்தாவிலிருந்து நரேந்திரன் தக்ஷிணேசுவரம் செல்வதற்குள் அங்கு வாழ்ந்த தவயோகியின் திவ்விய சரித்தை நாம் சற்றுச் சுவைப்போம். அவரின் மகிமையால்தான் நரேந்திரன் விவேகாநந்தரானார் என்பதால் விவேகாநந்தரின் வரலாறு பரமஹம்ஸரின் வாழ்க்கை வருணனையின்றி நிறைவு பெறாது. பாலை நீரிலிருந்து பிரிப்பது போல அனாத்மாவிலிருந்து ஆத்ம தத்துவங்களைப் பிரித்த ஹம்ஸம் பரமஹம்ஸ ராமகிருஷ்ணர். இப்படிப் பிரிப்பதற்கே 'விவேகம்' என்று பெயரிட்டு, சாதனையின் முதற்படியாக வைத்தார் ஆதிசங்கர பகவத் பாதர்கள். அந்த விவேகத்தைப் பெற்று அதிலேயே ரமித்தவர் விவேகாநந்தர். எனவே பரமஹம்ஸர், விவேகாநந்தர் என்ற பெயர்களே ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்துள்ளன. அவ்வாறே அவ்விருவரது பெருமை பொருந்திய சரிதங்களும் பிணைந்துள்ளன. ஒரே ஹிமாசலத்தில் பிறந்து, முதலில் பிரிந்தோடிப் பின்னர் ஒன்றோடொன்று கலக்கும் யமுனையும் கங்கையும் போல ஒன்றிலிருந்தே இரண்டாகப் பிரிந்து, ஒன்று கூடியவர்கள் ராமகிருஷ்ணரும் விவேகாநந்தரும். யமுனையையும் கங்கையையும் பிரிப்பது எந்த ஹம்ஸத்தாலும் முடியாத செயலாகும். அதைப் போலவே விவேகானந்தர், பரமஹம்ஸர் இவர்களது வரலாறுகளையும் பிரிக்க இயலாது. பரம் பொருளின் கருணையையும், ஞானத்தையும் பிரிக்க யாரேனும் முயலுவார்களோ? (தொடரும்)



# குருவியின் குழத்தனம்

ஜெயலக்ஷ்மி

''என்ன, சேகர்! ரெடியா?''

''ஓ! நான் ரெடி அத்திம்பேர்!''

''நானும் ரெடி அத்திம்பேர்!''

''சரி. இரண்டு பேரும் ஏறிக்கோங்கோ!''

சொல்லி வாய் மூடவில்லை. சேகர் பின் பக்கம் ஏறி உட்கார்ந்து கொண்டு விட்டான். பாபு முன்பக்கம் ஏறி உட்கார முயன்றான். அவனைத் தூக்கிப் பொருத்தமாக உட்கார வைத்த ராமச்சந்திரன் தானும் சைக்கிளில் ஏறி உட்கார்ந்து கொண்டு உட்பக்கம் பார்வையைச் செலுத்தினான்.

குழந்தையுடன் வாசலுக்கு வந்து கொண்டிருந்தாள் சாந்தி. குழந்தை ஸ்ரீதர் தன் பிஞ்சுக் கையை அசைத்து 'டா...டா...' கூறினான்.

''வரட்டுமா, சாந்தி?'' என்று வினவியபடி பெடலை அழுத்தினான் ராமச்சந்திரன்.

''போயிட்டு வரேன், அக்கா!'' என்று உரக்கக் கத்தினான் சேகர்.

''அத்தே! போயித்து வரேன்....'' பாபு சேகரைவிட இரைந்து கூவினான்.

சைக்கிள் கண்களுக்கு மறைகிற வரையில் பார்த்துக் கொண்டே நின்றாள் சாந்தி. எதிர் வீட்டிலும் இப்படியொரு 'டாடா' படலம் நடந்து கொண்டிருந்தது. ஆனால் இதற்கும் அதற்கும் எவ்வளவு வித்தியாசம் இருந்தது! குழந்தையை முன்பக்கம் வைத்துக் கொண்டு அந்த வீட்டிலிருந்தும் ஓர் ஆண் மகன் மனைவியிடம் விடைபெற்றுக் கொண்டு சென்றான். குழந்தையும் அம்மாவுக்கு 'டாடா' சொல்ல மறக்கவில்லை. அந்தச் சைக்கிள் அப்பால் சென்றதும், லட்சுமி விழிகளில் பெருமிதம் பொங்கச் சாந்தியை நோக்கவும் தவறவில்லை. பதிலுக்குச் சாந்தியும் ஒரு புன்னகை செய்து வைத்தாள்.

''வரேன், உள்ளே எல்லாம் அப்படி அப்படியே கிடக்கு....'' என்று சொல்லி விட்டு உள்ளே போய் விட்டாள் எதிர் வீட்டிலுள்ள லட்சுமி.

சாந்திக்கும் அப்படிச் சொல்லிக் கொண்டு உள்ளே போக ஆசைதான். ஆனால் அதற்கு அவசியமில்லை! வேலைகளைக் கவனித்துக் கொள்ள உள்ளே சமையற்காரர் இருக்கிறார். மேற்பார்வைக்கு அம்மா மன்னி இருவர் இருக்கிறார்கள். அதனால் சாந்தி வெளித் தாழ்வாரத்திலேயே நின்றாள். இதயத்திலே கரை காணாத ஏக்கம். அது இதழ்களில் துயர ஏமாற்றமாகப் பரிணமித்து அவற்றைத் துடிக்க வைத்தது போதாதென்று துயரமாக உருவெடுத்து விழிகளையும் புனலாட வைத்தது. பற்களால் உதட்டை அழுக்கிக் கொண்டாள். சுரக்கும் விழிநீரைத் தடுத்து நிறுத்தக் குழந்தை ஸ்ரீதரின் முகத்தைப் பார்த்தாள் அவள். அவன், ''அம்மா, டாடா!'' என்றான் மழலை மொழியில்.



''இப்போ வந்துடுவா....!'' என்று கூறிக் குழந்தையை இறுக அணைத்துக் கொண்டாள் சாந்தி. இந்தச் சமயம் இரண்டு குருவிகள் தங்களுடைய சின்னஞ்சிறிய அலகுகளில் காய்ந்த புல்லின் சருகுகளைக் கவ்விக்கொண்டு வந்தன. சாந்தி நின்று கொண்டிருந்த இடத்துக்கு உயரே மூலைப்பகுதியில் இரண்டு குருவிகளும் அந்தக் காய்ந்த புல்லின் சருகுகளைச் செருகின. ஒன்று மேலேயிருக்க, மற்றொன்று மேலேயிருந்து நழுவிக் கீழே நின்று கொண்டிருந்த சாந்தியின் தலையில் விழுந்தது.

'அட, சனியன்!' என்று கூறி அதைக் கீழே தட்டிவிட்டு நகர்ந்து நின்றாள் சாந்தி.

'குபுக்'கென்று மேலேயிருந்து கீழே பறந்து வந்த ஆண் குருவி சாந்தி தட்டிவிட்டிருந்த சருகை வாயில் கவ்விக் கொண்டு, 'விர்'ரென்று மேல் நோக்கிச் சென்றது. அடுத்த விநாடி மறுபடியும் அந்தச் சருகு கீழேதான் விழுந்தது. ஆனால் அந்த ஆண் குருவி கொஞ்சமாவது சளைக்க வேண்டுமே! மறுபடியும் பறந்து வந்தது கீழே. சருகை எடுத்துப் போய் மேலே ஒழுங்காக வைத்தது. பிறகுதான் பறந்து வந்து சன்னல் கம்பியில் உட்கார்ந்து ஓய்வெடுத்துக் கொண்டது.

அதையே கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தாள் சாந்தி. பெண் குருவியும் மேலேயிருந்து பறந்து வந்து ஆணின் பக்கத்தில் உட்கார்ந்துகொண்டது. ஆண் குருவி திரும்பிப் பார்த்து விட்டுக் குதித்துக் குதித்து நடந்து கொண்டே பெண் குருவியின் பக்கத்தில் நெருங்கி வந்தது. பெண் குருவி விசுக்கென்று பறந்து கம்பியின் மறு மூலைக்கு வந்து உட்கார்ந்தது. ஆண் குருவி மறுபடியும் பெண் குருவியைத் தாஜா செய்ய ஆரம்பித்தது. ஆனால் பெண் குருவி அதற்கு இடம் தராமல் விர்ரென்று பறந்து சென்று விட்டது எங்கோ! ஆண் குருவியும் வேறு வழியின்றி அதைப் பின்தொடர்ந்து சென்றது.

புரிந்தும் புரியாத நிலையில் ஏக்கப் பெருமூச்சுடன் பின்பக்கம் திரும்பினாள் சாந்தி. அங்கே வேலைக்காரத் தாயம்மா வீட்டுக்குப் போகிற முஸ்தீப்புடன் நின்று கொண்டிருந்தாள். கையிலே அலுமினியம் அடுக்கில் பழையதும் குழம்பும் இருந்தன.

''குருவியை வேடிக்கை காட்டுகிறியாக்கும் மகனுக்கு....'' என்று கேட்டுத் தன் காவிப் பற்களைக் காட்டி முறுவலித்தாள் தாயம்மா.

''ம்.... இருந்தாலும் பெண் குருவிக்கு எவ்வளவு ராங்கிங்கிறே தாயம்மா?'' என்றாள் சாந்தி குழந்தைக்குரிய வியப்புடன்.

''ராங்கியா?'' என்றாள் தாயம்மாள்.

''ஆமாம், தாயம்மா! நானும் அப்பவே பிடிக்கப் பார்த்துக் கொண்டிருந்தேனே! கடைசி வரையில் அது சம்மதிக்காமலேயே பறந்து போய் விட்டது.''

''அதுக்குச் சொல்றியா! இன்னும் கூடு கட்டி முடிஞ்சிருக்காது! அதனாலேதான் பெண் குருவி விலகி விலகிப் போகிறது...'' படிக்கட்டுகளில் இறங்கி நடந்துகொண்டே வெகு அலட்சியமாகக் கூறினாள் தாயம்மா.

''புரியும்படியாகச் சொல்லேன், தாயம்மா. அப்படி யென்றால்....?'' விடாப் பிடியாக வினவினாள் சாந்தி.

தாயம்மா கூறிய வார்த்தைகள் சாந்தியின் இதய நரம்பைச் சுண்டியிழுத்தன. பனித்த விழிகள் ஒளிர உள்ளே போக ஓர் அடி எடுத்து வைத்தாள் அவள்.

சைக்கிள் மணியின் ஓசை கேட்டது. ராமச் சந்திரன்தான் குழந்தைகளைப் பள்ளிக்கூடத் தில் விட்டு விட்டுத் திரும்பிக் கொண்டிருந் தான். வேகமாக உள்ளே நடந்தாள் சாந்தி.

எதிரே வந்தாள் அவளுடைய அம்மா. ''தாயம்மா போய் விட்டாளாடி? மத்தியா னம் டிபனுக்கு ஒண்ணுமே இல்லே. கொஞ்சம் சேமியா வாங்கிண்டு வந்தால் தேவலே. யாரைப் போகச் சொல்றது...?'' என்று வின வினாள். இந்த வார்த்தைகளைப் பொதுப்படை யாகவே அவள் பிரயோகித்த போதிலும் அவை, அப்போது அங்கே வந்து நின்ற ராமச் சந்திரனைப் பார்த்துச் சொன்னவைதான்.

ராமச்சந்திரனும், ''சேமியா எவ்வளவு வேண்டும்?'' என்று மாமியாரின் முகத்தைப் பார்க்காமலேயே மாமியாரிடம் வினவினான்.





''கூடு கட்டி முடிஞ்சால்தான் பெண் குருவி ஆணுக்கு இணங்குமாம். அது வரைக்கும் சும்மாத்தான் சேர்ந்து வாழுமாம். உண் டாகிறது. முட்டையிடறது. குஞ்சு பொரிக் கிறது எல்லாம் கூடு கட்டின பிறகுதானும். அதுங்களுக்குள்ளே அப்படியொரு கட்டுப் பாடாம். எங்க ஆத்தா சொல்லும். நான் வரேன் கண்ணு. நேரமாச்சு....'' தாயம்மா சென்று விட்டாள்.

''இரண்டு நாளைக்கு இருக்கட்டும். ஒரு வீசை வாங்கலாம்....'' என்று கூறினாள் சாந்தியின் அம்மா.

ஆணியில் மாட்டியிருந்த பைகளில் ஒன்றை எடுத்துக் கொண்டு மறுபடியும் சைக்கிளை எடுத்தான் ராமச்சந்திரன்.

''சாந்தி!'' என்று அழைத்தபடி மாடிப் படி களில் தடதடவென்று இறங்கி ஓடி வந்தாள் சாந்தியின் மன்னி மஞ்சுளா.

''கொஞ்சம் 'லைட் புளு' பிளாஸ்டிக் மணியில் ஆயிரம் வாங்கிக் கொண்டு வரமுடியுமான்னு கேளேன்.... கார் டிரைவரிடம் சொன்னேன். அவன் டார்க் புளுவை வாங்கிக்கொண்டு வந்திருக்கிறான். உன் அண்ணாவுக்கு இதற்கெல்லாம் ஒழியவில்லையாம்.'' மூச்சு விடாமல் பேசினாள் மஞ்சுளா.

உலகத்திலுள்ள வேதனைகளையெல்லாம் முகத்தில் தேக்கியபடி கணவனின் பக்கம் பார்வையைத் திருப்பினாள் சாந்தி.

''ஆயிரம் 'லைட் ப்ளு'தானே? ரைட்!'' என்று கூறிவிட்டுச் சைக்கிளில் போய் ஏறிக் கொண்டான் ராமச்சந்திரன். உள்ளேயிருந்து, ''சார், அப்படியே ஒரு தேங்காய்!'' என்று சமையற்காரன் குரல் கேட்டது.

தலையை ஆட்டிவிட்டுச்சைக்கிளைச் செலுத்தினான் ராமச்சந்திரன். குழந்தை ஸ்ரீதரைத் தொட்டிலில் போட்டு ஆட்டத் தொடங்கினாள் சாந்தி. அவள் மனமும் அந்தத் தொட்டிலைப் போலவே அப்படியும் இப்படியுமாய் வேகமாக ஆடியது.

தான், தன்னுடையது, தன் மனைவி, தன் மகன், தன் குடும்பம், தன் வீடு என்கிற பொறுப்புணர்ச்சி கிஞ்சித்தும் இல்லாத கணவனுடன் பிறந்தகத்தில் தகப்பனாரின் ஆதரவில் வாழ்ந்து வருவதில் இருக்கிற இன்ப, துன்பங்கள் இருக்கின்றனவே, அவை அலாதியானவை; அனுபவத்தால் மட்டுமே அறிந்து உணரக் கூடியவை.

ராமச்சந்திரனையும் குற்றம் சொல்லிப் பயனில்லை. அவன் சின்ன வயது முதலாகவே பொறுப்பு என்பது துளியும் இல்லாமல் தன்னிச்சையாக வளர்ந்து பெரியவனானவன். அவனைத் தட்டிக் கேட்க அவனுக்குத் தகப்பனாரில்லை. தாயோ மகனைக் கஷ்டம் தெரியாமல், அதற்காகத் தன்னையே கஷ்டப்படுத்திக் கொண்டு வாழ்ந்து வளர்த்தவள். எப்படியோ படிப்பில் இருந்த ஆர்வத்தால் பி. ஏ. பட்டம் ஒன்றை உருப்படியாகப் பெற்று விட்டான் ராமச்சந்திரன். வேலையும் கிடைக்காமலில்லை; கிடைத்தது. முழுசாக அந்த வேலையில் இரண்டு வருடங்கள் இருந்தான். நல்ல வேலைதான். முயன்றால் மளமளவென்று முன்னுக்கு வரமுடியும்தான். ஆனால் ராமச்சந்திரனின் குணமே ஒரு தனி ரகம். மேலதிகாரிகளிடம் முறைத்துக் கொண்டு வெளியே வந்து விட்டான்.

இரண்டு வருஷங்கள் உத்தியோக புருஷனாக இருந்ததன் பலன் ராமச்சந்திரனுக்குப் பெரிய இடத்துப் பெண்ணான சாந்தியை மனைவியாகப் பெற முடிந்தது. இதற்கு அவனுடைய உத்தியோகத்தை விட உருவமே அதிகம் உதவியது என்று சொல்ல வேண்டும். ராமச்சந்திரன் நல்ல கவர்ச்சிகரமான ஆண் அழகன். சாந்தியின் ஜாதகத்திலும் கடுமையான செவ்வாய்தோஷம் இருந்தது. அதற்குப் பொருத்தமான வேறு ஜாதகம் கிடைக்காததாலும், அத்தகைய பொருத்தம் ராமச்சந்திரனின் ஜாதகத்தில் இருந்ததாலும் தூரத்துவழியில் உறவினனாகவும் இருந்ததால் ராம சர்மாவின் மாப்பிள்ளையாக முடிந்தது அவனால்.

திருமணமான ஆறுவது மாதம் ராமச்சந்திரனின் தாயார் காலமாகி விட்டாள். ஒன்பதாவது மாதம் வேலையைப் போக்கிக் கொண்டான். வருமானம் இல்லாமல் சென்னையைப் போன்ற ஒரு நகரத்தில் குடித்தனம் நடத்துவது எப்படி? வீட்டைக் காலி செய்து விட்டு மனைவியுடன் மாமனார் வீட்டில் குடியேறினான் ராமச்சந்திரன். நான்கு மாதங்களுக்குப் பிறகு மறுபடியும் ஒரு வேலை கிடைத்தது; குடித்தனமும் போட்டான். பழைய கதைதான். இரண்டே மாதங்களில் மறுபடியும் மாமனார் வீட்டு வாசம். இப்படிப் பல முறை போவதும் வருவதுமாக இருந்த பிறகு, கடைசியாக ஒரு கம்பெனியில் வேலை கிடைத்துக் குடித்தனம் போட மனைவியை அழைத்தபோது, சாந்தி அவனுடன் செல்ல மறுத்து விட்டாள். 'இரண்டு மாதங்களுக்கு வீடு பார்ப்பது, குடித்தனம் நடத்துவது, பிறகு அதைக் காலி செய்து விட்டு ஓடி வருவது; எனக்கு இதெல்லாம் பிடிக்கவில்லை. வேலை ஸ்திரப்படுகிறவரையில் இங்கேயே இருக்கலாம்' என்று கூறிவிட்டாள். அப்போது அவள் ஸ்ரீதரை உண்டாகியிருந்தாள்.

சாந்தி சொன்னபடியே மூன்றும் மாதமே ராமச்சந்திரனுக்கு வேலை போய்விட்டது. அது தானாகத்தான் போய்விட்டதோ அல்லது அவனாகத்தான் போக்கிக் கொண்டானோ, ஆண்டவனுக்குத்தான் வெளிச்சம், மாமனார் வீட்டு வாசம்தான் ஸ்திரப்பட்டுப் போயிற்று. இன்று குழந்தை ஸ்ரீதருக்கு இரண்டு வயதுக்கும் மேலாகி விட்டது. இப்போதெல்லாம் ராமச்சந்திரன் வேலை தேடுகிற வேலைக்கே ஒரு முற்றுப்புள்ளி வைத்துவிட்டான். அவனுக்கு வீட்டிலேயே வேலை சரியாக இருந்தது. வசதியான குடும்பத்தில், பத்துப் பேர்கள் இருக்கிற வீட்டில் ஏவின வேலைக்கு என்றே ஒரு பொறுப்புள்ள ஆசாமி வேண்டித்தானே இருக்கிறது! மறந்துபோன சாமான்கள் வாங்கிவரவும், கடிதங்கள் எழுதவும், போடவும், குழந்தைகளைப் பள்ளிக்கூடத்துக்கும் டாக்டர் வீட்டுக்கும் அழைத்துப் போய் வரவும் ஹார்லிக்ஸ், வாயில் நுழையாத மருந்துகள் போன்ற கிடைப்பதற்கரிய சாமான்களைத் தேடியலைந்து வாங்கி வரவும் ராமச்சந்திரனின் சேவை அந்த வீட்டுக்கு மிகவும் இன்றியமையாததாகத் தானிருந்தது.

முதலில் எல்லோரும் அவனை வேலை ஏவக் கொஞ்சம் சங்கடப்படத்தான் செய்தார்கள். நாளடைவில் அதுவே கொஞ்சங் கொஞ்சமாக நழுவி, பிறகு சர்வ சகஜமாகவும் ஆகிவிட்டது. ராமசர்மாவுக்கு ராமச்சந்திரன் ஒருவன் அதிகப்படியாகி விடமுடியாது. எத்தனையோ பேர்கள் வருவதும் இருப்பதும் போவதுமாகவுமே இருந்து வருகிற அந்த வீட்டில் ராமச்சந்திரனுக்கு உடையும் உணவும் கொடுத்து வருவதில் ஒன்றும் குறைந்துபோய்விடவில்லை.

ஆனால் சாந்தியின் மனம்! வீட்டில் எல்லோராலும் மாப்பிள்ளை என்று கௌரவமாகக் கருதி மரியாதை செலுத்தப்பட வேண்டிய தன் கணவன் எல்லோருக்கும் வேலைக்காரராக மாறிவிட்ட துர்ப்பாக்கியத்தை எண்ணி எண்ணி அவள் வருந்தாத நேரம் இல்லை. வருகிறவர்கள் போகிறவர்கள் எல்லோரும் 'இன்னும் மாப்பிள்ளைக்கு வேலை கிடைக்கவில்லையா?' என்று கேட்கும் போதெல்லாம் அவளுடைய பெண் உள்ளம்

# குடிகூரா

## ஆயின்ட்மென்ட்

### ஒரு நூற்றாண்டுக்கு மேல் சருமப் பராமரிப்பை அளித்து வருகிறது




நூற்றுப்பத்து வருஷங்கள்!
அவ்வளவு நெடுங்காலந்தான்
குடிகூரா ஆயின்ட்மென்ட்
உலகெங்கிலும் உபயோகிக்கப்
பட்டு வருகிறது.
குடிகூரா ஆயின்ட்மென்ட்
களங்கமேற்படுத்தும் கிருமிகளை
நசித்து. அதனால் கருப்பு மச்சங்
களையும், சருமத்தின் மேலாக
உண்டாகும் பருக்களையும்
எக்ஸிமா சொறியையும் அறவே
நீக்குகிறது: மேலும் அவை
திரும்பத் தோன்றாதபடி பாது
காக்கிறது. அதன் உயரிய கிருமி
நசிக்கும் சக்தியுடைய தைலங்கள்
புண்கள், வேனில் சொறி சிரங்கு
கள், பூச்சிக்கடிகள் இவற்றை
சமனப்படுத்துவதுடன் வெட்டுக்
காயங்களும் கட்ட புண்களும்
குணமாக உதவுகிறது.

**குடிகூரா ஆயின்ட்மென்ட்**

ஒரு டப்பா குடிகூரா டால்கம்
பவுடரையும் வாங்குங்கள்—
அது குடும்ப முழுவதற்குமேற்ற
ஒரு சர்வ-காரிய டால்கம்



NATIONAL CO 30062A




சென்னை, டிரூப் இன்வெஸ்ட்மெண்ட்ஸ் ஸ்தாபனத்தின், விளம்பர, பொதுஜனத் தொடர்பு அதிகாரி **ஸ்ரீ மார்கண்ட் தேசாய்** அவர்களுக்கும் பம்பாய், சௌபாக்யவதி **கனிதா தாகூர்** அவர்களுக்கும் சமீபத்தில் அஹமதாபாத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க, மணமக்கள்


THE BETTER NAIL POLISH




EMROS-ERA-Ln. 4

*Distributors for South India:*

**P. H. HIRA & CO.**
4/228, Govindappa Naick St.,
MADRAS-1

# தாய், சேய் இருவரும் மிக நலமாயுள்ளனர்...

கல்ஸாணா-டி யின் நற்பயனே. கருவுற்றிருக்கையில் தாயிடம் கால்சியம் மிகையாகச் செலவாகி விடுகிறது. தாயிடமிருந்துதான் குழந்தையின் எலும்புகள், நகங்கள் இவற்றின் வளர்ச்சிக்கான கால்சியம் போய்ச் சேருகிறது...அதனால் அவளிடத்தில் கால்சியம் பற்றாக்குறை ஏற்படுகிறது. அவளுக்கும் அவள் குழந்தைக்கும் வேண்டிய கால்சியத்தைச் சரிக்கட்டி வைக்க, இந்தப் புத்திசாலியான அன்னை வைட்டமின் சிறப்புறச் சேர்ந்த கால்சியம் கொண்ட கல்ஸாணா-டியை உட்கொண்டு வந்தாள். கால்சியம் பற்றாக் குறையை நிவர்த்திக்க கல்ஸாணா-டி முற்றிலும் சரியான மருந்தென வருடக்கணக்கான சோதனைகளினால் நிரூபணமாகி ஒப்புக் கொள்ளப்பட்டுள்ளது. கல்ஸாணா-டியினால் தாய், சேய் இருவரும் மிக நலமாயுள்ளனர்.




# கல்ஸாணா-டி

**வைட்டமின் தீவிரச் சேர்க்கையுடைய கால்சியம்**

கர்ப்பிணிகள், குழந்தையை அரவணைக்கும் அன்னைகள் மற்றும் வளரும் குழந்தைகள் இவர்களுக்கு ஏற்றது

GR.AD.59 TAM.

பட்ட பாடு! கணவனுக்குப் பொறுப்புணர்ச்சியை உண்டாக்க அவள் எடுத்துக் கொண்ட முயற்சிகள் பலவும் வியர்த்தமாயின. எத்தனையோ சொல்லிப் பார்த்து விட்டாள் சாந்தி. ராமச்சந்திரனுக்கு வேலைக்குப் போகாமல் இருப்பதே பிடித்துப் போய்விட்டது. அதனால் அவன் அதற்காக முயற்சி செய்வதையே நிறுத்தி விட்டிருந்தான். வீட்டிலேயே அவனுக்கு நிறைய வேலைகள் இருந்து வந்ததால் அவனுக்குச் சாந்தியின் அறிவுரைகள் மனத்தில் படவில்லை. அவளுடைய வார்த்தைகளை அவன் பொருட் படுத்துவதுமில்லை. காலம் போய்க் கொண்டே யிருந்தது தன் போக்கில்.

இரவு பத்தரை மணி சுமாருக்கு மாடியறைக்கு வந்தாள் சாந்தி. தொட்டிலில் ஸ்ரீதர் தூங்கிக் கொண்டிருந்தான். கட்டிலில் ராமச்சந்திரன் படுத்திருந்தபடியே ஆங்கில நாவலொன்றைப் படித்துக்கொண் டிருந்தான். குழல் விளக்கு பளிச்சென்று எரிந்து தன் வெண்ணொளியை வாரி இறைத்துக் கொண்டிருந்தது. இவைகளைக் கண்ணுற்ற சாந்தி மனம் கலங்கிய நிலையில் வந்த சுவடு தெரியாமல் கீழே இறங்கிப் போய் விட்டாள்.

ஒரு மணி நேரம் கழித்து அவள் மறுபடியும் மேலே வந்து பார்த்தபோது குழல் விளக்கு அணைக்கப்பட்டு விடிவிளக்கு போடப்பட் டிருந்தது. ராமச்சந்திரன் இழுத்துப் போர்த்துக்கொண்டு நன்றாகத் தூங்கிக்கொண் டிருந்தான்.

ஓசைப்படுத்தாமல் அறைக்குள் வந்தாள் சாந்தி. குழந்தை ஸ்ரீதர் படுத்திருந்த தொட்டிலின் அருகில் போய்ச் சற்று நின்றாள். பிறகு வாசல் பக்கமாக உள்ள பால்கனிக்கு வந்தாள். பௌர்ணமிக்கு முந்திய தசமிச் சந்திரன் பாலொளியைப் பாரெங்கும் பரப்பி விட்டிருந்தான். நீல வானம் முழுதும் வைரமணிக் கூட்டங்கள் ஒளிச் சிதறல்களை வாரி யிறைத்திருந்தன. கைப்பிடிச் சுவரில் சாய்ந்து நின்று கொண்டிருந்தாள் சாந்தி. ஏதோ சலசலப்பு பின்பக்கம். திரும்பிப் பார்த்தாள். வெளித் தாழ்வாரத்தின் மேல் பகுதியில் மின்சாரக் கம்பிகளுக்காகப் பொருத்தப் பட்டிருந்த மரச் சட்டத்தின் மேல் ஒரு குருவி உட்கார்ந்து தூங்கிக் கொண்டிருந்தது. இரண்டிலும் ஒன்று ஆண்; மற்றொன்று பெண். கீழே யிருக்கும் வெளித் தாழ்வாரத்தில் கூடு கட்ட ஆரம்பித்திருக்கும் குருவிகள் இவைகளாகத்தான் இருக்க வேண்டும் என்று அவளுக்குத் தோன்றியது. பகலெல்லாம் ஒன்றுகூடிக் கூடு கட்டப் பாடுபடுவதும், இரவில் பிரிந்து உறங்கி, கட்டுப்பாட்டைக் காப்பதுமான குருவிகளின் வாழ்க்கை முறைகள் அவளைத் திகைக்க வைத்து விட்டன.

அவைகளின் அமைதியைக் கலைக்க மனமின்றித் தன் பார்வையை வானத்

# வரிப்புலிக்கு வாழ்த்து

கவி. பொன்: பானு

வாழ்க நீ ஐயா மேலும்
வரிகளைப் போட்டுப் போட்டு
ஆழ்கநும் சிந்தை மேலும்
அடுக்கிடும் வரியெண் ணத்தில்
ஏழ்மையில் வாடும் மக்கள்
இனிநலே எடா இருக்க
வாழ்கநீ ஐயா இந்த
வையத்தில் அமைச்ச ராக!

புகைப்பொருள் வரியுயர்த்தும்
புண்ணிய மூர்த்தி வாழ்க!
நகைசெயும் பொற்கொல் லர்தம்
நலந்தனைக் கெடுத்தோய் வாழ்க!
நகையுடன் காப்பி மயை
தவிர்த்திடச் செய்தோய் வாழ்க!
தொகையிலா எளியோர் மாட்டே
துன்பத்தைச் சேர்த்தோய் வாழ்க!

கலப்படம் செய்வார் தம்மை
கசையினல் அடிப்பார் மாற்றார்
கலப்படம் செய்யா தங்கம்
கடையிலே இருக்கக் கண்டால்
நலம்பரி சிறையில் தள்ள
நல்லதோர் வழியைக் கண்டு
அளப்பரும் புகழ் குவித்த
அண்ணலே வாழ்க! வாழ்க!

பண்டொரு முஸ்லிம் மன்னன்
தலைவரி போட்டாற் போலே
கண்டொரு வரியைத் தாங்கள்
கட்டாயம் போட வேண்டும்
தண்ணீரை மட்டில் தாங்கள்
தாழ்வாக எண்ண லாமா?
புண்ணிய வானே அதற்கும்
போடுங்கள் வரியை இன்னே!



துப் பக்கம் திருப்பிக் கொண்டு மீண்டும் இயற்கையின் அற்புத எழிலை ரசிக்கத் தொடங்கினாள்.

''சாந்தி!'' குரலின் ஒலியும், கரத்தின் ஸ்பரிசமும் திடுக்கிட வைத்தன சாந்தியை.

''நான் தூங்குவதாக எண்ணி ஏமாந்து தானே போய்விட்டாய்? நீ வந்ததையும் போனதையும் கவனித்துக் கொண்டுதான் இருந்தேன். கொஞ்ச நாட்களாக என்னிடமிருந்து நீ விலகி விலகிப் போகிறாய். ஏன் சாந்தி, என்னைக் கண்டால் உனக்குப் பிடிக்காமல் போய்விட்டதா?'' மனைவியின் அழகு கொழிக்கும் மதி முகத்தைத் தன் இரு கரங்களிலும் ஏந்திக் கொண்டு வினவினான் ராமச்சந்திரன்.

ஈரம் தோய்ந்த விழிகளை இமைக்கவும் மறந்துவிட்ட சாந்தி, தயக்கத்துடன் ''ஆமாம்!'' என்பது போலத் தன் தலையை அசைத்தாள்.

''ஏன் அப்படி? நான் வேலை தேடிப் போகவில்லை என்றுதானே?''

''ஏன் என்று உங்களுக்குத் தெரியவில்லையா? அதோ பாருங்கள் அந்த இரண்டு குருவிகளையும்...'' என்று கூறி உறங்கிக் கொண்டிருந்த குருவிகளைச் சுட்டிக்காட்டினாள் சாந்தி.

''அவைகளுக்கென்ன, நிம்மதியாகத் தூங்குகின்றன!'' என்றான் ராமச்சந்திரன்.

''இந்த இரண்டு குருவிகளும்தான் கீழ் வராண்டாவில் கூடு கட்ட ஆரம்பித்திருக்கின்றன. இரண்டும் இணைந்து வாழுமாம். கூடு கட்டியான பிறகுதான் அவைகளுக்குத் தாம்பத்ய வாழ்வும் தொடங்குகிறதாம். உங்களுக்கென்று ஒரு நிரந்தர உத்தியோகம், நமக்கென்று ஒரு வீடு, அதில் நம் சிறிய குடும்பம் என்றெல்லாம் ஏற்பட்டால்தான் என் மனம் நிம்மதி அடையும். குருவி இனத்துக்கு இருக்கும் பொறுப்பு உணர்ச்சி நம் மனித இனத்துக்கு மிகவும் இன்றியமையாதது. நம் வீட்டில் நாம் நடத்தும் குடும்பத்தில்தான் இன்பம் காண முடியும். நீங்கள் சுதந்திர மனிதராக உங்கள் சொந்தக் குடும்பத்தின் தலைவராக இருந்தால்தான் நம் இன்ப வாழ்க்கை நமக்கு இனிக்கும். என்னதான் பிறந்த வீடானாலும் இது இன்னொருவர் வீடு மாதிரிதானே! என் மனம் இந்தச் சாரமற்ற வாழ்க்கையில் சிறிதும் ஒட்டவில்லை. உங்களிடமிருந்து மட்டும்தான் நான் விலகியிருக்கிறேன் என்று நினைக்க வேண்டாம். தாம்பத்திய வாழ்விலிருந்தே விலகி நிற்கிறேன்....!'' — ஆவேசம் வந்தவளைப் போல் ஒரே மூச்சில் கொட்டித் தீர்த்துவிட்டாள் சாந்தி. அவளுடைய அழகிய விழிகளிலிருந்து கண்ணீர்மணிகள் பொல பொலவென்று உதிர்ந்து சிதறி அவனுடைய கரங்களை ஈரமாக்கின.

''சாந்தி!'' என்று அழைத்தான் ராமச்சந்திரன் ஆதுரத்துடன்.

''தவறாக நினைக்காதீர்கள். என்னை மன்னித்து விடுங்கள்!'' என்று கூறிக் கண் கலங்கினாள் சாந்தி.

ராமச்சந்திரன் மௌனமாக உள் அறை நோக்கி நடந்தான். சாந்தி வானத்தைப் பார்த்தாள். அங்கே நிலவு வெண் மேகத்தால் போர்த்தப் பட்டிருந்தது.

* * *

எல்லோரிடமும் விடைபெற்றுக்கொண்டு கணவனுடன் காரில் போய் ஏறிக்கொள்ளப் போனாள் சாந்தி. பிறகு ஏதோ நினைவு வந்தவளாகத் திரும்பி வந்து தாழ்வாரத்தின் மேற்பகுதியில் தன் பார்வையைச் செலுத்தினாள். இரண்டே வாரங்களில் இத்தனை வைக்கோல்களை எப்படித்தான் கொண்டு வந்து சேர்க்க முடிந்ததோ, அந்தக் குருவிகளுக்கு! இரண்டு குருவிகளும் ஒன்றாகக் கூட்டுக்குள் இருந்தபடி 'கீச்மூச்' சென்று கத்தின. சாந்திக்கு அவைகளும் விடை கூறுகின்றனவா?

''நேரமாகிறது சாந்தி!'' காருக்குள்ளிருந்து குரல் கொடுத்தான் ராமச்சந்திரன்.

''இதோ வந்துவிட்டேன்.....'' என்று கூறியபடியே நடந்து சென்று காருக்குள் ஏறிக் கணவனின் அருகில் அமர்ந்துகொண்டாள் சாந்தி.

கார் புறப்பட்டது. பல தெருக்களைக் கடந்து அது ஒரு பெரிய கட்டிடத்தின் எதிரில் போய் நின்றது. குழந்தையுடன் கீழே இறங்கி மேலே தொங்கிக் கொண்டிருந்த பலகையை நோக்கினாள்.

'சாந்தி பார்மஸி' என்று கொட்டை எழுத்தில் ஆங்கிலத்திலும் தமிழிலுமாகப் பொறிக்கப்பட்டிருந்த அந்தப் பலகையைப் பெருமிதத்துடன் பார்த்து விட்டு வீட்டுக்குள் அடியெடுத்து வைத்தாள்.

ஆம். வெளிப் பக்கம் மருந்து வியாபாரம்; உட்பக்கம் குடும்பம். இரண்டுக்கும் வசதியாகத்தான் இருந்தது அந்த வீடு. பணக்கார நண்பன் ஒருவன் உதவியைக் கொண்டும் மாமனாரின் செல்வாக்கைக் கொண்டும், சாந்தி பார்மஸியை ஆரம்பித்தான் ராமச்சந்திரன். அவனுக்குப் பிறரின் கீழ் கைகட்டிச் சேவகம் செய்யும் இயல்பு இல்லாததால் சுதந்திரமான இந்தப் பிழைப்பை ஏற்றுக் கொள்வதுதான் நல்லது என்று கூறி அவனுடைய நண்பன் செய்து கொடுத்த இந்த ஏற்பாடு அவனுக்குப் பிடித்திருந்தது.

ஒரு வருஷத்துக்குப் பிறகு இரண்டாவது பிரசவத்துக்குப் பிறந்தகம் செல்லக் கணவனிடம் அனுமதி கேட்டாள் சாந்தி. அன்பும் நிறைவும் பொங்க மனைவியின் தந்தக் கைகளைத் தன் கையில் எடுத்துக் கொண்ட ராமச்சந்திரன், ''குருவிகள் பிரசவத்துக்குப் பிறந்தகம் போவதில்லையாம் சாந்தி. பாடுபட்டுக் கட்டிய கூடு பின்னே எதற்காம்?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டான்.

''அப்படியானால் அந்தச் சமயத்துக்கு அம்மாவை இங்கே வரவழைத்துக் கொள்ளலாம்....'' என்று கூறி இன்பமாகப் புன்னகை செய்தாள் சாந்தி.

''கோபமா?'' என்று வினவினான் அவன்.

''இல்லை. பெருமிதம்!'' என்று கூறினாள் அவள்.

''அம்மா!'' என்றழைத்தபடி அங்கு வந்து நின்ற குழந்தை ஸ்ரீதர் அங்கே நிலவிய ஆனந்தத்தை அதிகப்படுத்தினான்.

# கேசவர்த்தினி



## ஹேர் ஆயில்

கூந்தலை
வளர்த்து, பாதுகாத்து,
அழகுறச் செய்கிறது



## ஷாம்பூ

கூந்தலை சுத்தமாகவும்
நறுமணத்துடனும்
ஆரோக்கியமாகவும்
இருக்கச் செய்கிறது



தயாரிப்பவர்கள்: **கேசவர்த்தினி பிராடக்ட்ஸ்**
9-100, கிராஸ்கட் ரோடு, கோயமுத்தூர்

எல்லாக் கடிதப் போக்குவரத்தும், வியாபார விசாரணைகளும் திருமதி R. செல்லம்மாளுக்கே அனுப்பப்பட வேண்டும்

சிலோன் ஏஜெண்டுகள்: மெஸர்ஸ் ஜூபிடர் ஏஜென்ஸி
7, நியூ மூர் ஸ்ட்ரீட், கொழும்பு-12 (சிலோன்)

# எக்ஸிமா சொறி

உங்கள் சருமத்தில் சுமார் 5 கோடி மெல்லிய துவாரங்களும் மடிப்புகளும் உள்ளன. கிருமிகள் அவைகளில் மறைந்திருந்து, தாங்கமுடியாத அரிப்பு, வெடிப்பு, மேலாகப் பரவும் படை, தோல் உரிதல், எரிச்சல், பருக்கள், படர்தாமரை காலில் அரிப்பு முதலிய உபாதைகளை உண்டுபண்ணுகின்றன. சாதாரண சிகிச்சைகள் தற்காலிகமான நிவாரணம் அளிக்கும். ஏனெனில், அதன் மூலம் உபாதைகளுக்கு மூலகாரணமான கிருமிகள் அழிவதில்லை. விஞ்ஞான முறையில் தயாரித்த இந்த மருந்து, நிக்ஸோடர்ம் (Nixoderm) துரிதமாக இந்தக் கிருமிகளைக் கொன்று விடுகிறது. மற்றும் உங்கள் சருமத்தை மிருதுவாகவும் வழவழப்பாகவும் வசீகரமாகவும் இருக்கச் செய்கிறது. இன்றே உங்கள் கெமிஸ்டிடம் நிக்ஸோடர்ம் (Nixoderm) வாங்குங்கள். சரும உபாதைகளின் மூலகாரணமான கிருமிகளை நிக்ஸோடர்ம் நிச்சயமாக அழிக்குமென்ற பூர்ண நம்பிக்கையுடன் வாங்குங்கள்.

பண்டிட் டி. கோபாலாச்சார்லுவின்

# அருணா

ஸ்திரீகள் ஆரோக்ய சௌபாக்யத்திற்கு

ஆயுர்வேதாஸ்ரமம்
லிமிடெட்
சென்னை-1.

# வட்டமேஜை

## நெல் விலையும், கொள்முதலும்

நெல் விலை எல்லை மீறி உயர்ந்தாலும் அல்லது குறைந்தாலும் அரசாங்கத்தின் தலையீடு அவசியமே. தற்போது உற்பத்தியாளர்களுக்கு நியாயமான உயர்ந்த விலை கிடைக்கச் செய்ய வேண்டுமென்று அரசாங்கம் விரும்புகிறது. ஆனால் அரசாங்கம் நெல் விலை மணங்கு ரூ. 16 என்றும் ஒரு லட்சம் டன் அரிசி மில் அதிபர்களிடம் கொள்முதல் செய்வதாகவும் அறிவித்திருப்பது ஆச்சரியமாக இருக்கிறது. உண்மையிலேயே அரசாங்கம் உற்பத்தியாளர்களுக்கும், வியாபாரிகளுக்கும் பாதுகாப்பு அளித்து ஊக்கம் அளிக்க வேண்டுமானால், பின்வரும் ஐந்து காரியங்களைச் செய்ய வேண்டும். (1) மளிகைச் சாமான், எரு விலை, விவசாயச் செலவு, வரி உயர்வு இவைகளை அனுசரித்து நெல்லை இரண்டு ரகமாகப் பிரித்து முதல் ரகம் ரூ. 21, இரண்டாம் ரகம் ரூ. 20 என நிர்ணயிக்க வேண்டும். (2) உற்பத்தியாளர்களிடம் நேரிடையாகக் கொள்முதல் செய்ய வேண்டும். (3) கூட்டுறவு ஸ்தாபனங்கள் மேற்கண்ட விலைக்கு அரசாங்கத்துக்குத் தேவையான அளவு கொள்முதல் செய்ய வேண்டும். (4) பல ஆண்டுகளுக்கு முன் நெல் விலை உயர்கிறதெனச் சொல்லி வியாபாரிகளுக்கு பாங்கு கடன் வசதியைக் குறைத்தனர். ஆனால் விலை குறைந்துவிட்டதெனக் கருதிய பின்னரும் கூட ரிசர்வ் பாங்க் கடன் வசதிக் கட்டுப்பாட்டை முழுதும் ரத்துச் செய்யவில்லை. வியாபார முன்னேற்றத்துக்கு உடனடியாக வியாபாரிகளுக்குப் பூரண பாங்கு கடன் வசதி அளிக்க வேண்டும். (5) அரசாங்கம் வியாபாரிகளிடம் கொள்முதல் செய்வதை விட உற்பத்தியாளர்களிடம் நேரிடையாகக் கூட்டுறவு ஸ்தாபனங்கள் மூலம் கொள்முதல் செய்ய வகை செய்ய வேண்டும். தஞ்சை கலெக்டரும் நமது ஆட்சியாளர்களும் உடனடியாகக் கவனித்து ஆவன செய்ய வேண்டும்.

கோனேரி ராஜபுரம்,
22–2–63

கே. எஸ். மகாலிங்கம்
காரியதரிசி, நிலச்சுவான்தார் சங்கம்

## சர்க்கார் சிந்திக்குமா?

சீனாவுக்கும் நமக்குமுள்ள தகராறினால் வரிச் சுமையை மக்கள் தாங்கித்தான் ஆக வேண்டும் என்று சர்க்கார் சுலபமாகச் சொல்லித் தப்பித்துக்கொள்ளக் கூடாது.

போக்குவரத்தைப் பொறுத்த வரையில் சென்ற ஆண்டு சென்னை சர்க்கார் அளவுக்கு மேற்பட்ட வரியை விதித்தார்கள். இப்போது மத்திய சர்க்கார் பெட்ரோல், டீசல், டயர் மற்ற உறுப்புக்களின் மீது மேலும் வரி உயர்த்தியிருக்கிறார்கள். உதாரணமாக 1961-1962-ம் ஆண்டு ஒருவர் பஸ்ஸில் பிரயாணம் செய்யும் சீட் ஒன்றுக்கு வருடம் ரூ. 170 ஆக இருந்ததை ரூ. 280 ஆக உயர்த்தினார்கள். இதனால் அறுபது சீட்டுகள் உள்ள பஸ் ஒன்று வருஷம் ரூ. 10,200 லிருந்து 16,800 ரூபாயாக வரி செலுத்த வேண்டியதாயிற்று.

இப்போது மேலும் டீசல் லிட்டர் 12 ந. பை. வீதம் வரி உயர்த்திவிட்டார்கள். இதனால் இருநூறுமைல் ஓடக் கூடிய ஒரு வாகனத்துக்கு வருடம் ரூ. 3700 அதிகப்படி செலவும், டயர் மற்ற உறுப்புக்களின் மீது வரி உயர்வினால் வருடம் ரூ. 1000 மும் ஆக ரூ. 4700 அதிகம் செலவாகும். இதையும் சேர்த்தால் சர்க்காருக்கு இனி ஒரு பஸ் வருடம் ஒன்றுக்கு வரியாக மட்டும் ரூ. 21,500 செலுத்த வேண்டும். இது செலவில் நூற்றுக்கு நூற்றைந்து சத விகிதம் உயர்வு.

சென்ற ஆண்டு வரி உயர்வினால் போக்குவரத்தை நடத்தமுடியாத நிலை ஏற்பட்டு பஸ், லாரி அதிபர்கள் தடுமாற்றத்துடன் இருக்கும் நிலைமையில் மேலும் வரி விதிப்பினால் போக்குவரத்தை ஒரேயடியாக நிறுத்த வேண்டிய நிர்ப்பந்தத்தைச் சர்க்கார் உண்டாக்கிவிட்டது.

இனி போக்குவரத்தைத் தொடர்ந்து நல்ல முறையில் நடத்த வேண்டுமானால் தற்போதுள்ள பிரயாணிக் கட்டணத்தை உயர்த்த வேண்டும். இல்லையேல் போக்குவரத்தைப் படிப்படியாக நிறுத்த வேண்டிய நிலை ஏற்படும். இதைக் குறித்துச் சர்க்கார் ஆழ்ந்து சிந்திக்க வேண்டும்.

ராசிபுரம்,
12–3–63

வி. மாரப்ப கவுண்டர்


மறக்கமுடியாத திரைப்படங்கள்

அடுத்த இதழில்



சிந்தாமணி

மேலைமலைச் சோலையிலே

சிறப்புக் கட்டுரை



# சிருங்ககிரி கும்பாபிஷேகம்



ஆதி சங்கரர் தமது திக்விஜயத்தில் கர்நாடகத்தைச் சேர்ந்த சிருங்ககிரிப் பக்கம் வந்தபோது ஓர் அதிசயத்தைக் கண்டார்.

நடுப் பகல். வெய்யிலோ கொளுத்துகிறது. தகிக்கும் வெய்யிலில் தவளை ஒன்று பிரசவ வேதனையில் துடித்துக் கொண்டிருக்கிறது.

அச்சமயம் விர்ரென்று எங்கிருந்தோ ஒரு நாக சர்ப்பம் வருகிறது. 'சரி, தவளை தீர்ந்தது!' என்று தீர்மானிக்கும் நேரத்தில் அந்த நாகசர்ப்பம் அதற்குப் படமெடுத்துக் குடை பிடித்து நிற்கத் தொடங்குகிறது. தவளைக்கும் பாம்புக்கும் உள்ள தொடர்பு தெரிந்ததாயிற்றே! இந்தக் காட்சியைக் கண்டவுடனே ஸ்ரீ சங்கரர் தமது அன்பு மதத்தை நிலை நிறுத்த இது தகுந்த இடமெனக் கண்டு அங்கே ஸ்ரீ சாரதா பீடத்தை ஸ்தாபித்தார்.

ஸ்ரீ சாரதா பீடத்தை அலங்கரித்த மகான்கள் பலரில், சமீபகாலம் வரை ஜீவன் முக்தராக வாழ்ந்து மறைந்த ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகர பாரதியைக் குறிப்பிட வேண்டும்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த சிருங்ககிரி ஸ்ரீ சாரதா பீடத்தைத் தற்போது அலங்கரிக்கும் ஸ்ரீ அபிநவ வித்யா தீர்த்த சுவாமிகளது ஆக்ஞையின் பேரில் இவ்வாண்டு மார்ச் மாதம் மூன்றுந் தேதி அன்று ஸ்ரீ பாரதி அவர்களது அதிஷ்டானத்துக்கும் ஸ்ரீ சாரதாம்பிகை கோயிலுக்கும் ஆதி சங்கரர் சந்நிதிக்கும் மகா கும்பாபிஷேகம் மிகச் சிறப்பாக நடைபெற்றது. யுத்த பயத்தை நீக்கவல்ல சஹஸ்ர சண்டி ஹோமம் நிறைவுற்றுப் பூரணாஹுதி முதலியவையும் சிரிய முறையிலே நிறைவேற்றப்பட்டன.

ஸ்ரீ சிருங்ககிரி முழுவதிலும் வேத கோஷம் ஒலித்து வேதபுரியாகவே காட்சி அளித்தது. ஏராளமான ஆஸ்திக மக்கள் இவ்வைபவங்களைக் கண்டு மகிழ்ந்தனர். இவ்விழாவில் மைசூர் கவர்னர், டாக்டர் ஸி. பி. ராமசாமி அய்யர் முதலியவர்களும் முக்கிய பங்கெடுத்துக் கொண்டு பீடாதிபதிகளின் ஆசியைப் பெற்றனர். இவ் விழாக்களை யொட்டி லட்சத்துக்கும் மேற்பட்ட பக்தர்களுக்கு அன்னதானம் செய்யப்பட்டது.



# நீகோ
## ஜெர்மிஸைடல் சோப்
## ஒரு பார்க்-டேவிஸ் தயாரிப்பு

உங்கள் சருமத்தைச் சுத்தமாகவும் ஆரோக்கியத்துடனும் வைத்துக் கொள்ளவும், பருக்கள், கருநிறப் படைகள், வேர்க்குரு மற்றும் இதர சாதாரண சரும நோய்களின்றி இருக்கவும் உதவுகிறது. தவறாமல் தலைமயிரைச் சுத்தம் செய்ய உபயோகித்து வரின், நெக்கோவின் கிருமிநாசக நுரை வழுக்கை ஏற்படாமலிருக்க ஒரு நல்ல பாதுகாப்பாக இருக்கும். நிரூபணமான மதிப்பையுடைய கிருமிநாசக சோப்பான நீகோ உங்களுக்கு மும்மடங்கு நன்மையளிக்கிறது—சுத்தமாக்க, நோய்கிருமி பரவாமல் தடுக்க, பாதுகாக்க, உதவுகிறது. தினமும் உங்கள் சருமத்திற்குத் தேவையான கவனத்தை செலுத்துங்கள்.







NATIONAL PD 9263

தினசரி உபயோகத்திற்கான ஆதி கிருமிநாசக சோப்



அவனைச் சந்திக்காமலா இருந்து வருவேன்! எனக்கு நீ துரோகம் செய்த ஆத்திரத்தில் அவன் கதையை அப்படியே கையோடு முடித்து விட்டேன். உன் காதலன்_ அந்தச் சொறிநாய்ப்பயல்_ நீ அவனோடு ஆடிய நாடகத்தையெல்லாம் சொன்னான்.

ஐயோ, இந்தச் சமயம் பார்த்து அப்பாவும் அம்மாவும் கூட எங்கோ கல்யாணத்துக்குப் போயிருக்கிறார்களே.

போதும், போதும்! இந்த விஷ வார்த்தைகளை உங்கள் வாயால் உதிர்க்காதீர்கள். அத்தான்! நான் உங்கள் மனைவி என்பதை மறந்து ஒரு அபலைப் பெண் என்று நினைத்துப் பாருங்கள். இதில் ஏதோ சூது இருக்கிறது.

உன் வாழ்வு பாழானதில் அப்படி யாருக்கு அக்கறை?

அக்கறை கொண்டவர்கள் இருக்கிறார்கள் அத்தான். அது யார் என்பதை இன்று இந்த நிலையில் சொன்னாலும் நீங்கள் நம்பமாட்டீர்கள்.

உன்னையே நம்பி நாசமானேனே, உன் வார்த்தையைத் தானா நம்ப மாட்டேன்? சொல்

உங்கள் களங்கமற்ற நெஞ்சிலே சந்தேகம் என்ற நஞ்சை விதைத்திருக்கிறவரே, உங்கள் மாமா சோமநாதன்தான் சொல்லுகிறேன்.

என் மாமாவா? கேடு கெட்டவளே! உன்னைத் தவிர அத்தனை பேரும் அயோக்கியர்கள், பொய்யர்கள். அப்படித்தானே?

என் மாமாவைக் கண்டால் உன் குடும்பத்தில் யாருக்குமே பிடிக்கவில்லை. அது ஏன்?

அதற்குக் காரணமிருக்கிறது. அதைச் சொன்னால் உங்களுக்குப் புரியாது.

எனக்குப் புரியாத விஷயங்கள் இன்னும் எத்தனையோ! வாழ்க்கை நடத்தவே வழியில்லாத உன் அப்பா உன் கல்யாணத்துக்குப் பணத்தைத் தண்ணீராகச் செலவிட்டாரே எப்படி? ஏது பணம்? எங்கிருந்து வந்தது?

அசைந்து ஆடிக்கொண்டே ஆசுவாசம் பெறுங்கள்.
ஓய்ந்து போயிருக்கும் அவயவங்களுக்கு அதனுடைய அமைதி
யான அசைவு இதமாக இருக்கும். உள்வளைவு கொண்ட
அதன் முதுகுப்புறம், உங்களை இன்பமாக இளைப்பாற
அழைக்கிறது. அதன் மகிழ்வூட்டும் சொகுசை நீங்கள்
அனுபவிக்கும்பொழுது. அதன் துணி உங்கள்
உடல் வளைவுகளையெல்லாம் அணைத்துக்
கொள்ளுகிறது. இந்த இன்பமான
வசதியுடன், எஃகினால் கச்சிதமாகச்
செய்யப்பட்டிருக்கும் இந்தச் சாய்ந்தாடும்
ஈசி சேர்கள் இடத்தை அடைத்துக்
கொள்வதில்லை. அதோடு முதலில்
வாங்கும் பொழுதும் பிறகு
அதைப் பாதுகாப்பதிலும்,
செப்பனிடுவதிலும்
செலவு குறைகிறது.

# A CRADLE OF COMFORT



**ரூ. 18.00**
விற்பனை வரி,
உள்ளூர் வரிகள் தனி

அதுதான்
மடக்கும்




எஃகு குழாய்
பர்னிச்சரின்
விசேஷ அழகு.



தரத்தில் சிறந்த
அடுக்கடுக்காக

- ஒவ்வொரு உலோகப் பகுதியும் 'பாஸ்பனைஸ்' செய்யப்பட்டது. துருப்பிடிக்காமல் இருக்க, சீதோஷ்ணம் பாதிக்காத சிறந்த எனமல் வர்ணம் வாட்டியெடுக்கும் முறையில் தீட்டப்பட்டது.
- எடுப்பான நிறங்களில் உறுதியான எளிதில் கிழியாத முரட்டுத் துணி.
- மடக்கும் உறுப்புகள் விசேஷமாகத் தயாரானவை
- ஈரத் துணியைக் கொண்டு பளிச்சென்று துடைத்துவிடலாம்.

தயாரிப்போர்:
க்ரோம் லைட் (இந்தியா) பிரைவேட் லிட்.
பி-35 இந்தியா எக்ஸ்சேஞ்ச் ப்ளேஸ், கல்கத்தா-1

சிந்தால் வருஷங்கள்



# குழந்தைப் பருவம்

சரும ஆரோக்கியத்திற்கும், அழகுக்கும் **சிந்தால்** நம்பகமான வழி. ஆச்சரியகரமான **ஜி-11*** என்ற கிருமி நாசினி சேர்ந்த **சிந்தால்** குழந்தையின் மிருதுவான சருமத்தை அதன் மேல் சாதாரணமாக வளரும் லட்சக்கணக்கான கிருமிகளிலிருந்து காப்பாற்றுகிறது... சிரய்த்தபுண், வேர்க்குரு, கருகிறப்படை ஆகியவற்றிலிருந்து பாதுகாக்கவும், குணப்படுத்தவும் செய்கிறது.

மனோகர நறுமணங்கொண்ட **சிந்தால்** மிகவும் மிருதுத்தன்மையுடைய தால் சருமத்தைச் சுத்தம் செய்கையிலேயே இதமளிக்கிறது... கண்களுக்குக் கெடுதலற்றது .. சிறுவர் இல்லத்தில் வைத்திருக்க **அத்தியாவசியமானது.**



வியர்வை நாற்றத்தைப் போக்கி, எழிலுடன் விளங்கச்செய்யும் சோப்

பூரணப் பாதுகாப்பிற்கு இனிய மணங்கமழும் வியர்வை நாற்றத்தைப்போக்கி ஆறுதல் அளிக்கும் ஜி-11 அடங்கியுள்ள கோத்ரெஜ் சிந்தால் டாய்லெட் பவுடர் உபயோகியுங்கள்.

*விவரமான "ஜி-11 என்பது என்ன?" என்ற இலவச புத்தகத்திற்கு 'கோத்ரெஜ், பம்பாய்-12,' என்ற விலாசத்திற்கு எழுதுங்கள்.

Godrej கோத்ரெஜ்

**சோப்புகளில் முதன்மையான பெயர்**

. CT-I. 2/63 (21 cm x 13 cm) TAM.

* எல். ஜிவாடன் அண்டு கம்பெனியின் ட்ரேட் மார்க்



# பொன் விலங்கு

பதினொன்றாவது அத்தியாயம்

'கண்ணாயிரத்தைப் போல் கெட்டவர்கள் நன்றாக வாழ்வதற்கும் அப்பாவைப் போல் நல்லவர்கள் — எப்போதுமே மாறாத நல்லவர்கள் — இப்படி வாழ முடியாமற் போவதற்கும் சமூகக் காரணம் ஏதாவது இருக்க முடியுமா?' என்று சிந்தித்தபடியே வீட்டுக்குத் திரும்பிக் கொண்டிருந்தான் சத்தியமூர்த்தி. திருவள்ளுவரைப் போன்ற பேரறிஞர்களுக்கே இந்தச் சிந்தனை விடை காண முடியாத புதிராகத்தான் இருந்திருக்குமென்று அவனுக்குத் தோன்றியது. இல்லையென்றால்,

"அவ்விய நெஞ்சத்தான்
ஆக்கமும் செவ்வியான்
கேடும் நினைக்கப்படும்"

என்ற திருக்குறளை அவர் பாடியிருக்க முடியாது. கண்ணாயிரத்தைப் போன்றவர்களின் வாழ்க்கையை இரசித்து மகிழ்வதற்குப் பழக்கப்படுத்திக் கொண்டு விட்டதாகக் குமரப்பன் சொல்கிறான். சற்று முன் தெருத் திருப்பத்தில் விடை பெற்றுக் கொண்டு செல்லும்போது கூடக் குமரப்பன் இதே வார்த்தைகளைத்தான் சொல்லி விட்டுப் போகிறான். என்றாலும் கண்ணாயிரத்தைப் போல் தீய சக்திகளை இரசிக்க முடிவதில்லை. இந்த விதமான தீய சக்திகள் என் இதயத்தையும் எண்ணங்களையும் குமுறச் செய்து விடுகின்றன. தீமைகளையும், பொய்களையும், எதிரே காணும்போது கைகள் துடித்து மனம் கொதிக்கிறேன் நான். இப்படி உணர்ச்சி வசப்படுவது குமரப்பனுக்குப் பிடிக்க வில்லை. ஆனால் இன்றைய சமூக வாழ்வுக்குச் 'சிறுமை கண்டு பொங்குகிற' இந்த நியாய மனப்பான்மை அவசியம் வேண்டும் என்றுதான் எனக்குத் தோன்றுகிறது.

எத்தனையோ நல்ல குணங்களை உடையவராகிய பூபதி அவர்கள், 'இளமை-அதை உடையவனுக்கு ஒரு தகுதிக் குறைவு' என்று பொருள்படுகிறாற் போல் கூறியதைக்கூட என்னால் பொறுத்துக் கொண்டு பதில் பேசாமல் சும்மா இருக்க முடியவில்லை. வயிற்றைக் கழுவி வாழவும், பிழைக்கவும் வேண்டுமானால் குமுறவும் கொதிக்கவும் வேண்டிய பல இடங்களில் கூட உணர்ச்சியே இல்லாமல் மரத்துப் போய் இருந்துவிட வேண்டியதுதான் போலும். பலர் அப்படித் தான் வாழ்கிறார்கள். துடிப்புடனும், கொதிப்புடனும் வாழ்கிற சிலரும்கூட நாளடைவில் மெல்ல மெல்ல மரத்து !



மணிவண்ணன்

போய் விடுகிறார்களே' என்று எண்ணிய போது வாழ்க்கையே பெரிய ஏமாற்றமாகத் தோன்றியது அவனுக்கு. இவ்வாறு கலக்கமும், குழப்பமும் நிறைந்த மனத்தோடு மேலமாசி வீதியும், வடக்கு மாசி வீதியும் சந்திக்கிற திருப்பத்தில் அவன் சென்றுகொண்டிருந்த போது கலவரமும் கூப்பாடுமாக அங்கே கூடியிருந்த ஒரு கூட்டத்தினால் கவரப்பட்டான். கீழே மரத்தடியைத் தேடி வந்து கோயில் கொண்டு விட்ட ஒரு பிள்ளையாருக்கும் அந்த இடத்தில் நிறுத்தப்படுகிற பல ஜட்கா வண்டிகளுக்கும் ஆதரவாக அங்கே பெரிய ஆலமரம் ஒன்று உண்டு. மனிதர்கள் நெருங்கி வாழ்கிற பெரிய நகரங்களில் திடீர் என்று ஓரிடத்தில் கூட்டம் கூடுவதும் கலைவதும் சர்வ சாதாரணம். ஆனால் அன்று அங்கே அந்த முன்னிரவில் சத்தியமூர்த்தி சந்தித்த கூட்டம் அப்படிக் கூடிய கூட்டமில்லை. சிரிப்பையும், வேதனையையும் ஒருங்கே உண்டாக்கக்




கூடியதொரு சம்பவத்தை முன்னிட்டுக் கூடிய கூட்டமாயிருந்தது அது. கூடியிருந்தவர்கள் அந்தச் சம்பவத்தைச் சொல்லிச் சொல்லி ஆச்சரியப்பட்டுக் கொண்டிருந்தார்கள். 'இப்படிக்கூட நடக்குமா?' என்று நினைத்து நினைத்து வியப்படையக் கூடியதாயிருந்தது அந்தச் சம்பவம்.

கூடியிருந்த கூட்டத்தின் நடுவே கிழிந்த சேலையும் பயந்து கலவரமடைந்த முகத் தோற்றமுமாக இளம் வயதுப் பிச்சைக்காரப் பெண் ஒருத்தி கூசிப் போய்க் கூனிக் குறுகி நின்று கொண்டிருந்தாள். அவளுக்கு மிக அருகே தரையில் ஒரு புது மண் பானை சில்லுச் சில்லாக உடைந்து கிடந்தது. அந்த ஆலமரத்தடியைக் கடந்து நாலைந்து முறை நடந்து போகிற எவருடைய பார்வையிலிருந்தும் அந்தப் பிச்சைக்காரப் பெண் தப்பியிருக்க மாட்டாள். சத்தியமூர்த்தியே அவளை அந்த இடத்தில் பல முறை பார்த்திருக்கிறான். ''ஐயா! பிள்ளைத்தாய்ச்சிக்கு உபகாரம் பண்ணிக் காப்பாத்துங்க, ஐயா... உங்க தலைமுறைக்கு நீங்க நல்லா இருப்பீங்க'' என்று கனத்து முன்னால் துருத்திக் கொண்டிருக்கும் தாய்மை கனிந்த வயிற்றோடு அவள் அந்தத் திருப்பத்தில் வெயிலென்றும், மழையென்றும் பாராமல் பிச்சைக்கு நிற்பதைப் பார்த்துச் சத்தியமூர்த்தி பரிதாபப்பட்டிருக்கிறான். 'வயிறும் பிள்ளையுமாகக் கர்ப்பிணியாயிருக்கிற இவளைப் போன்ற அநாதைகளுக்கு வயிறு காயும் இந்த வேளையில் இதே தெருவில் பாயசமும் வடையும் சமைத்துச் சாப்பிடுகிறவர்களும் இருப்பார்களே? 'சமுதாய வாழ்க்கையில் உள்ள சுகதுக்கங்களில் எத்தனை முரண்பாடுகள்? இந்த நாட்டில் இப்படி அநாதைகள் நம்மிடையில் இருக்கிறவரையில் பாயசம் வைத்துப் பண்டிகைகள் கொண்டாடுவதற்குக் கூச வேண்டும். இவர்களுக்குத் தலை சாய்க்க இடமில்லாத வரை மற்றவர்கள் கட்டிலும் மெத்தையும் இட்டுப் படுப்பது பாவம்' என்று இத்தகைய பிச்சைக்காரர்களைப் பார்க்கும்போதெல்லாம் மனம் வேதனைப்பட்டிருக்கிறான் அவன். ஆனால் இன்று அவனே இந்த ஆலமரத்தடியில் கேள்விப்பட்ட உண்மை — பார்த்த உண்மை முற்றிலும் புதியதா யிருந்தது. கண்களில் ஏழ்மையின் ஏக்கம் தெரிய வழி மேல் நின்று கொண்டு போவோர் வருவோரிடமெல்லாம், ''பிள்ளைத்தாய்ச்சிக்கு உபகாரம் பண்ணிக் காப்பாத்துங்க ஐயா....'' என்று கதறிக்கொண்டிருந்த அந்தப் பெண், வயிற்றில் மண் பானையை வைத்துக் கட்டிக் கொண்டு பிறரை மனம் இரங்கச் செய்வதற்காக நடித்திருக்கிறாள். அவளுடைய போதாத காலமோ அல்லது உண்மை வெளிப்பட்டுத் தெரிய வேண்டிய காலமோ கிழிந்து நைந்து இற்றுப் போன பழைய சேலை தாங்காமல் பானை கீழே விழுந்து உடைந்து அவளைக் காட்டிக் கொடுத்து விட்டது. இப்படி ஒரு காட்சியைச் சினிமாவிலோ, நாடகத்திலோ பார்த்திருந்தால் அந்த நடிப்புத் திறமையை மக்கள் புகழ்ந்திருப்பார்கள். வாழ்க்கையில் கண்ணெதிரே வயிற்றுக் கொடுமை தாங்காமல் ஓர் ஏழைப் பெண் இப்படி நடித்ததையும் மன்னிக்கலாம்தான். ஆனால் மன்னிப்பதற்கு அங்கு யாரும் தயாராயில்லை.

''வயித்திலே பானையைக் கட்டிக்கிட்டு இத்தினி நாளா இந்த மரத்தடியிலே டிராமாவா ஆடிக்கிட்டிருந்தே? மானங்கெட்ட கழுதை....'' என்று திட்டிக் கொண்டே காரித் துப்பினான் ஒருவன். தெரு ஓரமாகச் சாலை போடுவதற்காகக் குவித்திருந்த சரளைக் கற்

# காஷ்மீர் பொக்கே டால்க் உபயோகித்து மணிக்கணக்காக சுகந்தத்துடனும் புதுமையுடனும் இருங்கள்



உன்னதமான காஷ்மீர் பொக்கேயின் தரம், ஒரு அழகுசாதன டால்க்... ஒரு குழந்தைக்கான பவுடர் இவ்விரண்டையும் அளிக்கிறது.

காஷ்மீர் பொக்கே டால்க்கின் குளுமையான, பூவிதழ்போன்ற மென்மையான ஸ்பரிசத்தை நீங்கள் உணரும்பொழுது ஒரு பூச்செண்டிற்குள் இருப்பது போலவே தோன்றும். உடல் முழுவதும் தடவிக் கொண்டு அதன் ஊற்றுப்பெருக்கென எழும் புதிய நறுமணத்தில் திளைத்து மகிழுங்கள்



குழந்தையை இதமுடனும் சுகமுடனும் வைத்திருங்கள். காஷ்மீர் பொக்கே, எந்த ஒரு விசேஷ குழந்தைக்கான பவுடரைப் போலவே, மிருதுவும் பட்டுப்போன்றதுமானது. நீங்கள் இருவருமே உபயோகிக்கக்கூடிய அவ்வளவு சௌகரியமான ஒரே பவுடர்!




## காஷ்மீர் பொக்கே

டால்கம் பவுடர்—ஆடவர் விரும்பும் சுகந்தமுள்ளது!

குவியலிலிருந்து கல்லை எடுத்து வீசினான் ஒரு சிறுவன். அது அவள் முன் நெற்றியில் பட்டு இரத்தம் கசிந்தது. தன் வீட்டுக் கவலைகளும், தனக்காகத் தான் பட வேண்டிய வேதனைகளும் ஆயிரம் இருந்தாலும் சத்தியமூர்த்தி இப்போது அந்த ஆலமரத்தடியில் கூடியிருந்த கூட்டத்தோடு தயங்கி நின்றான். சும்மா நின்று கொண்டு, பிச்சை போடும்படி கைகளை முன்னால் நீட்டினால் இவளுக்கு யாரும் இரங்க மாட்டார்கள். வயிற்றின் கொடுமை இவளை இவ்வளவு தந்திரமாக யோசிக்கச் செய்து பானையைக் கட்டிக் கொண்டு கர்ப்பிணியாக நடிக்கச் செய்திருக்கிறது. குமரப்பன் இப்போது அருகிலிருந்தால் இந்தத் தந்திரத்தைக் கண்டு செயலாக்கியதற்காக இவளைப் பாராட்ட வேண்டும் என்பான். இங்கோ சொல்லால் அடிக்கிறவர்களும், கல்லால் அடிக்கிறவர்களுமாக இவள் மேல் ஆத்திரப்படுகிறவர்களே கூடியிருக்கிறார்கள். இவள் இப்படிச் செய்வதற்காக இவள் மேல் மட்டும் கோபப்பட்டு என்ன பயன்? இவளைப் பசிக் கொடுமையால் இப்படிச் செய்ய விட்ட சமூகத்துக்கும் இந்தக் குற்றத்தில் பங்கு உண்டு என்றுதான் சத்தியமூர்த்தியால் நினைக்க முடிந்தது. பக்கத்தில் நின்ற ஒருவர் அவனிடம் சொல்லலானார்:

''என்ன அநியாயம் சார்! கலிகாலம் என்கிறது சரியாயிருக்கு பாருங்க. வயிற்றிலே வெறும் பானையைக் கட்டிக் கொண்டு இத்தனை நாட்களாக இந்தப் பாதையில் வந்து போய்க் கொண்டிருக்கிற அத்தனை பேரையும் முட்டாள்களாக்கியிருக்கிறாளே... சார்... அப்படியே அசல் வயிற்றுப் பிள்ளைக்காரி மாதிரி எல்லாரையும் நம்ப வைச்சிப் பிழைப்பை நடத்தியிருக்கா....''

''அவளைக் குற்றம் சொல்லிக் கலிகாலத்தின் தலையில் பழியைப் போட்டு விட்டால் மட்டும் போதாது சார்! உலகம் அவளை அநாதையாய்ப் பிழைக்க வழியில்லாமல் முட்டாளாக்கியிருக்கிறது. அவள் வேறு வழியில்லாத காரணத்தால் உலகத்தை முட்டாளாக்கத் தொடங்கியிருக்கிறாள்'' என்று அவருக்குப் பதில் கூறினான் சத்தியமூர்த்தி. இந்தப் பதிலை அவனிடமிருந்து எதிர்பாராத அந்த மனிதர் அவனை முறைத்துப் பார்த்தார். உலகத்தைப் பார்த்து அதைப் படைத்த கடவுளுக்கே தலை சுற்றுவதாக ஒரு கார்ட்டூன் வரைய வேண்டுமென்று குமரப்பன் அடிக்கடி சொல்லுகிற வாக்கியத்தை இப்போது நினைத்துக் கொண்டான் சத்தியமூர்த்தி. தன்னுடைய துன்பங்கள் பலவாக இருந்தும் இப்படித் தெருவில் சந்திக்கிற சுகதுக்கப் பிரச்னைகளும் தன் இதயத்தைப் பாதிப்பதையோ, உள்ளே புகுந்து எண்ணங்களாக உருவெடுப்பதையோ தவிர்க்க முடியாமல் தவித்தான் அவன். அந்த அப்பாவிப் பிச்சைக்காரப் பெண்ணைக் கூட்டம் கல்லாலடித்தே கொன்று விடாமல் மிகவும் சிரமப்பட்டுப் பேசித் தடுக்க வேண்டியிருந்தது.

''இவரு பெரிசா நியாயத்தைக் கண்டுட்டாருடா... இந்தக் காலத்திலே பெண் பிள்ளையின்னா.... இப்படிப் பரிஞ்சுக்கிட்டு வார்ரவங்க அதிகமாகத்தான் இருப்பாங்க'' என்று சத்தியமூர்த்தியை வம்புக்கு இழுத்தான் ஒரு காலி. நிதானமாகப் பதில் சொல்ல வேண்டியவர்களுக்கு நிதானமாகப் பதில் சொல்லியும் கொதிப்போடு பதில் சொல்ல வேண்டியவர்களுக்குக் கொதிப்போடு பதில் சொல்லியும் கூட்டத்தைக் கட்டுப்படுத்தி அந்தப் பிச்சைக்காரியை அங்கிருந்து தப்பிச் செல்ல வைப்பதற்குச் சத்தியமூர்த்தி மிகவும் பாடுபட்டான். 'நமக்கு ஏன் வம்பு? இப்படித் தெருவில் ஆயிரம் நடக்கும்! ஒன்றையும் கண்டு கொள்ளாதது போல் போவதுதான் நாகரிகம்' என்று எல்லாரும் சாதாரணமாக நினைப்பதுபோல் நினைத்துக் கொண்டு அவனும் வீட்டுக்குப் போயிருந்தானானால் அந்தப் பிச்சைக்காரி குற்றுயிரும் குலையுயிருமாக அங்கேயே அடிபட்டு விழுந்து கிடக்கும்படி நேரிட்டிருக்கும். அப்படி நேரிடும்படி விடுவதற்கு நிச்சயமாக அவன் தயாராக இல்லை. அந்த ஊர் வம்பைத் தலையில் இழுத்துப் போட்டுக் கொண்டு செய்து முடித்து விட்டு அவன் வீட்டுக்குத் திரும்பிய போது இரவு ஒன்பது மணிக்கு மேலாகியிருந்தது. அவன் வீட்டுக்குள் நுழைந்து சட்டையைக் கழற்றி விட்டுக் கிணற்றடிக்குப் போய்க் கைகால் கழுவிச் சுத்தம் செய்து கொண்டு திரும்பிய போது வாயிலில் கார் வந்து நிற்கிற ஓசையும் அதையடுத்து மிதியடி ஓசை சரசரக்க அப்பா நடையேறி வருகிற ஓசையும் கேட்டது.

''பையனை நாளைக்கு என்னை அவசியம் வந்து பார்க்கச் சொல்லுங்கள்..'' என்று கார் வாசலிலிருந்து கிளம்புவதற்குமுன் காருக்குள் இருந்தபடியே கண்ணாயிரம் தன் தந்தையிடம் கூறிவிட்டுச் சென்ற சொற்களும் வீட்டுக்குள்ளேயிருந்து வந்து கொண்டிருந்த சத்தியமூர்த்திக்குக் கேட்டன.

''ஏண்டா! நீ சாயங்காலம் கண்ணாயிரத்தைப் பார்க்க வில்லையா?'' என்ற கேள்வியோடும் கோபத்தோடும் அவனை எதிர்கொண்டார் தந்தை. சிறிதுநேரம்




என்ன பதில் சொல்வதென்று தெரியாமல் தயங்கினான் சத்தியமூர்த்தி. மிகவும் நிதானமாகவும், பொறுமையிழந்து விடாமலும் அவருக்குப் பதில் சொல்ல விரும்பினான் அவன். அந்தக் கேள்விக்கு மறுமொழி சொல்ல அவன் அவ்வளவு நேரம் தயங்குவதைக் கூடப் பொறுத்துக் கொள்ள முடியாத தந்தை இரண்டாவது தடவையாகவும் கடுமையான குரலில் அதே கேள்வியை அவனிடம் கேட்டார்.




''இன்றைக்குப் பார்க்க முடியவில்லை அப்பா! முடிந்தால் நாளைக்குப் பார்க்கிறேன் அப்பா!''

''அந்த வெட்டிப் பயல் வாயரட்டைக் குமரப்பனோடு ஊர் சுற்றிக் கொண்டிருந்தால் நாளைக்கும் நீ கண்ணாயிரத்தைப் பார்க்க முடியாமல்தான் போகும். நான் உன்னை டவுன் ஹால் ரோடில் போகும் போது பார்த்தேன். நீ மட்டும் தனியாயிருந்தால் அங்கேயே காரை நிறுத்தச் சொல்லியாவது பார்த்திருக்கலாம். தவிரவும் நமக்குக் காரியம் ஆக வேண்டுமானால் நாம்தான் தேடிக் கொண்டு போய்ப் பார்க்கணும். இப்படி மனிதர்களை மதிக்காமல் விலகிப்போனால் ஒருகாரியமும்ஆகாது.''

சத்தியமூர்த்தி மௌனமாக நின்று கொண்டிருந்தான். 'தயவுசெய்து கண்ணாயிரத்தை மதிக்கச் சொல்லி என்னை வற்புறுத்தாதீர்கள், அப்பா' என்று தந்தைக்குப் பதில் சொல்லிவிட அவன் நாக்குத் துடித்தது. மிகவும் சிரமப்பட்டுத் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டான் அவன். தந்தை அவன் மேல் கோபத்தோடு ஏதோ முணுமுணுத்துக் கொண்டே விட்டுக்குள் சென்றார். அம்மா சாப்பிடுவதற்கு இலை போட்டுக் கொண்டிருந்தாள்.

ஏதோ சொல்லித் தீர்க்க முடியாத ஊமை வேதனை மனத்தை அரிப்பது போலிருந்தது. அப்படியே சட்டையை எடுத்துப் போட்டுக் கொண்டு மறுபடியும் தெருவில் இறங்கி நடந்து விட்டான் அவன். யாரிடமும் சொல்லிக் கொள்ளவும் இல்லை. அம்மா சாப்பிடுவதற்குத் தேடுவாளே என்றும் கவலைப்படவில்லை. அப்படிப்பட்ட சூழ்நிலையில் வீட்டுக்குள் தங்கினால் தந்தையோடு பேச்சு வளரும் என்று நினைத்தே அவன் புறப்பட்டிருந்தான். வடக்குமாசி வீதியில் கிருஷ்ணன் கோவிலுக்கு எதிர்ப் பக்கத்திலிருந்து பேச்சியம்மன் படித்துறைக்குப் போகிற சாலையில் அவனுடைய வீடு அமைந்திருந்தது. அங்கிருந்து புறப்பட்டுக் கிருஷ்ணன் கோவில் சந்து வழியாக நடந்தான் அவன். மீனாட்சியம்மன் கோவிலுக்குப் போய்விட்டுத் திரும்புவதே அப்போது அவன் நோக்கமாக இருந்தது. கோவில் அந்த நேரத்தில் மிகவும் அமைதியாக இருக்கும். அத்தகைய அமைதி நிறைந்த சூழ்நிலையில் நான்கு ஆடி வீதிகளையும் ஒரு முறை சுற்றி விட்டு வந்தாலே மனம் நிம்மதியடைந்து விடும். சத்தியமூர்த்தி இந்த அநுபவத்தைப் பல முறை உணர்ந்திருக்கிறான். கம்பீரமான அந்தக் கோபுரங்களைக் கால் நாழிகைப் போது இமையாமல் பார்த்துக் கொண்டிருந்தாலே ஓர் உற்சாகம் உண்டாகும். மதுரையின் அந்தக் கோபுரங்களுக்கும் அவற்றையுடைய ஆலயத்துக்கும் அப்படி ஒருசக்தி உண்டு. கோவிலுக்குப் போய்க் கொண்டிருந்த போது வித்துவான் பொன்னுசாமிப் பிள்ளை தெருத் திருப்பத்தில் அவனுக்கு எப்போதோ அறிமுகமாகி யிருந்த






# ஈறு உபாதைகள், பற்சிதைவு போன்ற கோளாறுகளிலிருந்து

# வியக்கத்தக்க பலன்கள்

## தாமாகவே விரும்பி எழுதப்பட்ட கடிதங்கள் பற்களுக்கு நற்பலனளிக்கும் போர்ஹான்ஸ் பற்பசையின் தன்மையை நிரூபிக்கின்றன.



பல ரகமான பற்பசைகளை உபயோகித்த பின்னர், எனது 50 வது வயதில் போர்ஹான்ஸ் பற்பசையை உபயோகிக்கத் தொடங்கினேன். கடந்த 20 வருடங்களுக்கு மேலாக அதை உபயோகித்து நல்ல பலன் அடைந்துள்ளேன். ஒருவேளை, என் 72 வது வயதில் என்னுடைய பற்கள் இயற்கையானபடி வலுவாகவும், சீராகவும் இருப்பதற்குக் காரணம் போர்ஹான்ஸின் மாயவித்தையாகவும் இருக்கலாம்.

ஜி. என்., மதராஸ்

---

நான் தங்களுடைய போர்ஹான்ஸ் பற்பசையை கடந்த 20 வருடங்களுக்கு மேலாக உபயோகித்து வருவதால், எனக்கு இன்று 65 வயதும் 5 மாதங்களும் வயதாகியும் என்னுடைய 32 பற்களும் இன்னமும் வலுவுடனும், ஆரோக்கியத்துடனும் இருக்கின்றன. நாளது தேதிவரை நான் எவ்விதமான பற்கோளாறினாலும் அவதிப்பட்டதில்லை.

டி. என். டி., அஸ்ஸாம்

---

எனக்கு போர்ஹான்ஸினால் ஏற்பட்ட நல்ல பலனைக்கண்டபின், இப்போது என் குடும்பத்தில் எல்லோரும் போர்ஹான்ஸையே உபயோகிக்கிறார்கள். அதற்கு முன்னால், நான் எப்பொழுதும் பல்வலி மற்றும் ஈறு உபாதையால் அவதிப்பட்டுவந்தேன். இப்போது போர்ஹான்ஸின் பயனாக, என் பற்கள் வெண்மையாகவும், உறுதியாகவும், ஈறுகள் வலுவாகவும் இருக்கின்றன பல வருடங்களாகவே, எனக்கு ஈறுகளில் புண் ஏற்பட்டதில்லை. அப்பப்பா! நான் வேறெந்தப் பற்பசையை உபயோகிப்பதாகக் கனவுகூட காணமாட்டேன்.

ஜி. எஸ்., டில்லி

---

* இந் நற்சாட்சிக் கடிதங்களை ஜாப்ரே மானேர்ஸ் & கோ. லிட்., கம்பெனியாரின் எந்த ஆபீஸிலும் காணலாம்.

**ஓர் பல் டாக்டரால் உருவாக்கப்பட்ட பற்பசை ▶**

இதற்கு உகந்த, சிறந்த சேர்க்கைக்கு, **போர்ஹான்ஸ்** *டபிள் ஆக்ஷின்* டூத் பிரஷ் உபயோகியுங்கள்.



இந்த டூத் பிரஷ் மட்டுமே உங்கள் பற்களைச் சுத்தம் செய்வதோடு, ஈறுகளையும் இதமாகத் தடவிக் கொடுக்கிறது.



பாட்டு வாத்தியார் ஒருவர் சந்தித்துப் பேசப் பிடித்துக் கொண்டு விட்டார். தெரு முனையில் வெற்றிலை பாக்குக் கடையில் நின்று கொண்டிருந்தவர் சத்தியமூர்த்தியைப் பார்த்ததும் கூடவே நடந்து பேசிக் கொண்டு புறப்பட்டு விட்டார். ஒருவிதமான குறைவுமில்லாமல் பெயரில் மட்டும் குறைவுபட்டு மொட்டைக் கோபுரம் என்ற பெயரோடு மொட்டையில்லாமல் பூரணமாக நிமிர்ந்து நிற்கும் வடக்குக் கோபுரம் எதிரே தெரிந்தது. கோபுர வாசல் வரை பேசிக் கொண்டே வந்த பாட்டு வாத்தியார் விடைபெற்றுக் கொண்டு போய் விட்டார். மொட்டைக் கோபுரத்து முனியாண்டிக்குச் சிதறு தேங்காய் போடுவதைப் பொறுக்குவதற்கு அடித்துப் பிடித்துக் கொண்டிருக்கும் விடலைக் கும்பலின் கூப்பாடு கூட அப்போது அங்கே அடங்கிப் போயிருந்தது. கோவிலுக்குள்ளேயும் கூட்டம் இல்லை. அவ்வளவு அமைதியை அதற்கு முன்பு பார்த்ததே இல்லை என்று சொல்லும்படி கோவிலின் எல்லாப் பகுதிகளும் இயல்பை மீறின அமைதியோடு இலங்கின. அம்மன் சந்நிதிக்கு முன்புறம் கிளிக்கூட்டு மண்டபத்தினருகே எதிர்பாராத விதமாக மோகினியைச் சந்தித்தான் அவன். கையில் தேங்காய் பழக் கூடையோடு சந்நிதிக்குள் போவதற்காக அவள் அங்கே நின்று கொண்டிருந்தாள். அவளுக்காக அவளோடு வந்திருந்த சிறு பையன் ஒருவன் அர்ச்சனைச் சீட்டு வாங்கிக் கொண்டிருந்தான். அப்போதிருந்த மன நிலையில் அந்த எதிர்பாராத சந்திப்புக்காக ஆச்சரியப்பட்டுக் கொண்டிருக்கவோ, அவளோடு நின்று பேசவோ தோன்றாமல் நேரே சந்நிதிக்குள் நடந்து போய் விட்டான் சத்தியமூர்த்தி. மோகினியும் அவனைப் பின்தொடர்ந்துதான் சந்நிதிக்குள்ளே சென்றாள். யாரையும் எதிரே சந்திக்கவோ, பேசவோ விருப்பமில்லாமல் நைந்து போயிருந்த அந்த மன நிலையிலும் கூடச் சத்தியமூர்த்தியின் கண்களில் அவள் அழகு தனித் தன்மையோடு தெரிந்து கவர்ந்தது. அம்மன் சந்நிதி முகப்பில் பாதரஸம் உருகுவது போல் ஒளி ஒழுகிக் கொண்டிருந்த நீலக் குழல் விளக்குகளின் கீழே நிறங்களே தமக்குள் ஒன்றுபட்டு முயன்று படைத்த அபூர்வ ஓவியமாகத் தோன்றினாள் மோகினி. அவளுடைய இதழ்கள் தன்னோடு பேசி விடத் துடித்துக்கொண்டிருப்பது அவனுக்குப் புரிந்தது. ஆனாலும் ஒன்றும் பேசாமல் அவளைப் பார்க்காதது போலவே முன்னால் நடந்து போய்க் கொண்டிருந்தான் அவன். கருநாகமாய் நீண்டு பின்னிக் கொண்டு தொங்கும் சடைக் குஞ்சலங்கள் ஆட, ஒசைப்படும் வளைகளும், ஓசைப்படாமல் மணக்கும் பூக்களின் மணமுமாக அவள் தன் பின்னால் தனக்கு மிக அருகே நடந்து வந்து கொண்டிருப்பது புரிந்தும் புரியாதது போல் முன்னால் சென்று கொண்டிருந்தான் சத்தியமூர்த்தி. சந்நிதி முகப்பில் பித்தளைக் கிராதியின் இருபுறமும் நின்று எதிரெதிரே ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்ள நேர்ந்த போதும் ஒன்றும் பேசாமல் மெல்லப் புன்னகை மட்டும் செய்தான் அவன். கவனித்ததில் அப்போதும் அவளுடைய உதடுகள் தன்னோடு பேசத் துடித்துக் கொண்டிருப்பது அவனுக்குத் தெரிந்தது. உடன் வந்திருந்த சிறுவன் அவளோடு ஏதோ பேசிக் கொண்டிருந்தான். அவன் கேள்விகளுக்குச் சுவாரசியமில்லாமல் பதில் சொல்லிக்கொண்டிருந்தாள் அவள். அர்ச்சனை முடிந்து அவன் புறப்படுவதற்குள் அம்மன் சந்நிதியின் இரண்டு பிராகாரங்களையும் சுற்றிக் கொண்டு சுவாமி சந்நிதிக்குப் போய் விட நினைத்தான் அவன். ஆனால் அவன் நினைத்தபடி நடைபெறவில்லை. அவளை முந்திக் கொண்டு போய்விட நினைத்த அவன் நினைப்பு வீணாயிற்று. அம்மன் சந்நிதியின் இரண்டாவது திருச்சுற்றில் கொலு மண்டபத்தை நெருங்கிக்கொண்டிருந்த போதே அவனைப் பின்தொடர்ந்தாற் போல் அவள் மிக அருகே வந்து சேர்ந்திருந்தாள்.

''இவ்வளவு நாழிகைக்கு அப்புறம் கோவிலுக்கு வந்திருக்கிறீர்களே ?''— வேறு எதையோ பேச நினைத்து அதைப் பேசுவதற்குச் சொற்களும், துணிவும் கிடைக்காத பதற்றத்தினால் அன்பின் மிகுதியால் பிறந்த ஒருவிதமான பயத்தோடு அவனிடம் இந்தக் கேள்வியைக் கேட்டாள் அவள்.

''இதே கேள்வியை உங்களிடம் திருப்பிக் கேட்டால் நீங்கள் எனக்கு என்ன பதில் சொல்லுவீர்கள்?'' என்று சத்தியமூர்த்தி அவளைத் திரும்பிப் பார்த்து வினவிய போது அவள் சிரித்தாள். முகமும் இதழ்களும் கனிந்து சிவந்தன. இந்த நாணத்தின் சுவடு முகத்திலிருந்து மறைவதற்கு முன்பாகவே, அவள் தன்னை நேருக்கு நேர் பார்க்கக் கூசியபடி வேறு எங்கோ பார்த்துக் கொண்டே சொல்லிய மற்றொரு வாக்கியம் சத்தியமூர்த்தியின் இதயத்தைத் தொட்டு உணர்வு நெகிழும்படி செய்தது. ''உயிரைக் கொடுத்த தெய்வத்தைத் தரிசிக்க வந்தேன். அப்படி வந்த இடத்தில் உயிரைக் காப்பாற்றிய தெய்வத்தின் தரிசனமும்

கிடைத்திருக்கிறது....'' என்று சொல்லி விட்டு மேலே நடக்கத் தோன்றாமல் நின்றாள் அவள். சத்தியமூர்த்தி தன்னைத் தானே வெறுத்துக் கொள்கிற குரலில் அவளுக்கு மறுமொழி கூறினான்:

''என்னையா தெய்வமென்று சொல்கிறீர்கள்? நான் துயரங்களும் தேவைகளும் நிறைந்த வெறும் மனிதன். பலவீனங்களும் தோல்விகளும் நிறைந்த ஏழை. ஏமாற்றங்களுக்கும் வேதனைகளுக்கும் ஆட்பட்டுத் தவிக்கிற பாமரன். சாண் ஏறினால் முழம் சறுக்கித் தொல்லைப் படுகிறவன். கண்ணாயிரத்தைப் போல் எல்லா விதமான வசதிகளும் உள்ளவர்கள்தாம் இன்றைய சமூகத்துக்குத் தெய்வமாகிற தகுதி உடையவர்கள்... நானும் என்னைப் போன்றவர்களும்கூட அவர்களிடம் வேலைக்குச் சிபாரிசு தேடிக் கொண்டு போய் நிற்க வேண்டிய அளவு வசதியற்றவர்கள்...''

''அந்தப் பாவியின் பெயரை இப்போது எதற்கு எடுக்கிறீர்கள்? காலையில் கூந்தல் தைல விளம்பரத்துக்காகப் புகைப்படம் எடுக்கிறபோதே அந்தப் பாவிக்கும் எனக்கும் தகராறு வந்தது. அவன் ஏதோ ஒரு சேலையைக் கொண்டு வந்து கொடுத்து 'இதைக் கட்டிக் கொண்டால் தான் படம் எடுக்க நன்றாயிருக்கும்' என்றான். நான் பிடிவாதமாக மறுத்து விட்டேன். கடைசியில் நான் சொல்லியபடிதான் அவன் படம் பிடித்துக் கொள்ள வேண்டியதாயிற்று. இதனால் அம்மாவுக்கு என் மேல் ஒரே ஆத்திரம். நான் அந்தப் பாவி சொல்கிறபடிதான் கேட்க வேண்டுமென்கிறாள் அம்மா....''

''வயிறு நிரம்ப வேண்டுமானால் யார் சொல்கிறபடியாவது கேட்டுத்தான் ஆக வேண்டும்.... ஏற்றுக் கொள்வதற்குக் கடுமையாகவும் வேதனையளிப்பதாகவும் இருந்தாலும்கூட இதுதான் வாழ்க்கையைப் பற்றிய உண்மை....''

''அப்படிச் சொல்லாதீர்கள். என் வாழ்க்கையில் நான் பார்த்த — பார்த்துக் கொண்டிருக்கிற ஒரே உண்மை நீங்கள்தான்....''



''இருக்கலாம்! ஆனால் 'இந்த உண்மை' மிகவும்ஏழையாயிருக்கிறதே?''

''ஆதரவற்றதெல்லாம் ஏழைதான். அந்த விதத்தில் உண்மையும் ஏழையாயிருப்பதில் தவறில்லை...'' என்று சொல்லிச் சிரித்துக் கொண்டே சுற்றும் முற்றும் யாராவது வருகிறார்களா என்று பார்த்து விட்டுச் சத்தியமூர்த்தியே எதிர் பார்த்திருக்க முடியாதபடி கீழே குனிந்து தேங்காய் பழத்தட்டை வைத்து விட்டு அவசரம் அவசரமாக அவன் பாதங்களைத் தொட்டுக் கண்களில் ஒத்திக் கொண்டு எழுந்தாள் மோகினி. சத்தியமூர்த்திக்கு மெய்சிலிர்த்தது. பிராகாரத் திருப்பத்தில் இது நிகழ்ந்தது. மோகினியோடு வந்திருந்த சிறுவன் முன்னால் நடந்து போயிருந்தான். அவர்களும் அவன் பின்னால் மெல்ல நடந்து சென்றார்கள்.

''இரயிலில் நீங்கள் வந்த பெட்டியில் நானும் சேர்ந்து வந்ததைப் பார்த்து விட்டே பொறுமையிழந்து போய் என்னிடம் கேள்விகளைக் கேட்டார்கண்ணாயிரம். இப்போது இந்தக் கோயில் பிராகாரத்தில் நாமிருவரும் சேர்ந்து நடப்பதை அவர் பார்த்தால்என்னைக்கொலையே பண்ணி விடுவார்.''

''திரும்பத் - திரும்ப அந்தப் பாவியைப் பற்றியே பேசிக் கோவிலைக் களங்கப் படுத்தாதீர்கள். அந்தக் கொடியவனைப் பற்றிப் பேசுவதற்குக் கோவிலைப் போல் புனிதமான இடம் தகுதியான இல்லை....''

இப்படிக் கண்ணாயிரத்தைப் பற்றிப் பேசும்போதெல்லாம் அவள் குரலும் முகமும் சீற்றமடைவதையும் கண்கள் சினம் கனலுவதையும் பார்த்துச் சத்தியமூர்த்தியே மருண்டான். வாழ்க்கையின் தீய சக்திகளை எதிரே சந்திக்கவும் பொறுத்துக் கொள்ளவும் முடியாமல் குமுறுகிற இவளையும், தீய சக்திகளையும் பொறுத்துக் கொண்டாவது காரியங்களைச் சாதித்துக் கொள்ள வேண்டுமென்று நினைக்கும் இவள் தாயையும் தன் மனத்துக்குள் சத்தியமூர்த்தி ஒப்பிட்டுச் சிந்தித்தான். எப்போது பேசினாலும் அவள் பேசுகிற வாக்கியங்களில்



தனி முத்திரையும் பேசப்படுகிற வரை மயக்கி விடுந் தன்மையும் வாய்ப்பதையும் கூட அவன் தொடர்ந்து கவனித்துக் கொண்டு வந்தான்.

'என்ன மயக்கம் வேண்டிக் கிடக்கிறது? அழகில்லாமல் முகத்தில் அரிதாரமும் பூசிக் கொள்ளாமல் மாசி வீதி ஆலமரத்தடியில் சந்தித்த பிச்சைக்காரியைப் போல் பசிக் கொடுமைக்காக வயிற்றில் பானையைக் கட்டிக் கொண்டு கர்ப்பிணியாகத் தோன்றிப் பிறரை மயக்க முயல்கிறவர்கள் அகப்பட்டுக் கொண்டால் கல்லெறிபடுகிறார்கள்.

இந்த உலகமும் வசதி உள்ளவர்கள் பொய்யாக மயக்குவதைத்தான் மன்னிக்கத் தயாராக இருக்கிறது. வசதி அற்றவர்கள் அதே காரியத்தைச் செய்யும்

ஒரு சமயம் நபிகள் நாயகம் தம் நண்பர்களுடன் விருந்துண்டார். அவர் அருகில் அவருடைய மருமகன் அலி அமர்ந்திருந்தார்.

நபிகள் தாம் மென்று தின்ற பேரீச்சம் பழங்களின் கொட்டைகளை மருமகன் முன்னால் போட்டு விட்டுக் குறும்புத்தனமாக, ''இதோ பாருங்கள்! இந்தப் பந்தியில் சில பேர்கள் இரண்டு பங்கு பேரீச்சம் பழங்களைத் தின்றிருக்கிறார்கள்'' என்றார்.

இதைக் கேட்டதும் ''இங்கே வேறு சிலர் பேரீச்சம் பழங்களைக் கொட்டையோடு விழுங்கியிருக்கிறார்களே! நீங்கள் பார்க்கவில்லையா?'' என்றார் அலி.

போது அகப்பட்டுக் கொள்கிறார்களே....' என்று வெறுப்பான வழியிலும் அவன் சிந்தனை சிதறி ஓடியது. ஒன்றும் பேசிக் கொள்ளாமல் பிராகாரத்தில் போய்க் கொண்டிருந்தார்கள் அவர்கள். மோகினியோடு சேர்ந்து இணையாக நடக்காமல், அவளுக்குப் பத்தடி முன்பாகவோ, பின்பாகவோ விலகி நடந்து போக வேண்டுமென்று தன்னால் ஆனமட்டும் சத்தியமூர்த்தி முயன்று பார்த்தான். அவன் வேகமாக நடந்தால் அவள் நடையும் வேகமாகியது. அவன் மெதுவாக நடந்தால் அவள் நடையும் மெதுவாகியது. இலட்சணமான தேர் அலங்கரிக்கப்பட்டு வீதியில் வருவது போல் அவள் நடப்பது மிக நன்றாயிருந்தது.

அம்மன் சந்நிதியிலிருந்து சுவாமி சந்நிதிக்குள் போகிற வழியில் நகர முடியாமல் உட்கார்ந்து கொண்டிருக்கும் பிரம்மாண்டமான முக்குறுணியரிசிப் பிள்ளையாரைக் கடந்து வலது பக்கத்தில் தொடங்கும் பெரிய பிராகாரத்தில் இப்போது போய்க் கொண்டிருந்தார்கள் அவர்கள்.

''நீங்கள் ஒரு நாள் எங்கள் வீட்டுக்கு வரவேண்டும். அப்போது உங்கள் முன்னிலையில் நீங்கள் மட்டுமே காணும்படி ஆண்டாள் பாசுரத்துக்கு அபிநயம் பிடித்து ஆடிக் காட்டுவேன் நான்.''

கெஞ்சுவது போன்ற குரலில் அவள் அவனிடம் இந்த வேண்டுகோளைச் சொல்லும்போது அவர்கள் சங்கத்தார் கோவிலைக் கடந்து வடக்குப் பிராகாரத்தில் புகுந்திருந்தார்கள். பிராகாரம் அதன் அடுத்த நுனி வரையில் வேறு மனித சஞ்சாரமே இல்லாமல் வெறிச்சோடிக் கிடந்தது. சத்தியமூர்த்தி அவளைக் கேட்டான்:

''உங்கள் வீடு எங்கே இருக்கிறது?''

''சங்கீத விநாயகர் கோவில் தெரு என்று வடக்கு மாசி வீதியிலிருந்து இந்தக் கோவிலுக்கு வருகிற வழியில் ஒரு சிறிய சந்து இருக்கிறதே; தெரியுமா?'' இந்த வினாவுக்குச் சத்தியமூர்த்தியிடமிருந்து பதில் இல்லாமற் போகவே அவளே மீண்டும் பேசலானாள்:

''வித்துவான் பொன்னுசாமிப்பிள்ளை சந்துக்கு மேற்குப் பக்கமாக மறுபுறம், தானப்ப முதலி தெருவில் போய் முடிகிற மாதிரி ஒரு தெரு இருக்கிறதே; ஞாபகமில்லையா உங்களுக்கு ?....''

''ஞாபகம் இருக்கிறது. ஆனால் அதுதான் நீங்கள் சொல்கிற தெருவா என்பதுதான் நினைவில்லை! நான் உங்கள் வீட்டையோ, தெருவையோ விசாரித்து வைத்துக் கொண்டும் பயனில்லை. காரணம்; இன்றுவரை நாடகம், நாட்டியம், சங்கீதம் போன்ற நளின கலைகளைச் சிறிதும் இரசிக்கத் தெரியாமல் வாழ்க்கையின் கஷ்டங்களையே இரசித்து வளர்ந்து விட்ட ஒருவனிடம் வந்து நீங்கள் உங்களுடைய ஆண்டாள் நாட்டியத்தைப் பார்க்க வரும்படி கூப்பிடுகிறீர்கள்.''

''கூப்பிட வில்லை. கட்டாயமாக அழைக்கிறேன். அதை நீங்கள்தான் பார்க்க வேண்டுமென்று என் அந்தரங்கம் ஆசைப்படுகிறது.''

''உலகத்திலேயே மிகவும் ! ஏழையான ஒருவனை நீங்கள் சிரமப்பட்டு அழைக்கிறீர்கள்....''

''அதுதான் சொன்னேனே; ஆதரவற்றதெல்லாம் ஏழைதான். அந்த விதத்தில் உண்மையும் ஏழையாயிருப்பதில் தவறில்லை. நீங்களே ஏழையானால் உங்களால் காப்பாற்றப்பட்ட நான், உங்களைவிடப் பெரிய ஏழை.''

அவள் இவ்வாறு கூறிக் கொண்டே கண்களில் நீர் நெகிழச் சத்தியமூர்த்தியை ஏறிட்டுப் பார்த்தாள். சத்தியமூர்த்திக்கு அந்தப் பேதையின் இதயம் ஒருவாறு புரிந்தது.

அன்று இரவு அவன் கோவிலிலிருந்து வீடு திரும்பியபோது இரவு நெடு நேரமாகி யிருந்தது. பின்னை சாப்பிடாமலும் சொல்லிக் கொள்ளாமலும் போய்விட்டதனால் அம்மா வீட்டு வாசலிலேயே அவன் வரவை எதிர்பார்த்துக் காத்திருந்தாள். சொல்லிக் கொள்ளாமலும் சாப்பிடாமலும் வெளியே போனதற்காக அம்மா அவனிடம் ஏதேதோ சொல்லி வருத்தப்பட்டாள். ஒன்றும் பதில் பேசாமல் ஏதோ பேருக்குச் சாப்பிட்டு விட்டுத் திண்ணையில் வந்து பாயை விரித்துப் படுத்தான் அவன். (தொடரும்)




உங்கள் சரும நிறத்தோடு நேர்த்தியாக இணைந்து, சருமத்தின் இயற்கை எழிலைப் பளிச்சிடச் செய்கிறது பரிபூரணமான லக்மே முகப் பவுடர். அதன்மூலம் மேனி எழில் பெறும் மாசற்ற மெருகினை நீங்கள் விரும்புவீர்கள். 3 சைஸ்கள் ... மேனி நிறத்துக்குப் பொருத்தமான நேசுரல், ராசேல், கோல்டன்பீச், ரோஸ்கோரல், ஸன் டான், க்ளோயிங் அம்பர் என்னும் 6 வித நிறங்களில் கிடைக்கிறது.

# லக்மே

முகப் பவுடர்

# கோலா

பெயரைப் பார்த்ததும் சோடா கலர் விற்கும் கடையில் கிடைக்கும் ஒருவகைப் பானத்தின் நினைவு தானே வருகிறது உங்களுக்கு? ஆனால் படத்தைப் பார்த்ததும் புரிந்துகொண்டிருப்பீர்கள். ஆஸ்திரேலியாவில் வாழும் ஒருவகை மிருகம் கோலா. இது பார்வைக்குக் கரடியைப் போல இருப்பதால் இதை ஆஸ்திரேலியக் கரடி, 'டெடிபேர்' என்றும் அழைப்பார்கள். ஆனால் இது கரடி இனத்தைச் சேர்ந்ததல்ல. கங்காருவைப் போலவே இதற்கும் குட்டிகளைச் சுமக்க வயிற்றில் பையுண்டு. இந்தப் பையின் வாய் வால் பக்கமாகத் திறக்கும் தன்மையது.

பெரிய காதுகள், பளபளக்கும் பெரிய மூக்கு, சிறிய ஆனால் பிரகாசமான கண்கள், விநோதமான முக பாவம் - இதுதான் கோலாக் கரடியின் தோற்றம். இது முழுக்க முழுக்க மரங்களில்தான் வசிக்கும். கோலா என்றால் ஆஸ்திரேலிய நாட்டுச் சுதேசி மக்களின் மொழியில் 'தண்ணீர் குடிக்காத பிராணி' என்று பெயர். கோலா நீர் நிலைகளுக்குச் சென்று மற்றப் பிராணிகளைப் போலத் தண்ணீரை உறிஞ்சிக் குடிப்பதில்லை. அது மட்டுமல்ல. இதற்குத் தண்ணீரே வேண்டியதில்லை. மழைத் திவலை, பனித் துளி இவையே இதற்குப் போதுமானது. இதன் ஆகாரம் யுகலிப்ட்ஸ் மரத்தின் இலைகள்தான். வேறு எதையும் இது உண்பதில்லை. ஒரு நாளைக்கு ஒரு கோலா இரண்டரை பவுண்டு நிறையுள்ள யுகலிப்ட்ஸ் இலைகளைத் தின்னும். நன்றாக வளர்ந்த கோலா மூன்றடி நீளமும் முப்பத்தைந்து பவுண்டு நிறையும் உடையதாக இருக்கும். இரண்டு வருடத்துக்கு ஒருமுறை ஒரு குட்டி போடும்.



குட்டிகள் பிறக்கும்போது ஓர் அங்குல நீளமும், ஒரு காகிதப் பென்சிலின் கனமும் தான் இருக்கும். ஆறு மாதங்களுக்குப் பிறகு தான் தாயின் வயிற்றுப் பையிலிருந்து இந்தக் குட்டி வெளி வருகிறது. பையில் உள்ளபோது இதற்குக் கண்கள்கூடத் திறந்திருக்காது. இதற்குப் பிறகு ஒரு வருஷம் வரை தாய்க் கோலாவின் முதுகில் குட்டி கோலா தொத்திக் கொண்டே வாழும். காடுகளில் கோலாக்கள் கூட்டமாக வாழும் போது, தாய்க் கோலாக்களின் முதுகிலுள்ள குட்டிக் கோலாக்கள் தாற்காலிகமாக முதுகைவிட்டுக் கீழிறங்கித் தாயின் அருகில் விளையாடிக் கொண்டிருக்கும். பால் குடிக்கும் நேரம் வந்ததும் குட்டிகள் அருகில் உள்ள வேறு எந்த அம்மாக் கோலாவிடமும் போய்ப் பால் குடிக்கும். தாய்க் கோலாக்களும் இது தன் சொந்தக் குழந்தை இல்லை என்பதனால் பால் கொடுக்காமல் விரட்டியடிக்காது. குட்டி போட்டுப் பால் தரும் 'மம்மல்' என்ற இனத்து மிருகங்களுக்குள் இந்தப் பழக்கம் புதுமையானது. கோலாக்களிடம்தான் இதைக் காண முடிகிறது. பால் ஊட்டியானதும் முதுகில் சவாரி செய்வதற்கு மட்டும் கோலாக் குட்டிகள் தங்கள் சொந்தத் தாயாரைத் தேடிப் பிடித்துத் தொத்திக் கொள்ளுகின்றன. ஆஸ்திரேலியாவை விட்டு எங்கு கொண்டு போனாலும் கோலாக்கள் அதிக நாட்கள் உயிர் வாழ்வதில்லை. காரணம் இதன் ஆகாரம்தான். கோலாக்கள் இருபது வருஷங்கள் வரை உயிர் வாழக் கூடியவை. இதன் அழகான தோற்றத்துக்காகவே மேனாட்டினர் குழந்தைகள் விளையாடி மகிழப் பொம்மைகளில் இதன் உருவத்தைப் போலச் செய்து குவித்திருக்கிறார்கள்.



**உங்கள் ஆல்பத்துக்கு:**

பர்மாவின் கிழக்குப் பகுதியில் வாழும் 'காரன்' என்ற வகுப்பைச் சேர்ந்த பெண் இவள். முழங்கை முழங்கால் வரை வளையல்களும், காப்புக்களும் அணிந்திருப்பதைப் பாருங்கள்.

# வெளவால் பொம்மை






உங்களில் ரொம்பப் பேர் வெளவால் என்று படித்திருப்பீர்களே தவிர அதைப் பார்த்திருக்க மாட்டீர்கள். உண்மைதானே? உங்களுக்காகவே இப்போது காகித வெளவால் செய்வதைச் சொல்லித் தரப் போகிறேன். வழக்கப்படி காட்ரிட்ஜ் காகிதத்தை எடுத்து கட்டங்கள் போட்டு இங்குள்ள மாதிரிகளைப் போல வரைந்து கொள்ளுங்கள். அரை அங்குலக் கட்டத்துக்குப் பத்தரை அங்குல நீளமுள்ள வெளவால் கிடைக்கும். இறக்கைப் பகுதியை இரண்டாக மடித்த காகிதத்தின் மடிப்பின் ஓரத்தில் வரைந்து கொள்ள வேண்டும்.

முதலில் உடல் பகுதியை வரைந்து வெட்டிக் கொள்ளுங்கள். புள்ளிக் கோடுள்ள இடங்களில் பேனாக்கத்தியின் பின்பக்கத்தால் அழுத்திக் கோடு கிழித்துக் கொள்ளுங்கள். காதின் நடுவிலுள்ள புள்ளிக் கோட்டில் எதிர்ப்பக்கமாகக் கீறிக் கொள்ளுங்கள். 'P' என்று குறித்துள்ள இடங்களில் ஊசியால் சிறு துவாரம் செய்து கொள்ளவேண்டும்' இனி உடல் பகுதியைக் குழல் போலச் சுருட்டுங்கள். இதற்கு முதலில் இதை ரூல்தடியின் கீழ் வைத்துக் கொண்டு இரண்டு மூன்று தடவை இழுத்து உருவ வேண்டும். இதனால் காகிதம் தானாகவே வளைந்து கொடுக்கும். வளைத்துச் சுருட்டி 'G - Y' என்ற ஓரத்தை அதன் எதிர் பக்கத்தோடு ஒட்டி விடுங்கள். தலையை உடலின் முன்பக்கமாகக் காதின் மீது இழுத்து வளைத்து 'P' என்ற துவாரங்களில் பித்தளைக் குமிழ் காகிதக் கிளிப்பை நுழைத்து ஒன்று சேர்த்து மடக்கி விடுங்கள்.

இனிக் காகித மடிப்பின் ஓரத்தில் இறக்கைகளை (A B) வரைந்து கொண்டிருக்கிறீர்களல்லவா? இதைக் கத்திரித்து எடுத்துக் கொள்ளுங்கள். இரண்டாகப் பிரித்துப் புள்ளிக் கோடுகளின் மீது கீறி மடிப்பு உண்டாக்கிக் கொள்ளுங்கள். இறக்கையின் மடிப்புக்கள் இருபக்கமும் ஒரே மாதிரி இருக்க வேண்டும். இதைக் கவனமாகப் பார்த்துக் கொள்ள வேண்டும். X என்று குறித்துள்ள இடத்தில் ஒரு துவாரம் செய்து அதில் ஒரு கயிற்றை நுழைத்து வெளவால் உருவத்தைக் கட்டித் தொங்க விடுங்கள். இதற்குமுன் உடலின் மேல் பகுதியில் இறக்கைப் பகுதியை மையத்தில் ஒட்டி ஒன்று சேர்த்திருக்க வேண்டும். இப்போது கீழேயுள்ள படத்தில் இருப்பது போன்ற வெளவால் பொம்மை உங்களுக்குக் கிடைத்திருக்குமே? அறையின் இருண்ட பகுதியில் இதைத் தொங்க விட்டால் நிஜ வெளவாலே பறந்து வருவது போலிருக்கும். 'காகிதமும் கத்திரிக்கோலும்' பகுதியில் இது வரை வெளிவந்துள்ள மிருகங்களின் உருவங்களை யெல்லாம் கவனமாகச் செய்து வைத்தால் ஒரு காகிதப் பொம்மைப் பொருட் காட்சியையே உருவாக்கி விடலாமே !

## திருடன் அகழியைக் கடந்தான்

சிறையிலிருந்து தப்பிய திருடன் குழப்பபடியான குறுகிய சுவர்களையுடைய பாதையில் வழி கண்டு



பிடித்து எப்படி வெளியேறினான் என்பதை மேலேயுள்ள படத்தில் காண்கிறீர்கள். இருட்டில் சுவரைத் தடவியபடியே சென்று வெளியேறும் வழியான 'B'யை அடைந்து விட்டான். அங்கு போனதும் அகழி ஒன்று குறுக்கே இருந்தது. அதைக் கடப்பது எப்படி? சுற்றுமுற்றும் பார்த்தான் திருடன். அகழியின் கரை ஓரத்தில் ஒரு சிறு படகு மிதந்து கொண்டிருந்தது. அதை வலிக்கத் துடுப்புக்கள் இல்லை. கைகளால் நீரைத் தள்ளிப் படகை உந்தலாமென்றாலோ நீரின் சலசலக்கும் சப்தம் காவல்காரரை எழுப்பி விடும். ஆகவே அது சாத்தியமல்ல. அப்படியானால்? படகில் ஒரு துண்டுக் கயிறு கிடந்தது. அதை பார்த்ததும் திருடனின் கண்களில் பிரகாசம் தோன்றியது. அந்தக் கயிற்றின் உதவியால் அகழியைக் கடந்து விடத் திட்டமிட்டான். அது எப்படி? படகை ஓட்டக் கயிறு எப்படி பயன் பட்டது? யோசியுங்கள்.



# மறக்க முடியாத திரைப்படங்கள்

### முதல் அதிசயம்

சமூகப் படத்தில் நடித்துப் பெயரெடுப்பதற்குக் கதையின் பல சிக்கல்களும் 'சஸ்பென்ச'களும் துணை செய்யும். ஆனால் இதிகாச, புராணக் கதைகளில் இத்தகைய வாய்ப்புக்களுக்கு இடமில்லை. கதை அநேகமாக எல்லாருக்கும் தெரிந்த கதை. பாத்திரங்களின் குண விசேஷங்களும் மாற்றியமைக்க வழியில்லாதவை. ஆகவே, புராணப் படங்களில் நடித்துப் புகழ் பெறுவது சிரமம்.

இந்த அதிசய சாதனையை 1934ம் ஆண்டு ஒரு தமிழ்ப் படம் சாதித்து வெற்றிக் கொடி நாட்டியது. பிரபாத் கம்பெனியாரின் ''சீதா கல்யாணம்''தான் அந்த வெற்றிப் படம்.

### இரண்டாவது அதிசயம்

இப்படத்தில் நடித்தவர்கள் அநுபவம் பெற்ற தொழில் நடிகர்கள் அல்லர். எல்லோரும் அமெச்சூர்கள். காமிராவின் எதிரில் முன்பின் நின்று அறியாதவர்கள்.

### மூன்றாவது அதிசயம்

இரண்டொரு பெரிய நடிகர்களைத் தவிர மற்றவர்கள் யாவரும் பள்ளி மாணவ, மாணவிகள். அத்துடன் இன்னொரு முக்கியமான விஷயம் என்னவென்றால் நடிகர்களில் முக்கியமானவர்களெல்லாம் ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். (ஆகவே இதை ஒரு குடும்பப் படம் என்று கூறுவதில் சிறிதும் தவறில்லை!)

### நான்காவது அதிசயம்

படம் முழுவதையும் (சுமார் நான்கு மணி நேரம் ஓடும் படம்!) மாணவ நடிகர்களுக்கு வசதியாகப் பள்ளி விடுமுறைக் காலத்திலேயே முடித்து விட்டனர். பள்ளி மாணவ நடிகர்களானாலும் நடிப்பில் கற்றுக்குட்டிகளில்லை, கைதேர்ந்தவர்கள் என்பதைக் குழந்தைகள் நிரூபித்தனர்.



திரைக் கதை, வசனம், பாடல்கள் ஆகியவற்றின் பொறுப்பை ஏற்று எல்லாருக்கும் திருப்தியளிக்கும்விதத்தில் நிறைவேற்றியவர் ஸ்ரீ பாபநாசம் சிவன் அவர்கள். படத்தில் மொத்தம் இருபது பாடல்கள்.

சீதா கலியாணத்தில் யார் யார் என்னென்ன பாத்திரங்களை ஏற்றார்கள் என்பது தெரிய வேண்டாமா?

மாஸ்டர் ராஜம்:— ராமன்
மாஸ்டர் குஞ்சிதம்:— லக்ஷ்மணன்
வக்கில் சுந்தரமய்யர்:— ஜனகர்
சீதாராமய்யர்:— தசரதன்
குமாரி ஜயா:— சீதை
குமாரி சரஸா:— ஊர்மிளை

# சீதா கல்யாணம்

மிகக் குறைந்த தொகைக்கு வக்கீல் சுந்தரமய்யரின் குடும்பத்தை 'புக்' செய்து கோலாப்பூருக்கு அழைத்துப் போனார்கள் தயாரிப்பாளர்கள். ஏதோ பள்ளிக்கூட 'எக்ஸ்கர்ஷன்' போலிருந்தது சிறுவர்களுக்கு.

வக்கில் சுந்தரமய்யரின் மூத்த குமாரனான மாஸ்டர் ராஜம் சங்கீத வித்வத் சபை நடத்திய பாட்டுப் போட்டியில் முதல் பரிசு பெற்றவன். அவன் பாடிய ''நல்விடை தாரும்'', ''கானகம் எது ஸ்வாமி?'' என்ற பாடல்கள் எப்பொழுதோ கேட்டவையாயினும் இன்னும் செவிகளில் ஒலிக்கின்றன. ஸ்ரீ ராமலக்ஷணங்கள் பரிபூரணமாக அமையப் பெற்ற மாஸ்டர் ராஜம் ராக லக்ஷணங்களையும் குறைவின்றிப் பாடியது அந்த நாளில் நல்ல புகழைத் தேடித் தந்தது. மாஸ்டர் ராஜம், இப்பொழுது பிரபல ஒலியரும் அகில இந்திய ரேடியோவைச் சேர்ந்தவருமான எஸ். ராஜம்தான். வக்கில் சுந்தரமய்யரின் மூத்த குமாரி ஜயா (அதாவது மாஸ்டர் ராஜத்தின் தங்கை) சீதையாக வந்தாள். இதை அக்காலத்தில் சிலர் குற்றமெனக் கருதி தர்க்கம் புரிந்தார்கள், நடிப்பவர்கள் கள்ளங் கபடறியாத குழந்தைகள் என்பதனை மறந்து.

இதிகாச காலத்தை நினைவூட்டும் ரூப சௌந்தரியம், கவையூட்டும் சம்பாஷணைகள், இனிமை ததும்பும் பாட்டு, இவ்வளவும் இருந்துவிட்டால் சீதைப் பாத்திரத்தின் வெற்றிக்குக் கேட்க வேண்டுமா? சிறுவர் சிறுமியருக்கு அதிக சிரமம் தராமல் அவர்களுக்கு ஏற்கெனவே பாடிப் பழக்கமாயிருந்த பாடல்களின் இசைக்கேற்ப புதிய பாடல்களை அமைத்துத் தந்தார் சிவன். பிறகு என்ன, குழந்தைகள் ஜமாய்த்துவிட்டார்கள்!

ஜயாவின் தங்கை சரஸாதான் ஊர்மிளை. அக்காவுக்கு ஏற்ற தங்கை. அவளது கல



கலப்பான பேச்சும், சிரிப்பும் என்றுமே மறக்க முடியாதவை.

தசரதருக்குப் பொருத்தமானவர் இவர் தான் என்ற பெயரை அநாயாசமாகத் தட்டிக் கொண்டார் சீதாராமய்யர். 'வக்கீல் சுந்தரமய்யர் மட்டும் கிடைத்திராவிட்டால் ஜனகர் பாத்திரத்தையே எடுத்துவிட வேண்டியதுதான்' என்று படம் பார்த்தவர்கள் பேசிக் கொண்டனர். அவ்வளவு அருமையான வேஷப் பொருத்தம், நல்ல நடிப்பு. சீதாராமய்யரின் புதல்வன் மாஸ்டர் குஞ்சிதம் லக்ஷ்மணனாக வந்து நன்றாக நடித்தான்.

சீதா கலியாணம் படத் தயாரிப்புக்கு முக்கியமாக இருந்தவர் காலஞ்சென்ற ஜி. கே. சேஷகிரி. கலையார்வம் மிக்கவர். அவர்தான் படத்தில் ராவணன்.

ராவண தர்பாரில் ஆறு வயதுச் சிறுவனான மாஸ்டர் சந்துருவின் கஞ்சிராக் கச்சேரிப் போட்டியைக் குறிப்பிட வேண்டும். (மாஸ்டர் ராஜத்தின் தம்பி சந்துரு. தற்சமயம் பிரசித்தி பெற்ற சினிமா நடிகர் — டைரக்டரான எஸ். பாலசந்தர்தான் சந்துரு! 'அவனா இவன்?' என்று ஆச்சரியப்படுகிறீர்கள் அல்லவா?)

கஞ்சிராப் போட்டிக் காட்சி படப் பிடிப்பு நடந்த போது மாஸ்டர் சந்துரு உற்சாக மிகுதியினாலும் போட்டியில் வெல்ல வேண்டும் என்ற வேகத்தினாலும் மேடையில் நகர்ந்து நகர்ந்து ரொம்பவும் முன்னுக்கு வந்துவிடுவானாம். முன்னுக்கு வரக்கூடியவன் என்பதை அன்றைக்கே நிரூபித்திருக்கிறான் சந்துரு! அவனை ஒரே இடத்தில் அமர்ந்து வாசிக்கச் செய்வதற்காக டைரக்டர் சாக்பீஸினால் ஒரு வட்டம் போட்டு அதிலேயே இருந்து வாசிக்க வேண்டும் என்று உத்தரவிட்டுக் கட்டுப்படுத்தினாராம்!

விசுவாமித்திரர் ஸ்ரீ ராம லக்ஷ்மணர்களைக் கானகத்துக்கு அழைத்துச் சென்றதைத் தத்ரூபமாகக் காட்டுவதற்காக நிஜக் காட்டுக்கே போய் விட்டார்கள்! பூனாவுக்கு அருகிலுள்ள பனாலா வனப் பிரதேசம்தான் அது. படப் பிடிப்பின்போது வெய்யிலின் வரவுக்காக எல்லோரும் காத்திருப்பார்களாம். ஏன் என்று கேட்கிறீர்களா? வெய்யிலில்தான் படம் எடுக்க முடியும். இந்தக் காலம் மாதிரி இரவைப் பகலாக்கும் சாதனங்கள் அந்தக் காலத்தில் இல்லை. படப் பிடிப்புக்கு இடையில் மேகம் கவிந்துகொண்டால் நடிகநடிகையர் நடிப்பை நிறுத்தி விட்டு, மேகம் நகர்ந்து போகத் தவங்கிடக்க வேண்டியதுதான்!

ஸ்ரீராமர் விஷ்ணுரூபமாகமாறும் காட்சியில் மாஸ்டர் ராஜத்துக்குப் பின்னால் இன்னொரு சிறுவன் மறைவாக வந்து தன் இரண்டு கைகளிலும் சங்கு சக்கரம் ஏந்தி நின்று உதவினானாம்! எப்படி அக்காலத்துத் தந்திரக் காட்சி!

பிரசித்தி பெற்ற வடநாட்டு டைரக்டரான பாபுராவ் பெண்டர்க்கர்தான் சீதா கலியாணத்தை டைரக்ட் செய்தவர்.

காட்சி நிர்மாணங்கள் ''சீதா கலியாண''த்தில் மிகச் சிறப்பானவையா யிருந்தன. இதற்கு ஒரு காரணம் உண்டு. ஏராளமான பொருட்செலவில் இப்படத் தயாரிப்பாளர் ஹிந்தியில் வேறு ஒரு படம் தயாரித்துக்கொண்டிருந்தார். அப்படத்துக்காகப் போடப்பட்ட செட்டிலேயே பரீட்சார்த்தமாகக் குறைந்த



செலவில் ஒரு தமிழ்ப் படமும் எடுத்து வைப்போமே என எண்ணினார். கடைசியில் என்ன நடந்தது தெரியுமோ? பணத்தைக் கொட்டி எடுத்த ஹிந்திப் படம் அவரைக் கைவிட்டு விட்டது! சீதா கல்யாணம் சக்கை போடாக ஓடி அந்த நஷ்டத்தை ஈடு செய்தது!

''சீதா கலியாணத்''தைப் பற்றி அந்த நாளைய விமரிசனம் ஒன்றைப் பார்ப்போமா? கலை விமரிசனம் எழுதுவதில் நிகரற்ற கலைஞராக விளங்கிய 'கர்நாடக'த்தின் விமரிசனம் படத்தின் தரத்தை நன்கு எடுத்துக் காட்டுவதாக உள்ளது. '''சீதா கலியாணம்' தமிழ் டாக்கி உலகில் ஒரு சுபமான ஆரம்பமாகும். இதுவரையில் வெளியான படங்களைப் பார்த்துவிட்டு, 'சீ இந்தத் தமிழ் நாடு எங்கே உருப்படப்போகிறது!' என்று கையை விரித்தோம். இனி அப்படி நிராசை அடைய வேண்டாம். மற்றக் கலைத் துறைகளில் போலவே டாக்கி துறையிலும் தமிழர்கள் சிறந்து முன்னேற்றம் அடையப் போகிறார்கள் என்பதற்குச் 'சீதா கலியாண'த்தில் நல்ல அறிகுறிகளைக் காண்கிறோம்' என்று விமரிசனத்தை முடித்திருந்தார். மறக்க முடியாத திரைப்படத்துக்கு மறக்க முடியாத விமரிசனம்தான்!

—விஜயம்



## சமைக்கும்போதே இளைப்பாறலாம்

இந்த அற்புத மண்ணெண்ணெ அடுப்பு கண்டு பிடிக்கும் வரையில் சமையல் என்றாலே மிகக் கஷ்டமான காரியம் என்று கருதப்பட்டு வந்தது. இப்பொழுது நீங்கள் சமைக்கும்போதே இளைப்பாறலாம். கரி உடைக்கும் கஷ்டமோ அடுப்பூதும் சிரமமோ, கண்ணில் புகை மண்டுதலோ இல்லை. சமையலறையில், புகைக்கரி பிடிக்காது. இந்த அடுப்பு துப்புரவானது. எளிதானது. எளிமையானது.

- தூசி. தும்பு. புகை. சத்தமில்லை
- சிக்கனமும் பாதுகாப்புமுள்ளது
- ஸ்பேர் பாகங்கள் கிடைக்கும்



# காஸ் ஜனதா

மண்ணெண்ணெ அடுப்பு

கலையான சமையல்



கலபமான சமையல்



தயாரிப்பாளர்கள் :

**தி ஓரியண்டல் மெட்டல் இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிமிடெட்**

**77, பௌபஜார் தெரு, கல்கத்தா-12**

---

தலை நோவு, வாதம், மார்புசளி ஆகிய வற்றை, சீக்கிரமாகக் குணம் பெறச்செய்வதற்கு




# நோபின்

கல்கெமிகோவின் நோவு நிவாரண மருந்து

சொறிசிரங்குகள், பருக்கள், கொப்புளங்கள், கட்டிகள், புண்கள், காயங்கள் முதலியவற்றிற்கு

# மார்க்வென்டம்

நீம் க்ரீம்




“[illegible]” சோப்பு உற்பத்தியாளரான கல்கெமிகோவின் தயாரிப்புகள்

CF-2TM-61

தென் இந்திய ஆபீஸ் : 5/149, பிராட்வே, சென்னை-1

# நிலவின் பெயர் நெருப்பா?

கே. வெங்கடராமன்

காருக்கு மேல் கார், ஆளுக்கு மேல் ஆள், போனுக்கு மேல் போன் என்று ஒன்றின் மேல் ஒன்றாய் வந்து கொண்டிருந்தன நித்திய கலாதேவியைத் தேடி! ஏன் வராது? திடீரென்று படப் பிடிப்புக்குப் போகாமல் அவள் வீட்டிலேயே தங்கி விட்டாள்! ஒரே ஒரு 'ஸெட்'டுக்காகப் பல்லாயிரக்கணக்கான ரூபாயைக் கொண்டு வந்து கொட்டியிருக்கும் படத் தயாரிப்பாளரால் நித்திய கலாதேவி வரவில்லை என்பதால் 'ஷூட்டிங்'கை நிறுத்திவிட முடியுமா?

காலையில் படப் பிடிப்புக்குப் புறப்பட்டுக் கொண்டுதான் இருந்தாள் பிரபல திரைப்பட நடிகை நித்தியகலாதேவி. அன்று அவள் நடிக்க வேண்டிய காட்சி சோக மயமானது. படத்தின் 'கிளைமாக்ஸ்' கட்டம் என்றே சொல்ல வேண்டும். அதில் திறம்பட நடித்துத் தன் புகழை மேலும் நன்கு ஸ்தாபித்துக் கொள்ள வேண்டும் என்ற ஆசையில் அவள் இரவு முழுதும் தூங்கவே யில்லை. தன் அறையில் அந்தக் காட்சியைப் பல முறை நடித்துப் பார்த்துப் பார்த்து அந்தக் கதாபாத்திரமாகவே அவள் மாறிவிட்டிருந்தாள். அவள் மனம் சோக மயமாக மாறி அவள் சோகச் சித்திரமாகவே மாறி விட்டாள்.

அதனால் அவள் யாரையுமே சந்திக்க விரும்ப வில்லை. காரணம் தான் கஷ்டப்பட்டுச் சம்பா



நித்துக் கொண்டிருக்கும் 'மூட்' கலைந்து விடக் கூடாதே என்பதுதான்! ஆனால் அவளைப் பார்க்க வந்து விட்டனர் இரண்டு பிரபல படத் தயாரிப்பாளர்கள். திரைப்பட உலகில் 'வெற்றிப் படத் தயாரிப்பாளர்கள்' என்று புகழும் பெயரும் பெற்றவர்கள் அவர்கள். அவர்களுடைய படங்களில் நடித்து அமோகமாகப் புகழ் பெற வேண்டும் என்ற ஆசை நித்தியகலா தேவிக்கு நெடுநாட்களாக உண்டு. அவர்களைச் சந்திக்காமல் போவாளா அவள்?

இரண்டு பேர்களும் தலா ஐம்பதினாயிரம் ரூபாய்க்கு இரண்டு 'செக்'குகள் எழுதிக் கிழித்து அவளிடம் நீட்டியபடி, ''நாங்கள் இருவரும் தயாரிக்கவிருக்கும் இரு படங்களிலும் நீங்கள் கதாநாயகியாக நடிக்க வேண்டும். அட்வான்ஸ் பணமாக இரண்டு பேரும் லட்ச ரூபாய்க்கான 'செக்' தருகிறோம். படப்பிடிப்பு தொடங்கியதும் இரு தவணைகளில் நீங்கள் பாக்கி ஐம்பதினாயிரம் ரூபாயையும் பெறுவீர்கள்! ஆளுக்கு லட்ச ரூபாய் கொடுக்கிறோம்!'' என்றனர் அவர்கள்.

ஒரு லட்ச ரூபாய்க்கான செக்கைப் பெற்றதும் நித்தியகலாதேவிக்கு இருதயமே மகிழ்ச்சியில் நின்றுவிடும் போல் இருந்தது. அதோடு, படத்தில் யார் கதாநாயகனாக இருந்து நடிக்க வேண்டும் என்று அவள் மனதாரக் கடவுளை வேண்டிக் கொண்டாளோ அவரே தான் கதாநாயகன் என்றறிந்ததும் அவள் உற்சாகமும் உவகையும் அடைந்தாள்.

சுகுமாரைத் தெரியாதவர்கள் சினிமாவைப் பார்த்திராதவர்கள் என்றுதான் சொல்ல வேண்டும். நடிப்பில் சிறந்த அவன் அழகிலும் மேம்பட்டவன். வயது இருபத்தெட்டோ, முப்பதோதான் இருக்கும். அதற்குள் நடிப்பின் சிகரத்தையே அவன் எட்டி விட்டான் என்று சொல்லலாம்.

நித்தியகலா தேவிக்குக்கூட அவனிடம் ஆசை. அந்த ஆசை நாளுக்கு நாள் அவளுள் ஆலமரமாக வளர்ந்து கொண்டிருந்தது. அவனுடன் படத்தில் நடிக்க மட்டும் விரும்பவில்லை அவள்; அவன் வாழ்க்கையில் கதாநாயகியாகி விடவே அவள் ஆசைப்பட்டாள். அவனுடன் படத்தில் நடிக்க வேண்டும் என்று படத்தயாரிப்பாளர் சொன்னதும் அவள் பொங்கிப் பூரித்துப் போனாள். அவனுடன் சேர்ந்து வாழ முடியாவிட்டாலும், ஒரு படத்திலாவது அவனுடைய காதலியாக நடிக்கும் வாய்ப்புக் கிடைத்ததே என்று ஆறுதல் அடைந்தது அவள் காதல் நெஞ்சம்!

படத் தயாரிப்பாளர்கள் சென்று விட்டனர். நித்தியகலாதேவிக்கு சந்தோஷத்தில் கைகால் ஓடவில்லை. 'ஸ்பிரிங்' கட்டிலின் 'வெல்வெட்' மெத்தையில் அவள் மலர்க் கொத்தைப் போல் சாய்ந்தாள்.

'ஷூட்டிங்'கை 'கான்ஸல்' செய்துவிட வேண்டும் என்று நினைத்தாள் அவள். 'நடித்தோம்' என்று பெயர் பண்ணித் தான் இத்தனை நாட்களும் கஷ்டப்பட்டுத் திரட்டிய புகழை விணடித்துக் கொள்ள விரும்பவில்லை அவள். போன் செய்து விட்டாள் ஸ்டுடியோவுக்குத் தான் வர முடியாதென்று.

பணத்தைத் தண்ணீராய் வாரியிறைத்துக் கொட்டியிருக்கும் படத் தயாரிப்பாளர் பரமசிவம் அப்படிச் சுலபமாக 'ஷூட்டிங்'கை 'கான்ஸல்' செய்து விடுவாரா?

படத் தயாரிப்பாளர் பரமசிவம் என்ற ஒருவர் மட்டும் இல்லாதிருந்திருப்பாரேயானால் சிக்கநரசய்யன் கிராமத்தில் ஏதோ பாழடைந்த வீட்டில் யாரோ ஒரு சமையற்காரருக்கோ அல்லது ஒரு உழவருக்கோ 'துளசி' என்ற பூர்வாசிரமப் பெயரோடு வாழ்க்கைப்பட்டிருப்பாள் நித்தியகலாதேவி. கிராமத்தில் படப்பிடிப்புக்காகச் சென்ற அவர் தற்செயலாக அவளைப் பார்த்தார். அவளுடைய அழகான முகமும், எடுப்பான கட்டமைந்த உடலும் அவள் ஒரு பெரிய நடிகையாவாள் என்று அவருக்குத் தீர்க்க தரிசனம் கூறின. அவர் அழைத்ததும் சினிமாவில் நடிக்க வேண்டுமென்றே காத்திருந்தவள்போல் கிளம்பிவிட்டாள் அவள். துளசி என்ற கர்நாடகப் பெயர் மாறி நித்திய கலா தேவி என்றாயிற்று. பரமசிவம் அவளுடைய நடிப்பைப் பயன்படுத்தி அவளை நட்சத்திர ஸ்தானத்துக்கு உயர்த்தி விட்டார். நித்திய கலாதேவி அவரைத் தெய்வமாகக் கருதினாள்.

அன்று சுகுமாரின் கார் நித்தியகலாதேவியின் வீட்டின் முன் வந்து நின்று 'ஹாரன்' அடித்ததும் உள்ளே கட்டிலில் படுத்துக் கொண்டிருந்த நித்தியகலாதேவி படத் தயாரிப்பாளர் பரமசிவமே தன்னை அழைத்துப் போக நேரே வந்து விட்டார் போலிருக்கிறது என்று எண்ணி வெளியில் வந்தவள் திகைத்துப் போய்விட்டாள். காரிலிருந்து கம்பீரமாகச் சுகுமார் அவளைப் பார்த்துப் புன்னகை செய்தபடி வந்து கொண்டிருந்தான்.

''வாருங்கள்! வாருங்கள்!'' என்று மானாய்த் துள்ளி, மயிலாக நடந்து, மலராகச் சிரித்து, மந்தமாருதமாய் அவனை வரவேற்றாள் நித்திய கலாதேவி.

நெடுநாட்கள் பழகியவன் போல் அவளுடைய கரங்களைப் பற்றிக் கொண்டான் சுகுமார். அவள் தன் கரங்களை விடுவித்துக் கொள்ளவில்லை. அவனது கரங்களின் பிணைப்பு இதமாக இருந்தது. 'நித்யா' என்று அவன் அன்பு ததும்ப அழைத்து அவளுடைய தலையை வருடிக் கொடுத்தான்.

தான் மாலையில் மீண்டும் சந்திப்பதாகவும், இடையிடையே அவளுக்கு 'போன்' செய்வதாகவும் கூறிவிட்டுப் புறப்பட்டு விட்டான் சுகுமார். செல்லும்போது நித்தியகலாதேவியின் கன்னத்தில் செல்லமாகத் தட்டிவிட்டுச் சென்றான். நெடுநேரம்வரை அந்தக் கன்னத்தை ஆசையாகக் கையால் தடவி விட்டுக் கொண்டிருந்தாள் அவள். அவன் தொட்ட ஒவ்வொரு இடமும் கற்கண்டாய் இனித்தபொழுது அவள் நினைவில் அன்றையப் படப்பிடிப்பைப் பற்றிய ஞாபகம் வரவேயில்லை. மாலை எப்போது வருமென்று ஏங்கத் தொடங்கினாள். டெலிபோன் அருகிலேயே ஒரு சோபாவை இழுத்துப் போட்டுக் கொண்டு அமர்ந்தாள்.

அந்தச் சமயம் பார்த்து அங்கு வந்த வேலைக்காரி ''அம்மா! யாரோ ஓர் அம்மா வந்திருக்கிறாள் வாசலிலே. உங்களைப் பார்க்கணுமாம்!'' என்றாள்.

''அனாதையா?'' என்று கேட்டாள்.

''அப்படித்தான் தெரியுது!''

''ஏதாவது காசைக் கொடுத்து அனுப்பறதுதானே?''

''காசு வேண்டாமாம் அவனுக்கு.''

''பின்னே நான்தான் வேணுமாமோ?'' என்று எகத்தாளமாகக் கேட்டாள் நித்திய கலாதேவி.

''ஆமாம், நித்யா! நீங்கள்தான் வேண்டும்!'' என்று கூறியபடி ஒரு பெண் உள்ளே வந்தாள். அவள் கரங்களில் ஒரு பிள்ளையின் பிஞ்சுக் கரங்கள் பிணைந்திருந்தன.

அந்தப் பெண்ணைக் கூர்ந்து பார்த்தாள் நித்தியகலாதேவி. அவளை எங்கோ பார்த்த ஞாபகம் வந்தது அவளுக்கு. ஆமாம்! ஆர்க்காடு ரோட்டில் கோடம்பாக்கம் 'கேட்' மூடியிருக்கும்போது நித்தியகலாதேவியின் கார் மேற்கொண்டு செல்ல முடியாதபடி தடைப்பட்டு நிற்கும். அப்பொழுது அப் பெண் அவளை எத்தனையோ முறை வைத்த கண்ணை எடுக்காதபடி பார்த்திருக்கிறாள்.

''உன்னை நான் பார்த்திருக்கிறேன்'' என்றாள் நித்யா.

''ஆமாம், பார்த்திருப்பீர்கள்! ஆர்க்காடு ரோட்டில் பார்த்திருக்கலாம். அல்லது ஏதேனும் ஸ்டுடியோக்களின் வாசலில் பார்த்திருக்கலாம். அங்கேதானே என் தெய்வத்தைக் கண்ணால் காணும் பாக்கியமாவது எனக்குக் கிடைக்கிறது?'' என்று கூறும்போது அந்தப் பெண்ணின் கண்களில் நீர் திரையிட்டது; குரல் கம்மியது.

''உன் தெய்வத்தையா? அது யார் உன் தெய்வம்?''

அந்தப் பெண் சிரித்தாள். ''நிஜமாகவே என் தெய்வம் யார் என்று தெரியாமலா கேட்கிறீர்கள்?''

நித்தியகலாவின் நெஞ்சில் முள் குத்தியது போலிருந்தது. ''நீ..நீ..?'' என்று குழறினாள்.

''நான் ஸ்ரீமதி குமார்! அதாவது இன்று சினிமாத் திரை வானில் நட்சத்திரமாய்ப் பிரகாசித்துக் கொண்டிருப்பவரும், இன்று உங்கள் உரிமையாகிக் கொண்டு வருபவருமான குமார் என்ற நடிகர் சாஸ்திர முறைப்படி அக்னியையும் முப்பத்து முக்கோடி தேவர்களையும் சாட்சி வைத்துத் தாலிகட்டிய அபாக்கியவதி. என் பெயர் சரளா!''

நெருப்புத் துண்டை மிதித்தவள் போல் துள்ளிப் பின் வாங்கினாள் நித்தியகலாதேவி. குளுமையை ஒளிபரப்பும் தண்ணிலவு என்று அவள் நினைத்த நிலவு சுடும் நெருப்பா? நிலவின் பெயர் நெருப்பா?

அந்தப் பெண் தொடர்ந்தாள்:

''அவருக்கு என்னைப் பிடிக்கவில்லை. எப்படிப் பிடிக்கும்? நான் அழகாயிருக்கிறேனா? நாகரிகமாக இருக்கிறேனா? பட்டிக்காட்டுப் பெண் நான்! கர்நாடகம்! இன்று பிரபலமாக விளங்கும் அவர் என்னைத் தம் மனைவி என்று சொல்லிக்கொள்ள விரும்பவில்லை. என்னை அவர் விலக்கிவிட்டார்!'' என்று கூறும்போதே அந்தப் பெண் துக்கத்தை அடக்க முடியாமல் கேவிக் கேவி அழத் தொடங்கி விட்டாள். அருகே யிருந்த அந்தச் சிறுவன், 'அழாதேயம்மா, அழாதேயம்மா' என்று கூறியபடி தானும் அழுதான்.

நித்யகலாதேவி நிலைகுலைந்து போய்விட்டாள். அவள் இப்படி ஓர் அதிர்ச்சியை எதிர்பார்க்கவே யில்லை. குமார் ஏன் இத்தனை நாட்களாக ஒருவரையும் காதலிக்க முன்வரவில்லை என்பதன் சிதம்பர ரகசியம், தான் மணமானவன் என்பது வெளியில் தெரிந்து விடுமே என்ற அச்சத்தில்தானா?

நித்திய கலா தேவி குமுறினாள். அவள் பிறருடைய சொத்து என்பதும், அந்தச் சொத்துக்குரியவளே நேரில் அந்தச் சொத்துக்குரிய வாரிசுடன் வந்துவிட்டதையும் எண்ணி அவள் மனம் ஏமாற்றத்தில் 'கோ' வென்று அழுதது. காதல் நெஞ்சம் தான் ஏமாற்றப்பட்டதை எண்ணிக் கதறியது.

''நீ அவருடைய மனைவியா?''

''நான் அவருடைய மனைவி மட்டுமல்ல; அவருக்குப் பிறந்த இந்தக் குழந்தையின் தாயாரும் கூட!'' என்று அந்தப் பையனை இழுத்து அணைத்துக் கொண்டாள் சரளா.

நித்தியகலா தேவிக்கு வேதனை நெஞ்சைப் பிழிந்தது. தன் ஆசை இத்தனை சீக்கிரம் நிராசையாகப் போய்விடும் என்று அவள் கருதவேயில்லை. அவனுடைய மையலில் மயங்கி, தன்னை நட்சத்திர ஸ்தானத்துக்கு உயர்த்தி முன்னுக்குக் கொண்டு வந்த படத் தயாரிப்பாளர் பரமசிவத்தின் படப்பிடிப்புக்குத் தான் போகாமலிருந்து விட்டதற்காக அவள் மிகவும் வருந்தினாள்.

எதிரே யிருந்த சரளாவைக் கண்கொண்டு பார்க்க முடியவில்லை அவளால். கணவனைப் பறிகொடுத்து விட்ட தாள முடியாத வேதனையில் உருகி நிற்கும் சரளாவை மோசம் செய்து அவளுடைய வாழ்வைப் பறித்துக் கொள்ளவா? அப்படி வாழும் வாழ்வில் அமைதி கிடைக்குமா?

''குமாரிடம் பேசி அவரை உன்னோடு சேர்த்து வைக்கிறேன், சரளா!'' என்றாள் நித்திய கலாதேவி அவளைக் கட்டிக்கொண்டு.

''எனக்கு என் கணவர் வேண்டாம் நித்யா! அவருடைய சந்தோஷம்தான் வேண்டும். எந்த ஒரு அழகும், நாகரிகமும், கவர்ச்சியும் என்னிடம் இல்லை என்பதற்காக அவர் என்னை மனைவி என்று சொல்லிக்கொள்ளவும் விரும்பவில்லையோ அவை யாவும் உன்னிடம் பரிபூரணமாக இருக்கின்றன நித்யா! நீ அவரை விரும்புவது போல் அவரும் உன்னை நேசிப்பதை இன்று அறிந்தேன். உங்கள் இருவரிடையே குறுக்குச் சுவராக நான் நிற்க விரும்பவில்லை. நீ அவரை மணந்து என்றும் அளிக்க முடியாத சந்தோஷத்தையும் திருப்தியையும் அவருக்கு அளிக்க வேண்டும்!'' என்று கூறியபடி நித்திய கலாதேவியின்

பெரியவர்: (பையனிடம்): உனக்கு இந்தக் குடை எப்படிக் கிடைத்தது?

பையன்: எங்க அக்கா கொடுத்தா...

பெரியவர்: உனக்கு அக்கா கிடையாதுன்னு சொல்லியிருக்கயே?

பையன்: எனக்கு அது நல்லாத் தெரியும். ஆனால் குடையிலே சகோதரியின் அன்பளிப்பு என்று போட்டிருக்குதே!

அழகிய தந்தம் போன்ற கரங்களைப் பற்றிக் கொண்டாள் சரளா.

சரளாவைத் தூக்கியெடுத்து அன்புடன் அவள் கண்ணீரைத் துடைத்தாள் நித்திய கலா தேவி. ''உனக்கு உடைமையானவரை என்னுடையவராக்கிக் கொள்ள நான் சுயநல மிக்கவளல்ல சரளா! நானும் உன்னைப்போல் ஒரு பெண்! அவர் மணமானவர் என்பதை அறியாமல் அவரை நான் காதலித்துவிட்ட தற்குச் செய்யக்கூடிய பிராயச்சித்தம் அவரை உன்னிடம் சேர்த்து வைப்பதுதான் சரளா! அதுதான் என் அடுத்த பணி.....நீ போ, சரளா...நீ போ...'' என்று கதறிவிட்டு உள்ளே ஓடிய நித்தியகலாதேவி கட்டிலில் போய்ப் 'பொத்'தென்று விழுந்தாள்; அழு தாள். அழ அழச் சுகுமாரின் மீது அவள் கொண்ட அன்பு படிப்படியாகக் குறைந்து அவன் மீது ஆத்திரமும் கோபமும் உண்டா யிற்று அவளுக்கு. தன்னை ஏமாற்றிய அவனை நான்கு பேர்களின் நடுவே அவமானப்படுத்தி ளுல்தான் ஆத்திரம் அடங்கும் போலிருந்தது.

''டிரைவர்! காரை எடு!'' என்று கட்டளை யிட்டுவிட்டு, ஸ்டுடியோவுக்கு 'நான் படப் பிடிப்பில் கலந்து கொள்ளப் புறப்பட்டு விட்டேன்! இன்னும் பத்து நிமிடங்களில் அங்கே இருப்பேன்!'' என்று டெலிபோனில் கூறிவிட்டுக் காரில் ஏறி உட்கார்ந்து கொண் டாள் நித்திய கலாதேவி.

ஆர்க்காடு ரோட்டில் அன்னப் பட்சி போல் கார் தவழ்ந்தோடியது.

கார் கோடம்பாக்கம் கேட் அருகே வரும் பொழுது கேட் மூடப்பட்டுக் கொண்டிருந் தது. டிரைவர் ஆக்ஸிலேட்டரை ஓர் அழுத்து அழுத்தினன். கார் அம்பாகப் பாய்ந்து கேட்டினுள் புகுந்து வெளியில் வந்தபோது நித்தியகலாதேவி பின்னல் உள்ள கண்ணாடி வழியாகப் பார்த்தாள்.

அவள் கார்தான் கடைசிக் கார். கேட் மூடப்பட்டு ஒரு கார் நின்று கொண்டிருப் பதைக் கண்டாள் அவள். அதனுள்ளே படத் தயாரிப்பாளர் பரமசிவம் அமர்ந்திருந் தார். அவர் அருகில் அமர்ந்திருப்பவர் யார் என்று பார்த்தாள் நித்திய கலாதேவி. சர ளாவா? சரளாதான்! 'தான் யார் என் பதைப் பரமசிவத்திடமே கூறிவிட்டாளா என்ன? அதுதான் அவர் அவளையும் ஸ்டுடியோ வுக்கே அழைத்துக் கொண்டு வருகிறரோ? வரட்டும் அவர் வஞ்சகச் சுகுமாரைக் கேள் விக் கணையால் துளைத்து எடுக்கும்போது நானும் அவனை வருத்தெடுக்கிறேன்! என்று கறுவிக்கொண்டாள் நித்திய கலாதேவி.

அவளுடைய நடிப்பு என்றுமில்லாதபடி மிகவும் சோகமாக அமைந்து விட்டது அன்றையப் படப்பிடிப்பில்.

படத் தயாரிப்பாளர் பரமசிவம் சரளா வுடன் உள்ளே வந்ததும் டைரக்டர் அவ ரிடம், ''ஸார்! நம்ம நித்ய கலாதேவியின் நடிப்பு இன்று 'ஏ கிளா'ஸாக அமைந்து விட்டது!'' என்றார்.

''எங்கே இருக்கிறள் அவள்?''

''ஸெட்'டில்தான் இருக்கிறள். சுகு மாருடன் ஏதோ தகராறு போலிருக்கிறது!'' என்றார் டைரக்டர்.

சரளாவுடன் பரமசிவம் ஸெட்டினுள் நுழைந்தபோது நித்திய கலாதேவியிடம் சுகுமார் கெஞ்சிக் கொண்டிருந்தான். ''நான் சொல்வதைக் கொஞ்சம் பொறுமையாகக் கேள், நித்யா! நான் உன்னை மோசம் செய் வேனு? என்னை நம்ப மாட்டாயா நித்யா?''

நித்யகலாதேவி பாம்பாகச் சீறிக்கொண் டிருந்தாள். ''நான் உங்களை நம்பத் தயாரா யில்லை. நீங்கள் மணமானவர் என்பது மட்டு மல்ல, ஒரு குழந்தைக்கும் தந்தை என் பதைக் கேட்ட பிறகும், அதைக் கண்ணுல் பார்த்த பிறகும் உங்களை நம்பி மோசம் போக நான் புத்தி இல்லாதவள் இல்லை.''

''நான் மணமானவனு? எனக்கு ஒரு குழந்தையா? உனக்கு யார் இப்படியெல்லாம் சொன்னர்கள் நித்யா?''

''உங்கள் மனைவிதான்!'' என்று நெருப் பைக் கக்கினுள் நித்ய கலாதேவி.

''என் மனைவியா?''

''ஆம், உங்கள் மனைவிதான்! அதோ வரு கிறள் பாருங்கள், அவள்தான்!'' என்று பரமசிவத்துடன் வந்து கொண்டிருந்த சரளாவைக் காட்டினுள் நித்யகலாதேவி.

அவள் காட்டிய பெண்ணைப் பார்த்தான் சுகுமார். அடுத்த கணமே, ''இவளா என் மனைவி?'' என்று கேட்டுச் சிரித்தான்.

''நித்யா! நீ என்னை மன்னிக்க வேண்டும்! நானும் எத்தனையோ படங்களில் எக்ஸ்ட்ரா வாக நடித்துள்ளேன். ஆனலும் ஒரு படத்தி லாவது நான்கு காட்சிகளில் தொடர்ந்து ஒரு சின்னக் கதாநாயகியாகவாவது தோன்ற ஒரு வாய்ப்புக்கூடக் கிடைக்கவில்லை. அதற் குக் காரணம் எனக்கு நடிக்க வராது என்று இவர்கள் செய்துவிட்ட முடிவுதான். இன்று காலையில்கூட இவர் — பரமசிவம் — எனக்கு நடிக்கத் தெரியாது என்று என் கோரிக்கையை நிராகரித்து விட்டார். அப்போது நீ படப் பிடிப்புக்கு வரவில்லை. அதனல் அவர் மிகவும் மனமுடைந்து போயிருந்தார். சுகுமாரின் அன்பும் காதலும் உனக்குக் கிடைத்துவிட்ட தாகவும் அதனலேயே நீ படப்பிடிப்புக்கு வரவில்லையென்றும் இங்கே பேசிக் கொண் டார்கள். என் நடிப்பை உன்னிடம் காட்டி உன்னை ஏமாறச் செய்து உன்னைப் படப் பிடிப்புக்கு வரச் செய்து பரமசிவம் அவர்க ளின் கவலையைப் போக்குவது என்று நிர்மா னித்து ஒரு பிள்ளையை அழைத்துக் கொண்டு வந்து சுகுமாரின் மனைவியாக நடித்தேன். நீயும் நம்பிவிட்டாய் என் நடிப்பை. என் நடிப்பைப் பற்றி நீ ஒரு வார்த்தை இந்தப் படத் தயாரிப்பாளரிடம் கூறுவாயா நித்யா?'' என்றுள் சரளா.

''அவள் கூறி நான் அறிய வேண்டாமம்மா! நித்ய கலாதேவியை அழைத்துப் போக அவள் பங்களாவுக்கு நேரிலேயே வந்த நான் மறைந்திருந்து உன் நடிப்பைக் கவனித்தேன். நீ நன்ருக நடிக்கத் தெரிந்தவள் சரளா! நீதான் என் அடுத்த படத்தில் கதாநாயகி!'' என்றார் படத் தயாரிப்பாளர் பரமசிவம்.

தான் நெருப்பு என்று நினைத்த பொருள் உண்மையில் குளிர் நிலவுதான் என்பது தெரிந் ததும் நித்ய கலாதேவியின் கண்கள் சுகு மாரின் கண்களைத் தேடி அவனிடம் மன் னிப்புக்கு இறைஞ்சின.

# பத்தினிக்கோட்டம்

### அத்தியாயம் ஐம்பத்தொன்பது

## வல்லவனுக்கே வையகம்

ஓங்கி உலகளந்த நீல வண்ண மாலவன்போன்ற அதிகாயபாகுவான தோற்றம்; வெற்பில் தவமியற்றும் வெள்ளெருக்குச் சடை முடியான் போல் வெண்ணீறணிந்த திருமேனி; சிவானுபூதி பெற்ற சிவநேசச் செல்வர்க்குரிய அருள் பொலியும் ஞான முகம்; அறுபத்தைந்து வயதுக்கும் மேற்பட்ட முதிய பருவமாயினும் சிறிதளவு தளர்ச்சியும் அடையாத வீறார்ந்த வீரச் செருக்கு — என்றிவ்வாறு விளங்கிய பாண்டியப் பேரரசர் நின்றசீர் நெடுமாறர் என்னும் அரிகேசரி மாறவர்மர், தாம் வீற்றிருந்த பொன்னாசனத்தை விட்டு எழுந்து, நெடிய வளர்ச்சியினால் ஏற்பட்ட கூனலுடன் தலை குனிந்து ஆழ்ந்த சிந்தனையில் லயித்தவராய் மெள்ள உலாவிக் கொண்டிருந்தார்.

அறிவார்ந்த சிவப் பழமாக அமர்ந்திருந்த அமைச்சர் குலச்சிறையாரும் அமைதிப் புன்முறுவலுடன் எழுந்து, தம் எதிரே நின்றிருந்த கோவிந்தவர்மனைப் பரிவோடு பார்த்தவாறு நிதானமாகப் பேசினார்:

“பல்லவ இளவரசே! இவ்வளவு நேரம் நீங்கள் சொன்ன விவரங்கள் அனைத்தையும் கவனமாகக் கேட்டோம். சளுக்கிய ஆக்கிரமிப்பாளரைப் பல்லவ நாட்டின் மண்ணிலிருந்து விரட்டியடிக்க வேண்டியது அவசியம் என்றும், அந்த மிகப் பெரிய பணியில் எந்த விநாடியும் ஈடுபடத் தக்க தயார் நிலையில் பல்லவக் குடிமக்கள் ஒருமுகமாகத் திரண்டு நிற்கிறார்கள் என்றும், அவர்களது எழுச்சி மிக்க பலத்தைத் திரட்டும் வேலை இப்போது வெகு தீவிரமாக நடைபெற்றுக் கொண்டிருக்கிறது என்றும், பாண்டிய மன்னரின் படைபல உதவி கிடைக்குமானால் அந்த முயற்சி இன்னும் சிறப்பாக அமையும் என்றும், இவ்விவரங்களையே உங்கள் சகோதரரான மாமன்னர் பரமேசுவரவர்மர் இந்த ஓலையில் வரைந்து அனுப்பியிருக்கிறார் என்றும் சொல்கிறீர்கள். உங்களுடைய இந்த முயற்சியும், கோரிக்கையும் போற்றத் தக்கவை என்பதில் சிறிதும் சந்தேகமில்லை. ஆனால்....”—பேச்சைத் துண்டு படுத்திவிட்டுத் தம் மன்னர் பக்கம் திரும்பினார் அமைச்சர்.

ஆசனத்தின் தலைப்பில் இடக் கையை மடித்து ஊன்றியவாறு கம்பீரமாக நின்றிருந்த கோவிந்தவர்மன் உள்ளார்ந்த பரபரப்போடு நிமிர்ந்து மன்னர் நெடுமாறரையும் அமைச்சர் குலச்சிறையாரையும் பார்த்தான்.

சிந்தனை வயப்பட்டவராய் உலாவிக் கொண்டிருந்த நெடுமாறர் மெல்லத் தலையசைத்துவிட்டு மேலும் உலாவலானார். அவருடைய தலையசைப்பில் ஏதோ ஒரு குறிப்பை உணர்ந்து கொண்டவர்போல் புன்னகை புரிந்த குலச்சிறையார்

ஜெகசிற்பியன்



தம் பேச்சைத் தொடர்ந்தார்: ''ஆம், இளவரசே! சளுக்கியர் ஆதிக்கத்தில் சிக்குண்டு கிடக்கும் பல்லவ நாட்டை மீட்க வேண்டுமென நீங்கள் முனைந்து நிற்பது நியாயமே. அது உங்கள் பொறுப்பும் கடமையுமாகும். ஆனால், அதற்காக எங்களிடம் வந்து படையுதவி கோருவதன் நோக்கம் என்ன?''

கோவிந்த வர்மன் அவரை உற்று நோக்கினான். 'இவ்வளவு பெரிய நாட்டின் மதியமைச்சர் இத்தனை சிறு பிள்ளைத்தனமான கேள்வி கேட்கிறாரே' என்று அவனுக்கு உள்ளூற வியப்பு ஏற்பட்டது. அதை இளஞ் சிரிப்பால் மெழுகி மறைத்துக்கொண்ட அவன், ''நலிவுற்றவர் தம் நம்பிக்கையான வலிவுள்ளவரிடம் உதவி கோருவதில் என்ன நோக்கம் இருக்க முடியும் என்பதை அமைச்சரே நன்கு அறிவார்!'' என்றான் அமைதியான குரலில்.

குலச்சிறையார் இதைக் கேட்டுக் குலுங்கிச் சிரித்தார். ''என்னுடைய கேள்வியின் பொருள் அதுவல்ல, இளவரசே! உங்களுக்கு நாங்கள் படையுதவி அளிப்பதால் எங்களுக்கு என்ன பலன் என்றுதான் கேட்கிறேன்.''

திடுக்குற்றுவிட்டான் கோவிந்த வர்மன். இப்படியொரு கேள்வியை அவன் கொஞ்சமும் எதிர்பார்க்கவே யில்லை. எதிர்பார்த்திருந்தால் இங்கே வரவும் துணிந்திருக்க மாட்டான். அவனுக்கு ஒரே குழப்பமாகி விட்டது. லாப—நஷ்ட நோக்கில் எழுப்பப்பட்ட அந்தக் கேள்விக்கு விடை பகரத் தெரியாமல் திணறிய அவன் ஒரு விநாடிக்குப் பிறகு வெடுக்கென்று தலை தூக்கி மிடுக்கான குரலில் சொன்னான்: ''பயனா அமைச்சரே? பக்கத்து இல்லத்தில் குடியிருந்த வனைப் பலமிக்க முரடன் ஒருவன் வந்து பலாத்காரமாக வெளியேற்றி விட்டு அதைப் பறித்துக் கொள்கிறான் என்று வைத்துக் கொள்வோம். அந்த அநியாயச் செயலை அக்கம் பக்கத்து இல்லத்தார் அனுமதித்து விட்டால் பிறகு அவர்களுடைய இல்லங்களுக்கும் அதே கதி நேராதென்பது என்ன நிச்சயம்? தத்தமது பாதுகாப்புக்காகவேனும் அவர்கள், அந்த இல்லத்தைப் பறிகொடுத்தவனுக்காகப் பரிந்துபோய் உதவி செய்ய வேண்டியது அவசியம் அல்லவா? உங்களிடம் நாங்கள் உதவி கோருவதால் நீங்கள் பெறக்கூடிய பயனும் இப்படிப்பட்டதாகத்தான் இருக்கும் என்று நினைக்கிறேன்!''

''அருமையான உவமானம்! ஆனால் பக்கத்து இல்லத்தில் பலமற்ற ஒருவன் குடியிருப்பதைவிடப் பலம் வாய்ந்த ஒரு முரடன் குடியேறினால் அது தமக்கெல்லாம் பாதுகாப்பாக இருக்கும் என்று அக்கம் பக்கத்து இல்லத்தார் நினைக்கத் தலைப்பட்டால்? அப்படி நினைப்பதிலும் கொஞ்சம் நியாயம் இருப்பதுபோல் தோன்றுகிறதே!''

''அநியாயத்துக்குத் தலை வணங்குகிறவர்களும், அதர்மத்துக்குத் துணை போகிறவர்களும்தான் இப்படி ஒரு வித்தார நியாய வாதம் பேசுவார்கள்.''

''உண்மைதான். ஆயினும், நியாயம் — தர்மம் இவை இரண்டும் நிலையானதொரு வரையறையில் எப்போதுமே உட்பட்டு நிற்பதில்லை. அவரவர் நன்மையில் அநியாயம் நியாயமாகவும், அதர்மம் தர்மமாகவும், தர்மம் அதர்மமாகவும், நியாயம் அநியாயமாகவும் தோன்றலாம்; இல்லையா...?''

கோபத்தால் குமுறிப் பெருமூச்சு விட்ட கோவிந்தவர்மன் அவரை விழித்து நோக்கினான். ''அமைச்சரே! தர்ம நியாயங்களைப் பற்றித் தங்களிடம் வாதிடுவதற்காக நான் இங்கு வரவில்லை. இனத்தாலும், மொழியாலும், மதத்தாலும், மண்ணின் குணத்தாலும் ஒருமைப்பட்ட ஒரு நட்பு நாட்டினிடம் உரிமையுடன் உதவி கோரவே வந்தேன். உங்களால் அதைச் செய்ய இயலுமா என்பதை மட்டும் கூறி எனக்கு அன்போடு விடையளிக்க வேண்டுகிறேன்.'' — உணர்ச்சிப் பெருக்கால் அவன் குரல் கம்மிக் கரைந்தது.

குலச்சிறையார் தம் மன்னரைத் திரும்பிப் பார்த்தார். அவர் முன் போலவே மெல்லத் தலையசைத்து விட்டு அமைதியாகப் போய் ஆசனத்தில் அமர்ந்தார்.

''பல்லவ இளவரசரின் மனத்தை நோகச் செய்ததற்காக மிகவும் வருந்துகிறேன். அத்துடன் இன்னொரு கசப்பான விஷயத்தையும் கேட்டு அவர் மனத்தை இன்னும் அதிகமாக நோக வைக்க வேண்டியிருக்கிறதே என்று எண்ணி இப்போதே வருந்த ஆரம்பிக்கிறேன்'' என்று குறும்பாகக் கூறியவாறு ஓரடி முன்னால் வந்த குலச்சிறையார் மேலும் சொன்னார்: ''ஆம், இளவரசே! சளுக்கிய ஆதிக்கத்தை அழித்து ஒழிப்பதற்காகப் பாண்டிய மன்னரிடம் படை உதவி கோரிப் பல்லவ மன்னர் பரமேசுவர வர்மர் கொடுத்தனுப்பியதாகத் தாங்கள் எடுத்து வந்திருக்கும் இந்த திருபம் அவர் கைப்பட எழுதியது அல்ல என்றும், இது ஒரு தகூடலேகைவிட்ட ஓலையென்றும் நாங்கள் ஐயப்படுகிறோம். அப்படி இல்லையென்று தங்களால் மறுத்துக் கூற இயலுமா?''

அக்கினிக் கணைகளால் சூழப்பட்டவன்போல் அதிர்ந்து விட்டான்

# உங்கள் கேசத்தை அழகுபடுத்த நிரூபணமான பாமாலிவ் வழி





## பாமாலிவ் பெர்ஃப்யூம்டு கோகோனட் ஹேர் ஆயில்...

உங்கள் கேசத்திற்கு போஷாக்கு அளிக்கிறது. பாமாலிவ் உபயோகிப்பதால் நீண்ட, செழிப்பான கேசம் இயற்கையாக வளருகிறது. ரோஜா, லவண்டர் அல்லது மல்லிகை—இம்மூன்று வசீகரிக்கும் சுகந்தங்களில் ஏதேனும் ஒன்றைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள்.




## பாமாலிவ் கோகோனட் ஆயில் ஷாம்பு...

உயர்தரமான தேங்காய் எண்ணெய்யுடன் தனிப்பட்டு தயாரிக்கப்பட்ட பிரசித்தி பெற்ற கலவை. இது அழகுற சுத்தம் செய்யும் ஷாம்பு என்பதுடன், ஒரு கூந்தல் அழகு சாதனமும் ஆகும். பாமாலிவ்வின் செழிப்பான நுரை கூந்தலுக்கு ஊட்டத்தைக் கொடுப்பதுடன் உங்கள் தலையையும் கூந்தலையும் ஆயத்தமாக்கி பரிமள புத்துயிரூட்டுவதனால், புதிய ஆரோக்கியமான கேச வளர்ச்சி ஏற்படுகிறது.

**நவநாகரீக இந்தியப் பெண்டிர் கூந்தல் அழகிற்கு விரும்பியெடுப்பது பாமாலிவ்**

கோவிந்தவர்மன். அவமானமும், பீதியும் ஒருசேரக் கிளர்ந்தெழுந்து அவனை உருட்டிப் புரட்டி எடுத்தன. அந்த ஒரு கண நேரத்தில் ஏதேதோ எண்ணி ஒரேயடியாகக் குழம்பிப் போனான். 'முன்பின் யோசியாமல் பெரும்பிடுகு முத்தரையர் இப்படி ஒரு சங்கடத்தில் நம்மைச் சிக்க வைத்து விட்டாரே' என்று அவர் மீதும் அவனுக்குக் கோபம் பொங்கியது. நெருப்பைத் தீண்டிய ஊமைக் குழந்தைபோல் திக்கித் திணறித் திருதிருவென விழித்த அவன் சட்டென்று தன்னைச் சமாளித்துக் கொண்டு நிமிர்ந்து, ''என்ன இது விந்தை! ஏன் இப்படிக் கேட்கிறீர்கள் அமைச்சரே?'' என்றான் அசட்டுச் சிரிப்புடன்.

''எங்களுக்கும் அது விந்தையாக இருப்பதால்தான் இவ்வாறு கேட்கிறோம்....''

''இல்லை என்று நான் மறுத்துக் கூறினால் அதற்கு நீங்கள் என்ன பதில் சொல்வீர்களாம்?''

''சளுக்கியர் ஆட்சியில் சிக்கித் தவிக்கும் பல்லவ நாட்டு மக்கள் தம் குடியுரிமையைப் பெற வேண்டும் என்ற பேரார்வத்துடன் குமுறி நிற்கிறார்கள் என்பதென்னவோ உண்மைதான். ஆனால் அவர்களின் அந்த எழுச்சித் துடிப்பைச் சளுக்கியருக்கு எதிராகத் திருப்பி விடும் முயற்சி நடைபெறுவதாகக் கூறுவது முற்றிலும் பொய். அம்மாதிரியான முயற்சி எதுவும் இதுவரையில் அங்கு நடைபெறவேயில்லை. அந்தப் பணியை முன்னின்று செய்ய வேண்டிய பல்லவ மன்னருக்கே அதில் கடுகளவு ஆர்வமும் நம்பிக்கையும் இல்லை. அப்படிச் செய்ய அவர் முன்வரவும் இல்லை. உங்களைப் போன்ற சிலர் அவ்வாறு செய்தாலும் அதற்கு அவர் ஆதரவு தர மறுக்கிறார்; அல்லது வேண்டாம் என்று தடுக்கிறார். சளுக்கியருக்குப் பயந்து சேதியக் கலைஞரொருவரின் இல்லத்திலே தலைமறைவாகப் புகலடைந்து கிடந்த அவர், இப்போது சளுக்கியத் தளபதியின் சூழ்ச்சிக்கு இரையாகித் தாமே வலியப் போய் அவனிடம் சிக்கிக் கொண்டிருக்கிறார். அப்படிச் சிக்கியவன் கதிஎன்ன





ஆயிற்று என்பது இன்றுவரை யாருக்கும் தெரியாது. இந்நிலையில், அவர் எங்களிடம் படை உதவி கோரி ஓலை அனுப்பியிருக்கிறார் என்றால், அந்த ஓலை மெய்யானது தான் என்று எங்களால் எப்படி நம்ப முடியும்?''

கோவிந்தவர்மனின் உடல் கிடுகிடுவென நடுங்கியது. அந்த நடுக்கத்தினூடே அவன் மனத்தில் பளிச்சென்று ஓர் எண்ணம் தோன்றியது. 'நமக்கு எதிராகத் திரும்பி, சளுக்கிய விக்கிரமாதித்தனுடன் சேர்ந்து கொண்ட பழையாறைச் சோழர் இந்தப் பாண்டிய மன்னரையும் தம் பக்கமாகச் சாய்த்துக் கொண்டார் போலும்! இல்லையானால், இவர்களுக்கு நம்மைப் பற்றிய இத்தனை உண்மைகளும் இவ்வளவு தெளிவாக எப்படித் தெரிந்திருக்க முடியும்?' — ஆத்திரமும் சினமும் அவன் அறிவைக் குழப்பின. ''துரோகி! எல்லாம் அந்தப் பழையாறைச் சோழரின் திருவிளையாடல்! தாம் கெட்டது மன்றிச் சத்தியசீலரான பாண்டியமன்னரின் நெஞ்சிலும் நஞ்சைக் கலந்து விட்டிருக்கிறார் அவர்!'' என்று வெறி பிடித்தவன் போல் கூவினான்.



அமைதியே வடிவாக வீற்றிருந்த நெடுமாறர் இதைக் கேட்டு மென்முறுவல் பூத்தார். அமைச்சர் குலச்சிறையாரோ கலகலவெனச் சிரித்துக் கொண்டே, ''அப்படியானால் இந்த ஓலையைப் பற்றி நாங்கள் சந்தேகப்பட்டது சரிதான் என்று பல்லவ இளவரசரே ஒப்புக்கொள்கிறீரோ?'' என்றார் குத்தலாக.

திகிலடைந்த நிலையில் வேர்த்து விறுவிறுத்து மௌனமாகி நின்றான் கோவிந்தவர்மன்.

''கவலைப்படாதீர்கள், இளவரசே! தாங்கள் எடுத்து வந்த ஓலை தகூடலேகைதான் என்றாலும், அதிலே கண்டபடி தங்களுக்குப் படை உதவி கொடுத்துதவ நாங்கள் விருப்பமுள்ளவர்களாகவே இருக்கிறோம். ஆனால், ஒரு நாடு இன்னொரு நாட்டுக்குப் படை உதவி அளிப்பதென்பது மிகப் பெரிய விஷயமாகும். பலம் பொருந்திய ஒருவனுக்கு உதவி செய்வதிலே எவ்வித முன்யோசனையும் தேவையில்லை; அப்படிச் செய்வதால் மேலும் பலமும் பெருமையும் தான் வந்து சேரும். பலஹீனனுக்கு உதவுவதோ அப்படிப்பட்டதல்ல; அதைப் பற்றிப் பலதும் சிந்திக்கவேண்டி இருக்கிறது. ஏனென்றால், பலஹீனனுக்கு உதவி செய்து அது பயனற்றுப் போய்விட்டால் எதிராளியின் கோபம் தன் எதிரியை விட்டு விட்டு அவனுக்கு எதிராக உதவி செய்தவன்மேல் திரும்பும். அப்போது தர்மம் தலை காக்காது; அவனுடைய தலையையே அது கொய்து கொண்டு போய்விடும்.''— இதமாகச் சிரித்தவாறு இப்படிக் கூறினார் குலச்சிறையார்.

''எனவே, பாண்டியரின் படை உதவி எங்களுக்குக் கிடைக்காது என்று சொல்கிறீர்கள், அப்படித்தானே?'' என்றான் கோவிந்தவர்மன் அலட்சியமாக.

''அது மட்டுமல்ல, இளவரசே! எங்களுடைய நன்மையையும் பாதுகாப்பையும் உத்தேசித்து, மாவீரனான சளுக்கிய விக்கிரமாதித்தனிடம் நாங்கள் நேசமாகப் பணிந்து போகவும் முடிவு




விஞ்ஞான முறையில் தயாராகும் லாக்டோ-காலமைன் உபயோகிக்கும்போது உங்கள் சரும எழில் மேம்பட்டு விளங்குகிறது. ● மறைந்து நின்று குணமளிக்கும் லாக்டோ-காலமைன் துரிதமாய் வேலை செய்யும் உயர் ரக காலமைன் அடங்கியது. களங்கங்களைக் களைந்து, வெயில், காற்று ஆகியவற்றால் முகம் கறுத்து விடாமல் காப்பாற்றுகிறது. ● உங்கள் மேனியெழிலை ஸாடின்போல் வழவழப்பாய் வைத்திருக்கும் லாக்டோ-காலமைனை முகவசீகரப் ● பொருளாக டாக்டர்கள் சிபாரிசு செய்கின்றனர். ● லாக்டோ-காலமைன் வரிசையில் மேலும் கிடைப்பவை: க்ரீம் மற்றும் டால்கம் பவுடர். லாக்டோ-காலமைன் எங்கும் கிடைக்கிறது

# லாக்டோ-காலமைன்

## உங்கள் ஒப்பற்ற எழிலின் அடித்தளம்

செய்திருக்கிறோம்!'' என்று அமைச்சர் குலச்சிறையார் சொல்லிக் கொண்டிருக்கும்போதே, ''இல்லை, இல்லை! இனி அதற்கு இடமே இல்லை!'' என்று திடீரென எழுந்த ஓர் ஆவேசக் குரலைக் கேட்டு அங்கிருந்த அனைவரும் திடுக்குற்றுத் திரும்பினர்.

அந்த மேன்மாடத்தின் வாயிற்புறத்தே திரை மறைவில் ஒடுங்கி நின்று, இவ்வளவு நேரம் அங்கு நிகழ்ந்த உரையாடல்களையெல்லாம் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்த சோழ இளவரசி இளங்கோப்பிச்சி, செங்கரும்பு வில்லிலிருந்து விடுபட்ட பூங்கணைபோல் சரேலெனப் பாய்ந்து வந்தாள்.

அதி முக்கியமான அரசியல் பேச்சு நடைபெறும் இடத்திலே தாம் பிரவேசிப்பது உசிதமாகாது என்று எண்ணி வெளிப்புற அறையிலேயே வீற்றிருந்த பாண்டிமாதேவியும், தமது தம்பி மகளின் இந்த ஆவேச நடத்தையைக் கண்டு மெய் விதிர்த்தவராய் அவளைப் பின் தொடர்ந்து விரைந்து வந்தார்.

அத்தியாயம் அறுபது

## வட எல்லையில் போர்க் குமுறல்

"வாருங்கள், மகாராணி! நல்ல தருணத்தில் வந்தீர்கள்!'' என்று பணிவுடன் தலை வணங்கிய குலச்சிறையார், பாண்டிமாதேவியையும், சோழ இளவரசியையும் வியப்போடு மாறி மாறிப் பார்த்தார்.

சற்றும் எதிர்பாராத விதமாக அங்கு இளங்கோப்பிச்சியைக் கண்ட கோவிந்தவர்மன் ஆச்சரியத்தில் மூழ்கினான். ஏற்கனவே கலங்கிக் கிடந்த அவன் மனம் இப்போது ஒரேயடியாக அலைப்புற்றுக் கூளமாகியது. சிந்திக்கும் திறனை இழந்து அவளையே விழித்துப் பார்த்துக் கொண்டிருந்தவன் வெடுக்கென்று தன் முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டான்.

சிந்தனை மோனத்திலிருந்து விடுபட்டதால் ஏற்பட்ட ஒருவிதக் களைப்புக் கிறக்கத்துடன் மெல்லத் தலை நிமிர்ந்த பாண்டிய மன்னர், உணர்ச்சிப் பிழம்பாகத் தம் எதிரே வந்து நின்ற இளங்கோப்பிச்சியை ஏறிட்டு நோக்கினார். எந்தச் சூழ்நிலையிலும் எவ்விதச் சலனங்களையும் பிரதிபலித்துக் காட்டாமல் ஆழ்ந்த அமைதியே நிலவும் தன்மை வாய்ந்த அவருடைய முகத்திலும் இப்போது வியப்பின் தடம் பதிந்தது. ''யார்?... என் மைத்துனர் பழையாறைச் சோழரின் செல்வ மகள் இளங்கோப்பிச்சியா?'' என்று சாந்தம் நிறைந்த இள நகையுடன் கேட்டுக் கொண்டே தம் தேவியின் பக்கம் திரும்பினார் அவர்.

''ஆம், சுவாமீ! சற்று முன்தான் அவள் நம் அரண்மனைக்கு வந்து சேர்ந்தாள்......'' என்று புன்னகை புரிந்து கூறிக்கொண்டே ஓர் ஆசனத்தில் அமர்ந்த மங்கையர்க்கரசியார், சற்றுத் தொலைவில் விறைப்பாக நின்று கொண்டிருந்த கோவிந்த வர்மனை நோக்கி, ''பல்லவ இளவரசர் நலம் தானே?'' என்றார் அன்பும் பாசமும் இழைந்த குரலில்.

அவரது ஒளி பொருந்திய திருமுகத்தைப் பார்த்துத் தன் உணர்ச்சிக் கனல் அவிந்து நின்ற கோவிந்தவர்மன் இரு கரங்களையும் கூப்பி, ''பாண்டிமா தேவியின் அன்பாசியால் நன்னலமே!'' என்றவாறு வணங்கினான்.

''பல்லவ மன்னர் பரமேசுவர வர்மரும் நலம்தானே?'' — கனிவுடன் வினவினார் பாண்டிமாதேவி.

''திருவருளின் துணையால் அவரும் நலமாக இருப்பாரென்றே நம்புகிறேன், தாயே!'' — குரல் கம்மித் தேயத் தலை குனிந்தான் கோவிந்தவர்மன்.

பல்வேறு உணர்ச்சியலைகளை உள்ளடக்கிக்கொண்டு ஒருசில விநாடிகள் தேய்ந்து போகங்கின.

''இளவரசி, இப்படி வந்து அமரலாமே!'' என்று பரிவோடு கூறி அங்கு நிலவிய அமைதியைக் கலைத்தார் மாமன்னர் நெடுமாறர்.

இதுவரை எங்கோ வெறித்துப் பார்த்துக்கொண்டு விறைத்து நின்றிருந்த இளங்கோப்பிச்சி சட்டென்று திரும்பி, ''இல்லை! சளுக்கிய விக்கிரமாதித்தனுடன் நீங்கள் நேசமாகப் போவதற்கு இனி இடமே இல்லை!'' என்று முதலில் சொன்ன அதே சொற்களை முன்னிலும் ஆவேசமாக வீசினாள்.

குலச்சிறையாரும் கோவிந்த வர்மனும் அவளைத் திகிலுடன் உற்று நோக்க, பாண்டிமாதேவி மௌனமாகத் தலை குனிந்து அமர்ந்திருந்தார்.

''இளவரசி! ஏன் இப்படிப் படபடக்கிறாய்? என்ன சொல்ல விரும்புகிறாய்?'' என்று வாஞ்சையுடன் கேட்டுக் கொண்டே மெல்லத் தம் ஆசனத்தை விட்டு எழுந்தார் நெடுமாறர்.

''பேரரசே! தங்கள் புகழ் மிக்க பாண்டிமா நாட்டை நோக்கிப் பேர

பாயம் ஒன்று வெகு வேகமாக வந்து கொண்டிருக்கிறது. அதை முன்கூட்டியே தங்களிடம் தெரிவித்துவிட்டுப் போகவே இங்கு வந்தேன்.'' — சுற்றுப் புறச் சூழலை மறந்து இப்படிப் பொரிந்தாள் இளங்கோப்பிச்சி.

நெடுமாறர் இதைக் கேட்டு மெல்ல நகைத்தார். ''பாண்டிய நாட்டுக்குப் பேராபத்தா?... இளவரசி, நீ என்ன சொல்கிறாய்?''

''ஆம், அரசே! பல்லவ நாட்டை விழுங்கிய சளுக்கிய விக்கிரமாதித்தன் பாண்டிய நாட்டின் மீதும் படையெடுத்து வரப்போகிறான். அதற்கான முயற்சிகளில் இப்போது அவன் அதி தீவிரமாக முனைந்திருக்கிறான்.''—ஆத்திரமும் அவசரமும் செருமிக் குமுறிய குரலில் இவ்வாறு படபடத்தாள் இளங்கோப்பிச்சி.

இந்தச் சேதி கேட்டு அதிர்ச்சியுற்ற கோவிந்தவர்மன் புள்ளெனத் துள்ளி நிமிர்ந்தான்.

ஆனால் பாண்டிய மன்னரோ எவ்விதப் பதற்றத்துக்கும் உள்ளாகாமல், ''அப்படியா...!'' என்று சாவதானமாகத் தலையசைத்துக் கொண்டார். பிறகு அதே அமைதியுடன் அவளைப் பார்த்து, ''ஆமாம்; இந்தச் சேதியை நீ எப்படி அறிந்தாய் இளவரசி?'' என்று, அவள் சொன்னதை நம்பாதவர் போல் புருவங்களை நெரித்துக்கொண்டு விளித்தார்.

இளங்கோப்பிச்சியின் முகம் இருண்டது. தனக்குக் கிடைத்த அந்த மர்ம ஓலையை எடுத்து அவரிடம் காட்டிவிடலாமா என்று ஒரு கணம் நினைத்தவள் மறு விநாடியே அவ்வெண்ணத்தை மாற்றிக் கொண்டாள். 'சற்று முன் பல்லவ இளவரசர் கொண்டு வந்த ஓலையைத் தகூடலேகை என்று அலட்சியப்படுத்தி ஒதுக்கிவிட்டாற் போல், இதையும் ஒரு பொய் ஓலையென நினைத்துவிட்டால் என்ன செய்வது?'—திகைத்து நின்ற அவள் சட்டென்று தன்னைச் சமாளித்துக் கொண்டு உறுதியான குரலில் சொன்னாள்: ''அந்தச் சேதியை எப்படி அறிந்தேன் என்று விளக்குவதைவிட, என் கண்ணால் கண்டு வந்த சில விவரங்களைச் சொல்வது இன்னும் பயனுள்ளதாக இருக்கும் என்று நினைக்கிறேன், அரசே! உறையூர் மார்க்கமாக நான் மதுரைக்கு வரும் வழியில், சளுக்கியரின் கடல் போன்ற சேனைகள் பாண்டி நாட்டின் வட எல்லையை நோக்கித் திரண்டு செல்வதைப் பார்த்தேன். பிறகு உறையூர்ச் சுங்கச் சாவடியில் என் வண்டியைச் சோதனையிடுவதற்காகச் சளுக்கியக் காவல் அதிகாரிகள் நிறுத்தி வைத்திருந்தபோது, அவர்கள் தமக்குள்ளே பேசிக்கொண்ட பேச்சுக்களிலிருந்து மேலும் சில விவரங்களை என்னால் அறிய முடிந்தது. பல்லவ நாட்டின் பல்வேறு இடங்களில் நிறுத்தி வைக்கப்பட்டிருக்கும் சளுக்கியப் படைகளில் பெரும்பாலானவை இப்போது பாண்டிய நாட்டின் வட எல்லையில் போய்க் குவிந்து கொண்டிருக்கின்றன என்றும், நெல்வேலி * என்னுமிடத்திலிருந்து திடீரெனப் போரை ஆரம்பித்துப் பின் பாண்டிய நாட்டு அமைச்சர் குலச்சிறையாரின் சொந்த ஊரான மிழலைக் கூற்றத்து மணமேற்குடி வழியாக ஊடுருவி வந்து மதுரை நகரை முற்றுகையிடத் திட்டமிடப்பட்டிருக்கிறது என்றும் அவர்கள் பேசிக்கொண்டார்கள். ஆக, இன்னும் ஓரிரண்டு வாரங்களுக்குள் பாண்டிய நாட்டின் மேல் சளுக்கிய விக்கிரமாதித்தன் போர் தொடுக்கப் போகிறான் என்பதை இவ்விவரங்களிலிருந்து நான் தெரிந்து கொண்டேன். இவற்றைவிடத் தங்களுக்கு வேறென்ன ஆதாரம் வேண்டும், அரசே.....?''

சற்று நேரம் வரையில் அந்தச் சித்திரகூடத்திலே மயான அமைதி நிலவியது. பலத்த சிந்தனையில் மூழ்கியவராய் மௌனமாக உலாவிக் கொண்டிருந்த பாண்டியப் பேரரசர் ஏதோ ஓர் திடமான முடிவுக்கு வந்தவர்போல் பெருமூச்சுவிட்டு நிமிர்ந்து, ''இளவரசி! எனக்காகவும் எனது மாபெரும் பாண்டி நாட்டுக்காகவும் நீ செய்த இந்தப் பேருதவிக்கு நான் பெரிதும் நன்றியுடையவனாக இருக்கிறேன். நெடுந்தூரப் பயணம் செய்து வந்ததால் மிகவும் களைத்துச் சோர்ந்து காணப்படுகிறாய்; போ, உன் அத்தையாருடன் போய் நிம்மதியாக ஓய்வு எடுத்துக் கொள்!'' என்றார்.

தயங்கி நின்ற இளங்கோப்பிச்சி திடுமெனத் தலைதூக்கி, ''என் மதிப்புமிக்க அத்தையன்பர் அந்த மாபெரும் விஷயமாக என்ன முடிவு செய்திருக்கிறார் என்பதை நான் அறிய விரும்புகிறேன்!'' என்று உறவின் உரிமைச் செருக்கோடு உரத்த குரலில் கேட்டாள்.

ஆழ்ந்த கவலையில் பிறந்த சோகச் சிரிப்புடன் அவளைக் கூர்ந்து நோக்கிய நெடுமாறர், ''எந்த முடிவைப் பற்றிக் கேட்கிறாய் இளவரசி?'' என்று இதமாக வினவினார்.

---

* நெல்வேலி என்பது புதுக்கோட்டைச் சீமையிலிருந்த நெல்வேலி என்னும் ஊராகும். அது தென்பாண்டி நாட்டின் திருநெல்வேலி அல்ல. தென்னார்க்காடு மாவட்டத்தில் உள்ள நெல்வேலியும் அல்ல.

குணத்தில் சிறந்தவை

## ஸ்வஸ்திக் வேதாரணியம் புகையிலை



ஸ்பெஷல் தயாரிப்பு

13 & 15 ந. பை.

பிளாஸ்டிக் பொட்டலங்கள்

ARUNA

---

# சிறந்த தரத்துடன் சிக்கனமும் குடும்பத்தினர் அனைவருக்கும் கிடைக்கிறது



எத்தனை சிக்கனமானது! எத்தனை புத்துணர்ச்சி தருவது! இந்தப் பெரிய சைஸ் டால்க்கில் உங்களுக்கு பெயர் பெற்ற கால்கேட்டின் சீரிய தரம் கிட்டுகிறது.



எத்தனை நறுமண முடையது! எத்தனை நீடித்திருப்பது! ஸ்நானத்திற்கு பின்– வெளியே செல்லுமுன்– தாராளமாக உங்கள் உடலில் தூவிக்கொண்டு நளினமாய் விளங்குங்கள்.



எத்தனை சேர்த்தியானது! எத்தனை மிருதுவானது! கால்கேட் ஆல்-பர்ப்பஸ் டால்க்கை குழந்தை விரும்புகிறது. இளஞ்சருமத்திற்கு அது மிகவும் ஏற்றது.




CAP.I.G.2. TM.

# கால்கேட்

## ஆல்–பர்ப்பஸ் டால்க்

அபூர்வ மலர்களின் நீடித்திருக்கும் நறுமணங்கொண்டது!

# RUNNING WATER



*day and night...*




*get it with*

**Myers**

or




PUMPS

**WATER SUPPLY SPECIALISTS PVT LTD.**

Dept. No. 55
330, Thambu Chetty St.
MADRAS - 1

WS-42

''பாண்டிய நாட்டின்மேல் படையெடுக்கவிருக்கும் விக்கிரமாதித்தனுக்குத் தாங்கள் தெரிவிக்கப் போகும் முடிவுபற்றி?''

''ஓ.... அந்த முடிவா? மாவீர மகாபுருஷனை சளுக்கியச் சக்கரவர்த்தி விக்கிரமாதித்தனை நானே நேரில் சென்று தரிசித்து என் கண்களைப் புனிதமாக்கிக்கொள்வது என்ற முடிவுக்கு வந்திருக்கிறேன்!''

அதிர்ச்சியுற்றுத் திரும்பிய இளங்கோப்பிச்சி, ''என்ன சொன்னீர்கள், அரசே?'' என்று நடுங்கிய குரலில் கேட்டாள்.

''ஆமாம்; அதுதான் என் தீர்மானம்.''

''அதாவது?.....''

''தண்டெடுத்து வரும் விக்கிரமாதித்தனைச் சென்று கொடுத்து வரவேற்றுச் சரணாகதியாகிவிட வேண்டும் என்பதே என் முடிவு.''

''அரசே!....''

''அதைத் தவிர எனக்கு வேறு வழி இல்லை, இளவரசி! வடக்கே நருமதை ஆறு முதல், தெற்கே தென்னகத்தின் புதுக்கோட்டைச் சீமை வரையிலுள்ள மிகப் பெரிய நிலப் பரப்பைத் தனதாக்கிக் கொண்டு வலிமை மிக்க மாபெரும் வல்லரசாக விளங்கும் இரணரசிக விக்கிரமாதித்தன் எங்கே, இந்த எளிய சிறிய பாண்டி நாட்டின் மன்னனை நான் எங்கே? மதங்கொண்ட வேழத்தை எதிர்க்கச் சிறு நரி துணியலாமோ?'' என்றார் அரசர்.

இளங்கோப்பிச்சி இதைக் கேட்டுக் கலகலவெனச் சிரித்தாள். 'அடல் கருங் கூந்தல் வெள்ளெயிற்றுச் செவ்வாய்ப் பொற்சூலக் கைவல்லி'யான துர்க்கை அம்மனே அங்கு எழுந்தருளி வந்து நின்று சிரிப்பதுபோல் அத்தகை கோபாவேசமாகச் சிரித்து முழக்கிய அவள் தன் இரு கரங்களையும் இடுப்பின் மேல் கம்பீரமாக ஊன்றிக்கொண்டு செருக்கும் மிடுக்குமாக நிமிர்ந்து நெடுமாறரை நேரிட்டுப் பார்த்தவாறு கணீரென்ற குரலில் சொன்னாள்: ''பழம் பெருமை வாய்ந்த பாண்டியப் பேரரசின் மாமன்னரே! சேரரையும் பரவரையும் எதிர்த்துப் பாழி, செந்நிலம் முதலான பல போர்க்களங்களைக் கண்டு வெற்றி வாகை சூடிய சந்திர குலச் செம்மலே! தங்களைவிட அறிவிலும் அநுபவத்திலும் வயதிலும் கல்வி கேள்விகளிலும் மிக மிகத் தாழ்ந்த —குறைந்த — ஓர் எளிய சிறிய அபலைப் பெண்ணாக நான் இருந்தாலும், பார் புகழ் கொண்ட சோழ மகா வம்சத்தில் பிறந்தவள், அந்த வம்சத்தின் வாரிசாக இன்று இருக்கும் மாவீரரான பழையாறைச் சோழரின் பட்டத்துச் செல்வ மகள் என்ற ஒரே தகுதியின் பேரில் தங்களுக்குச் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். அவற்றைத் தயை கூர்ந்து செவிமடுக்க வேண்டுகிறேன். அரசியல் விழிப்புள்ள ஒரு சமுதாயத்தின் வாழ்வு ஆழ்கடலைப் போன்றது. அந்த வாழ்வில் நிரந்தரமான பரபரப்பும் அலைத் துடிப்புமே இருக்கும். ஜீவனுள்ள ஓர் அங்கத்தைப் போல அது இயங்கும். அதன் கவர்ச்சிகளும் செயல்களும் அதனுடைய எல்லைப்புறச் சக்திகளால் உருவாகின்றன. போரோ அல்லது அமைதியோ எதுவும் அதன் உள்நாட்டு நிலைமையால் அல்லது கொள்கையால் வரையறுக்கப் பெறுவதில்லை. அதனுடைய உட் துடிப்புகள் எல்லாம் வெளித் துடிப்புகளால் வீறு கொள்பவையே. விரிந்து பரந்த உலகில் ஓர் உன்னத இடம் பெற விரும்பும் எந்த அரசாங்கமும் வெளிநாடுகளின் சண்டை சச்சரவுகளைப் புறக்கணித்து விட்டுத் தன் உள் நாட்டில் அமைதியாக வாழ விரும்புவது வடிகட்டின மதியீனமாகும். அத்தகைய அமைதி அடிமை நாடுகளில் நிலவும் அமைதி போன்றதே ஆகும். தனது தாய்நாட்டின் நியாயமான எல்லைகளைத் தீண்டும் ஒவ்வோர் அந்நியத் தாக்குதலையும் கண்டு எந்த நாட்டின் இரத்தம் கொதிக்கிறதோ, அந்த நாடே அரசியல் விழிப்புள்ள நாடு எனலாம். ஓர் அரசாங்கத்துக்கு 'நாம்' என்ற உணர்ச்சி இருக்க வேண்டியது அவசியம்தான்; ஆனால் அதற்கு அபாயம் ஏற்படும்போது 'நான்' என்ற உணர்ச்சியோடு அது ஆர்த்தெழ வேண்டும். போரிட்டுத் தனது பலத்தைப் பரிசோதிக்காமலே எதிரியிடம் சரணாகதி அடைவது போன்ற கோழைத்தனம் உலகில் வேறெதுவுமே இருக்க முடியாது. ஏனென்றால், வீரமும் விவேகமும் அற்ற செம்மறியாடு சிங்கத்தின்தோலைப் போர்த்திக்கொண்டு பயமுறுத்துவதுபோல் சில பலவீனமான நாடுகள் வெறும் கோஷங்களாலேயே நாடு பிடிக்கும் தந்திரத்தைக் கைக்கொள்ளலாம். அந்தப் போலி ஆரவாரத்தைக் கண்டு அஞ்சி ஒரு நாட்டின் சுயாதிக்க உரிமையை விட்டுக் கொடுக்கவோ அடகு வைக்கவோ முயல்வது அறியாமையே ஆகும்.''

இளங்கோப்பிச்சி சட்டென்று தன் குரலை உயர்த்தி ஆவேசமாக வார்த்தைகளைக் கக்கினாள்: ''மாண்பு மிக்க என் அத்தையன்பரே! தங்கள் பாண்டி நாட்டில் போதிய படை பலம் இல்லை என்ற ஒரே காரணத்துக்காக, பல நூறு காதங்களுக்கு அப்பாலிருந்து வந்

திருக்கும் ராஜரீக அநுபவமற்ற வெறும் வீரனான விக்கிரமாதித்தனுக்குத் திறை செலுத்திப் பணிந்து போக நினைப்பது, கிரீட ஜாதியில் பிறந்த உங்களைப் போன்ற ஒரு பேரரசருக்கு அழகே அல்ல. எதிரியின் விடாய்ப்பை ஏற்கப் போதிய பலம் உங்களிடம் இல்லையென்றால், சரணாகதியே அதன் இறுதி முடிவு என்று கொள்வது தவறு. இம்மாதிரி சமயங்களில் ராஜீய கண்ணோட்டத்துடனும் ராஜ தந்திர உறவுடனும் நமது சொந்தச் சகோதர நாடுகள் சிலவற்றின் உதவியைக் கோரி, அல்லது அவற்றுடன் கூட்டுச் சேர்ந்து, பொது எதிரியை முறியடிப்பதே புத்தியுடைமை. நமக்குள் ஆயிரம் வேற்றுமைகள் இருக்கலாம். ஆனால் அந்நியரின் பயமுறுத்தல் கோஷம் எழும் போது, சிங்கத்தின் பிடரியைப்போல் ஒன்று சேர்ந்து சிலிர்த்தெழ வேண்டும். இத்தகைய சிந்தனையோ முயற்சியோ செய்யாமல், ஆதிக்க வெறியெடுத்து அலைந்து வரும் பண்பாடற்ற ஒரு மிலேச்சனின் காலடியில் தாமரைப் பூப்போன்ற இந்த எழிலார்ந்த பாண்டி நாடு மிதிபட்டு நசுங்குண்டு போக அநுமதிப்பது வழிவழியாகத் தொடரக்கூடிய பேரவமானமாகும். உங்களுடைய சொந்த நாட்டின் விஷயத்தில் எங்கோ இருக்கும் சின்னஞ் சிறு அடிமைச் சிற்றரசு ஒன்றின் இளவரசி இவ்வளவு தூரம் தலையிட்டுப் பேசுவது தவறு என்றாலும், அப்படிப் பேச எனக்கு உரிமை உண்டு என்றே நினைக்கிறேன். எவ்வாறெனில், அந்தச் சளுக்கிய விக்கிரமாதித்தன் பல்லவ நாட்டைக் கபளீகரம் செய்ததோடு அல்லாமல் இந்தப் பாண்டிய நாட்டையும் தன்னடிப் படுத்திக்கொண்டு விட்டால் அப்புறம் அவன் மளமளவென்று முன்னேறி எஞ்சியுள்ள சேர நாட்டையும் எடுத்து விழுங்கி விடுவான். அதன் பின் வடவேங்கடத்துக்குத் தெற்கேயும், கன்னிக் குமரிக்கு வடக்கேயும் பண்டு புகழ் கொண்ட தண்டமிழ் நாடு ஒன்று இருந்தது என்பதே எதிர்காலத்துக்குத் தெரியாமல் மறைந்து போய் விடும். எனவேதான் தங்களின் அந்த அவசர முடிவை மறு பரிசீலனை செய்ய வேண்டுமாய்ப் பணிவுடன் கேட்டுக் கொள்கிறேன்.''

அனல் மாரியெனப் பொழிந்து தன்னிய இளங்கோப்பிச்சி சட்டென்று திரும்பிச் சுற்றுமுற்றும் சுழன்று நோக்கினாள். அந்தச் சித்திர கூடத்தில் இருந்த அனைவரும் தன்னையே விழி யசைக்காமல் பார்த்துக் கொண்டிருப்பதை அப்போதுதான் உணர்ந்தவள் போல் வெலவெலத்து நடுங்கினாள். அதிலும் கோவிந்தவர்மனின் பார்வையே அவளை வெகுவாகக் குன்றிக் குறுகச் செய்துவிட்டது. இவ்வளவு நேரம் அவளிடம் பொங்கிக் குமுறிய உணர்ச்சியாவேசம் இப்போது இருந்த இடம் தெரியாமல் மறையவே, அவள் சடாரெனப் பாய்ந்தோடித் தன் அத்தையாரின் பின்னால் ஒளிந்து கொள்வதுபோல் ஒடுங்கி நின்றுகொண்டாள்.

பாண்டியப் பேரரசர் மகிழ்ச்சிப் பரவசத்தோடு தம் மனைவியாரின் பக்கம் திரும்பி, ''தேவி! உன் தம்பி மகளின் பேச்சைக் கேட்டாயா? இந்த வீரமா செல்வியைப் பெற்ற பழையானைச் சோழரே பாக்கியசாலி! அவரை மைத்துனராகக் கொண்ட நானும் பாக்கியசாலியே!'' என்றார்.

தன் பேச்சின் விளைவை அறிய நெடுமாறனின் முகத்தையே கூர்ந்து பார்த்துக்கொண்டிருந்தாள் இளங்கோப்பிச்சி.

இந்தச் சமயம், எங்கோ தொலை தூரத்துக்கு அப்பால் நீண்ட மணியோசை ஒலிப்பது கேட்டது. அதைத் தொடர்ந்து எட்டுத் திக்கும் எதிரொலிக்கும் வண்ணமாக முரசொலி


அமிர்தவசனி (சொந்தப் படங்கள்)

**ஸ்ரீ குமரகுருபரன்:** இந்தப் படம் ஹைகோர்ட்டின் தீர்ப்புப்படி காப்பு உரிமை பெற்றுள்ளது. சைவ சமயாச்சாரியர் நால்வர், குருநாதன் (ஆறு படைவீடு) பஞ்சபூத தலங்கள் ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகள் 14 × 20 படம் 1-க்கு 1-50 தபால் செலவு. 12 படம்வரை 1-25. வி. பி இல்லை. 10 × 14 படங்கள் வள்ளலார், நடராஜர், பாம்பன் குமரகுருதாச சுவாமிகள். படம் ஒவ்வொன்றும் 0-40 தபால் செலவு 1-25



ஸ்ரீ குமரகுருபரன்

அமிர்தவசனி தெய்வீக மாதப் பத்திரிகை சித்திரை - பங்குனி வருட சந்தா ரூ. 1-00 வி. பி. இல்லை.

அமிர்தவசனி (விரிவுரைகள்)

கிருபானந்த வாரியார் ஸ்ரீ ராமபத்ர அவர்கள்

| | | |
|---|---|---|
| கந்தர் கலிவெண்பா | ரூ. | 2-00 |
| திருக்கயிலாய ஞானஉலா | | 2-00 |
| திருச்செந்தூர் பிள்ளைத்தமிழ் | ரூ. | 2-00 |
| 6 திருவகுப்புக்கள் | ரூ. | 1-50 |
| ஔவையார் விநாயகர் அகவல் | ரூ. | 1-50 |
| கந்தரனுபூதி | ரூ. | 1-00 |
| கோளறுபதிகம் | ரூ. | 0-40 |
| திருப்புகழ் மாலை (340 பாடல் மட்டும்) | ரூ. | 1-25 |
| கந்தக் கதம்பம் (பாடல்) | ரூ. | 1-25 |

வி. பி. இல்லை.

அமிர்தவசனி 54 பந்தர் தெரு. - சென்னை - 1

லிப்டன்

LADJEE

லாவோஜி டீ

சிக்கனத்தின் சின்னம் சிறப்பின் சிகரம்



யும் கொம்பொலியும் சேர்ந்து எழுந்து முழங்கின.

அந்த முழக்கப் பேரொலியைக் கேட்டுச் சடாரென்று ஓங்கி நிமிர்ந்த நெடுமாறர் 'கடகட'வென உரக்கச் சிரித்தார். சிரித்துக்கொண்டே விரைந்து போய், அங்கே சிலையாகச் சமைந்து நின்ற பல்லவ இளவரசன் கோவிந்தவர்மனின் திண்ணிய தோளில் தம் வலக் கரத்தை வாஞ்சையோடு போட்டு அவனை அழைத்தவாறு திறந்த வெளியாயிருந்த மேன்மாடத்துக் களத்தை நோக்கி நடந்தார்.

இதுவரையில் அங்கே நடந்தது. இனி நடக்கப் போவது எல்லாம் முன் கூட்டியே தமக்குத் தெரியும் என்பது போன்ற மந்தகாசப் புன்முறுவலுடன் அவர்களைப் பின் தொடர்ந்தார் அமைச்சர் குலச்சிறையார். ஒன்றும் புரியாமல் ஒடுங்கி முடங்கி நின்றிருந்த இளங்கோப்பிச்சியும், கவலை தோய்ந்த முகத்தினராய்க் காணப்பட்ட மகாராணி மங்கையர்க்கரசியும் தயங்கித் தயங்கி அவர்கள் பின்னால் சென்றனர்.

ஒளியை இருள் விழுங்கிக் கொண்டிருந்த அந்த முதிய மாலை நேரத்தில் மதுரை மாநகர் ஒரு புதிய சோபையுடன் விளங்கியது.

மேன் மாடத்துத் திறந்த வெளித் தளத்துக்கு வந்து சேர்ந்த மாமன்னர் நெடுமாறர் அங்கிருந்த ஒரு சிறிய மேடையின்மேல் ஏறி நின்று, வட திசை தொலைதூரத்துக்கு அப்பால் தம் பார்வையைச் செலுத்தினார். அவர் பார்த்த திசைப் பக்கமே மற்றவர்களும் திரும்பினர். அங்கே—

புகழாபரணம் அரண்மனையின் வடக்குக் கோட்டை வாயில் திறக்கப்பட்டிருந்தது. அதன் மாபெரும் அகழிப் பாலம் இறங்கி வழி இணைத்திருந்தது. அங்கிருந்து தொடங்கி — முடிவு தெரியாத தூரத்துக்கு அப்பால் வரை—கரி, பரி, தேர், காலாட் படைகள் கொண்ட மாபெரும் சேனை சமுத்திரம் அணிவகுத்து நின்றிருந்தது. முனையெதிர் மோகர் படை, எழுகப் படை, மறவர் படை என்று முப்பெரும் பிரிவாகப் பிரிந்திருந்த அந்தப் படைகள் மீனக் கொடிகளை ஏந்திப் பாண்டி நாட்டின் வட எல்லைத் திசை நோக்கி நின்று அவ்வப்போது விண்ணை முட்டும் போர்க் கோஷங்களை எழுப்பிக் கொண்டிருந்தன.

அந்த மிகப் பெரிய சேனைத் தொடருக்குக் கிழக்கே மற்றொரு பெரும் படையும் அணிவகுத்து நின்றுகொண்டிருந்தது. புலிக் கொடி ஏந்தி நின்ற அந்தப் படை, பாண்டியப் படைகளைப் போல் வட திசைப் பக்கமாக நில்லாமல், ஏனோ அரண்மனைக் கோட்டையைப் பார்த்தவாறு நின்றுகொண்டிருந்தது.

தோள்கள் விம்மிப் புடைக்க இந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்த பாண்டியப் பேரரசர் வீறார்ந்த மிடுக்குடன் திரும்பி, ''சோழ இளவரசி! அதோ பார்! பாண்டி நாட்டின்மேல் படையெடுத்து வரவிருக்கும் சளுக்கிய விக்கிரமாதித்தனுக்கு நான் சொல்லப் போகும் பதில் அதுதான்! அதுவே தான்!'' என்று இடியென முழங்கிச் சிரித்தார்.

இளங்கோப்பிச்சி இதைக் கேட்டு வியப்பால் நீர்த்துச் சிலிர்த்தாள். சற்று முன் பாண்டிய மன்னர் சளுக்கியரிடம் சரணாகதியடையப் போவதாகச் சொன்னதும், தமது நாட்டின்மேல் விக்கிரமாதித்தன் படையெடுத்து வரப் போகும் சேதி தமக்குத் தெரியாதது மாதிரி நடந்துகொண்டதும் வெறும் குறும்புத்தனமான நடிப்பு என்பதைப் புரிந்து கொண்ட அவள் வெட்கத்துடன் தலை குனிந்தாள்.

இரண்டாவது தடவையாக முரசம் முழங்கியது. கொம்பொலி விண்ணைப் பிளந்தது. மறுகணம், பாண்டிய நாட்டுப் படைகள் வட எல்லையை நோக்கிப் பேராரவாரமிட்டுச் செல்லும் ஓசை கொந்தளித்துக் குமுறும் கடல் ஒலிபோல் கேட்டது.

படைகள் பெயர்ந்து செல்லும் அந்தப் பயங்கரக் காட்சியை இமைக்காமல் சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருந்த நெடுமாறர் பெருங்குரலெடுத்துச் சிரித்துக்கொண்டே திரும்பி, ''பல்லவ இளவரசே! உங்களிடம் ஒரு சேதி!'' என்றவாறு அவனை நோக்கி வந்தார். ''இதோ, தனித்து நிற்கிறதே ஒரு பெரும் படை; இது யாருடைய படை — எதற்காக, யாருக்காக அது காத்துக் கொண்டிருக்கிறது— என்பது உங்களுக்குத் தெரியுமா?''

பிரமித்து நின்றிருந்த கோவிந்தவர்மன் அவரைத் துடிக்கும் மனத்துடன் ஏறிட்டுப் பார்த்தான். ஆனால் அதற்குமேல் அவனிடம் ஏதும் சொல்லாமல் சித்திரகூடத்தை நோக்கி நடந்தார் பாண்டிய மன்னர்.



# Firestone

## பயர்ஸ்டோன்

# உலகின் தலைசிறந்த ரப்பர் உற்பத்தியாளர்கள்

உலகின் தலைசிறந்த உற்பத்தியாளர்களான பயர்ஸ்டோனைப்போல் எவரும் டயர்களைத் தயாரிப்பதில்லை. எவரும் பயர்ஸ்டோனைப்போல் டயர்களைச் சோதிப்பதுமில்லை—ஒவ்வொரு வருடமும் கடினமான வகையில் ஓட்டப்படும் லட்சக்கணக்கான மைல்கள் இதை நிரூபிக்கின்றன. உண்மையாகவே, பயர்ஸ்டோன் டயர்களைவிட உங்களுடைய காரின் வேறெந்த பாகமும் இவ்வளவு பூராவாக சோதித்து நிரூபிக்கப்பட்டதில்லை. உலகெங்கிலும் மோட்டாரோட்டிகள் பயர்ஸ்டோனின் பெயரைத் தாங்கி நிற்கும் இந்த டயர்களை நம்புகிறார்கள். அவர்களுக்கு அதுதான் மதிப்பின் அடையாளம். அவர்கள் பயர்ஸ்டோன் வாங்கும்போது எதைப் பெறுகிறார்கள் என்பது அவர்களுக்குத் தெரியும்.




**பயர்ஸ்டோன்**

அதுதான் தூரத்துக்கும் உழைப்புக்கும்
உங்கள் சின்னம்



மிகவும் நல்ல
சுவையுள்ளது






ஸ்டேன்ஸ்
இன்ஸ்டென்ட்
காபி

தி யுனைடெட் காபி சப்ளை கம்பெனி லிமிடெட்
த. பெ. நெ. 12 கோயமுத்தூர்

tik-20

டிக்-20

மூட்டைப்பூச்சிகளைக்
கொல்லுகிறது




கெய்கி
டயஸினான்



டாடா-பைஸன் தயாரிப்பு

மேஜை மீது வைக்கப்பட்ட காப்பி ஆறிக் கொண்டிருந்தது. ஜக்கு என்றும் அப்படி இருந்ததில்லை. உற்சாகமாக 'அம்மா' என்று கூவி அழைத்தவாறு அலுவலகத்திலிருந்து திரும்பி வருவான். களைப்பு, சோர்வு, சிடுசிடுப்பு எதுவுமே அவனிடம் அவள் கண்டதில்லை. வாடா மலர் போல் என்றும் பிரசன்னமாக அவன் இருப்பதையே நாராயணி பெரிதும் விரும்பினாள். அப்படியே அவனை எந்தக் கஷ்டமும் தெரியாமல் ஆளாக்கியிருக்கிறாள். இன்று ஏன் அவன் முகம் வாடி வதங்கி இருக்கிறான்? தயங்கியவாறு அருகில் வந்து நின்றாள் நாராயணி. மெதுவாக மகனின் தலையை வருடிக் கொண்டே, ''ஏண்டா, அப்பா! ஏன் ஒரு மாதிரியாக இருக்கிறாய்?'' என்று கேட்டாள்.

''ஹூம்....'' என்றான் ஜக்கு. ''ஒரு மாதிரியுமில்லே, ஒன்றுமில்லே...'' அலுப்புடன் வார்த்தைகள் வந்தன.

இப்பொழுது நாராயணி அலுத்துக் கொண்டாள். ''ஏண்டாப்பா! உன்னைப் பெற்று வளர்த்து எல்லாப் பொறுப்புக்களையும் நானே சுமந்து ஆளாக்கி விட்டேனே! இனிமேல் நீ அலுத்துக் கொள்ளத்தான் செய்வாய்....'' அவளும் கன்னத்தில் கையை ஊன்றியபடி சுவோரமாக மகனுக்கு எதிரில் வந்து உட்கார்ந்தாள். ஜக்கு தாயின் கவலை தேங்கிய முகத்தைப் பார்த்தான். பார்த்தவுடன் அவனுக்கு இரக்கம் மேலிட்டது.

''இதோ, பார், அம்மா! இத்தனை காலம் நீ என்னை அதட்டி உருட்டி வளர்த்து விட்டாய்; படிக்க வைத்தாய். எப்படியோ வேலையும் கிடைத்து விட்டது. இத்துடன் நீ என்னை விட்டிருக்க வேண்டும். அதுதான் இல்லை. நான் கலியாணம் செய்து கொண்டு குடியும் குடித்தனமுமாக இருக்க வேண்டும் என்று வேறு ஆசைப்பட ஆரம்பித்துவிட்டாய்.''

ஜக்குவின் குரல் வேதனையுடன் ஒலிப்பதை நாராயணியால் தாங்க முடியவில்லை.

''ஜக்கு! நான் ஆசைப்பட்டது தவறுடா? ....தவறு? இல்லே, உன்னைத்தான் கேட்கிறேன். காலமெல்லாம் உனக்காகவே வாழ்ந்த நான், ஆசைகளையெல்லாம் அடியோடு குழி வெட்டிப் புதைத்தவளாக வாழ்ந்த நான் இப்படி ஆசைப்படக்கூடாது என்கிறாயா?'' பதற்றத்துடன் தாயின் சொற்கள் சூடாகவே வெளி வந்தன. ஜக்கு பதறி விட்டான். வேகமாக நாற்காலியிலிருந்து எழுந்தவன் அன்னையின் அருகில் வந்து அவளுடைய எலும்புக் கரங்களைச் சேர்த்துப் பிடித்துக் கொண்டு, ''அம்மா! என் பேரில் கோபித்துக் கொள்ளாதே. இது நாள் வரை உன் வார்த்தையை எதிர்த்தோ, மீறியோ நடந்திருக்கிறேனா? இல்லை — ஏன் நம்மைச் சூழ்ந்துள்ள இந்த அவப்பெயர் இருக்கும் வரை எனக்கு யாரம்மா பெண் கொடுப்பார்கள்?'' என்று கேட்டு விட்டுக் கண்ணீர் பெருக்கினான் அவன்.

நாராயணி கல்லாகச் சமைந்து விட்டாள்: மகனின் கேள்விக்குப் பதில் கூறாமல் மலைத்து உட்கார்ந்து விட்டாள். கால வெள்ளத்தோடு எதிர்நீச்சு போட்டுக் கரையேறிவிட்டோம் என்கிற எண்ணமும் அந்த விநாடியே உடைந்து தெரிந்தது. பெண்ணைப் பெற்றவர்கள் வரதட்சிணை கேட்டால் கொடுத்துவிடுவார்கள். சீர் சிறப்புக்கள் வேண்டுமென்றால் சிறப்புடன் செய்வார்கள். ஆனால்




பிள்ளைக்குத் தகப்பனார் கல்லைப் போல் எங்கோ இருக்கிறார் என்று கூறினால் ஏன், என்ன என்று கேட்க மாட்டார்களா? வாழாவெட்டி வளர்த்த பிள்ளை என்று ஒரு நிறுசாகத்தானே அவர்கள் பார்க்கிறார்கள்?

நாராயணி தன் கணவனை விட்டுப் பிரிந்தபோது நிமிர்ந்த உள்ளத்துடன் நான்கு வயதுப் பையனின் கையை உறுதியாகப் பற்றியபடி அவனுக்கு உரித்

தாக இருந்த கணவன் வீட்டுப் படிகளில் இறங்கித் தெருவில் நடந்தாள். உலகம் பரந்து கிடக்கிறது. நேர்மையாக, மானத்துடன் வாழ இந்தப் பரந்த உலகம் இடம் கொடாமல் போய் விடப் போகிறதா என்றுதான் அன்று நினைத்தாள். அவள் அவனை விட்டுப் பிரிய பல காரணங்கள் இருந்தன. 'திருமணங்கள் சுவர்க்கத்தில் நிகழ்த்தப்படுகின்றன. நம் செயலில் இல்லை' என்கிற வாக்கை அப்படியே ஒத்துக்கொள்ள ஜக்குவின் தந்தை தயாராக இல்லை. திருமணம் பூமியில்தான் நிகழ்த்தப்படுகிறது. அதில் இப்படித் தோல்வியுறும் திருமணங்கள் பெரும்பாலும் பணத்தை முதலாக வைத்து ஆடப்படும் சூதாட்டம் போன்றது என்று அவன் கருதினான். மனைவி அழகியல்ல என்பது மட்டும் அவன் வாதமல்ல; குணப் பொருத்தமும் அமையாதவள் என்கிற முடிவுக்கும் வந்து விட்டான். நாராயணியின் திண்மையான மனம் கணவனின் போக்குக்கு நெகிழ்ந்து கொடுக்க வில்லை.

அவன் கிழக்கு என்றால் இவள் மேற்கு என்பாள். இந்த லட்சணத்தில் மகன் பிறந்ததை அவன் மகிழ்ந்து வரவேற்கவில்லை. இந்த அழகான மனைவியிடம் குழந்தை பிறக்க வேண்டும் என்று தவமா கிடந்தான்? உலகத்தில் எத்தனையோ வேண்டாத உயிர்கள் தோன்றுவது போல் ஜக்குவும் பிறந்தான். குழந்தை பிறந்தால் கணவன் மனைவியின் உறவு பலமடைந்து விடும் என்று மற்றவர்கள் சொன்னதைப் பொய்யாக்குவது போல் அவன் ஒரு நாளாவது தன் குழந்தை, தன் உயிரின் உயிர் அது என்று எட்டிக்கூடப் பார்க்கவில்லை.

மகனுடன் தன்னை வெறுத்து ஒதுக்கியதால் நாராயணியின் திண்மை இன்னும் வலுப் பெற்றது. ஜக்குவுக்கு நான்கு வயதாகும் போது அவள் அவனிடமிருந்து வெளிஉலகில் குதித்து விட்டாள்; எப்படியோ காலம் தள்ள முடியாமலா போய் விடும் என்கிற நம்பிக்கையில்.

இருபது வருஷங்கள் ஆகி விட்டன. ஜக்கு அவன் தந்தையைப் போலவே நல்ல உயரம். அதற்கேற்ற பருமன். மூக்கு, விழிகள், பேச்சு, சிரிப்பு எல்லாம் அப்பாவை உரித்து வைத்திருந்தன. மகனைப் பார்க்கும்போதெல்லாம் நாராயணிக்கு ஒரு நிறை ஏற்பட்டது. அவரை அந்தக் காலத்தில் முதன் முதலாகப் பார்த்த நினைவு பளிச்சிடப் பெருமையோடு மகனைப் பார்த்துக் கொண்டே யிருப்பாள்.

''என்னம்மா அப்படிப் பார்க்கிறாய் ?'' என்று ஜக்கு கேட்டான்.

''ஒன்றுமில்லையடா! என்னவோ பழைய ஞாபகம்....''

''என்ன ஞாபகம்? அந்த மனிதனைப் பற்றி நினைத்துக் கொண்டிருப்பாய்....''

''ஜக்கு! நீ என்ன பேசுகிறாய்? அந்த மனிதன் என்று அவரை அழைப்பது? அவர் உன்னைப் பெற்ற தகப்பனார்டா.... அப்படிச் சொல்லாதே அப்பா—''

''ஹூம்.... மகா தகப்பன்—'' என்று கூறிவிட்டு வெளியே போய் விடுவான் அவன்.

நாராயணி தனக்குள்ளாகவே பேசிக் கொண்டாள். 'ஐந்து வயதிலேயே அவன் தகப்பனிடம் தன் குரோதத்தைக் காட்டி விட்டான். 'அந்த மனிதன்' என்று அவன் இன்றுதானா புதிதாகச் சொல்கிறான். எப்பொழுதுமே அப்படித்தான் பேசுகிறான். இனி தகப்பனுக்கும், மகனுக்கும் ஒட்டு உறவு ஏற்படுமோ, ஏற்படாதோ?'

நாராயணி வீட்டை விட்டு வெளியேறிய பிறகு ஜக்குவின் தகப்பனார் மலை போலத் தம் தாயை நம்பி வாழ்ந்தார். அவர் சம்பாதித்துக் கொடுக்க, அன்னை சமைத்துப் போட இப்படிக் காலம் ஓடிக் கொண்டிருந்தது. இதில் ஒரு விசேஷம் என்னவென்றால் அவர் தாம் கடமை தவறாமல் வாழ்பவர் என்றும், தம்மைப் பெற்றவர்களிடத்தும், உடன் பிறந்தவர்களிடத்தும் மாறாத அன்பு கொண்டிருப்பவர் என்றும் அத்துடன் தம் கடமை முடிந்து விட்டதாகவும் நினைத்து அடியோடு நாராயணியை மறந்து விட்டார். சின்னஞ் சிறு பையனாக வெளியேறிய ஜக்குவைப் பற்றி அவர் மனத்தில் எதுவும் இல்லை. மனைவிக்கு மாதா மாதம் சிறு தொகை ஒன்று அனுப்பி விட்டுத் தம் கடமையைக் கைகழுவி விட்டார் என்று சொல்லலாம்.

முதலில் அந்தப் பணத்தை நாராயணி ஏற்றுக் கொள்ளத் தயங்கினாள். ஆனால், மகனை வளர்த்து ஆளாக்க வேண்டிய பொறுப்பில் தாயாருக்கு மட்டும் பங்கு இல்லை, தந்தைக்கும் உண்டு என்பதை உணர்ந்தவுடன் அந்தப் பொறுப்பு இந்தப் பண உதவியாகத்தான் இருக்கட்டுமே என்று அதை அவள் மறுத்து விடவில்லை.

உலகில் கணவனும், மனைவியும் ஏதோ காரணங்களினால் ஒருவரை விட்டு ஒருவர் பிரிந்து வாழ்கிறார்கள். இவர்கள் பிரியும் போது நாராயணி வாயிற்படி இறங்குமுன்பு சற்றுக் கடுமையாகப் பேசினாள்.

''என்றைக்காவது என் தயவு உங்களுக்குத் தேவைப்படும். அப்படித் தேவைப்பட்டால் என்னைக் கூப்பிடுங்கள்... வருகிறேன். ஆமாம்....கண்டிப்பாக வருகிறேன்.''

அவள் கணவர் அவளைக் கொடூரமாகப் பார்த்தார். ''உன் தயவு என்றைக்குமே எனக்குத் தேவை இல்லை. உன்னை நாடி நான் என்றும் வரமாட்டேன். போ, வெளியே!''

பிறகுதான் நாராயணி எப்படியோ உலகில் துன்பங்கள், ஏச்சுக்களுடன் போராடித் தானும் உயிர் வாழ்ந்து, மகனையும் ஆளாக்கி விட்டுவிட்டாளே. இன்று மகனின் திருமணம் அவள் முன் மகத்தானதாக நிற்கிறது. யார் பெண் கொடுக்க வந்தாலும், நாராயணியின் மஞ்சள் பூசித் திலகமிட்ட முகத்தை விஷக் குறியுடன் பார்க்கிறார்கள். கழுத்திலே மஞ்சள் குளித்துத் துவளும் திருமாங்கல்யச் சரட்டைப் பார்க்கிறார்கள். அடுத்த கேள்வி ஜக்குவின் தந்தை எங்கே என்பதுதானே? அவன் என்னவோ ஒரே வார்த்தையில், ''அம்மா! எனக்காக நீ உன் பழைய வாழ்க்கையை நினைவுபடுத்திக் கொள்ளாதே. அதை அடியோடு மறக்க முயற்சி செய்'' என்றுதான் சொல்லி வருகிறான். ஆனால், பெற்ற தாயின் உள்ளம் அதை ஏற்றுக் கொள்ள வில்லை. இதற்கிடையில், கணவனைப் பற்றி மனைவியின் உள்ளத்தில் ஏற்பட்டிருந்த நினைவு அடியோடு போய் விட்டதா என்றால் அதுதான் இல்லை. மகனிடம் சொல்லிக் கொள்ள முடியாத பாரம் இரகசியமாக அந்த நினைவு அவள்

இதயத்தில் வேரூன்றி நிலைத்து விட்டது. ஒரு தடவை அவள் ஜக்குவின் தந்தை உடல் நலம் இல்லாமல் இருக்கிறார் என்று கேள்வியுற்றுப் பசியும், பட்டினியுமாகக் கோயிலை வலம் வந்து பிரார்த்தித்திருக்கிறாள். தூங்காமல் எத்தனையோ இரவுகளைக் கண்ணீர் வடித்தே கழித்திருக்கிறாள். மனத்தளவில் கூட அவருக்கு எந்தத் தீங்கு நேர்வதையும் அவள் உள்ளம் ஒப்புக் கொள்ளவில்லை. பிறகு யாரோ சொன்னார்கள், அவர் உடல்நலம் பெற்றுவிட்டார் என்று. அன்று, அவள் ஏனோ மகிழ்ந்து உற்சாகமாக இருந்தாள்.

அந்த மனிதர்தான் என்ன? வாழ்க்கைத் துணையின் மதிப்பை உணராமல் இருந்த காலம் தேய்ந்து படிப்படியாக அதன் பெருமையை உணர்ந்த போது மிகமிக ரகசியமாக நாராயணியை நினைத்துக் கொள்வார்.



பாட்டி: ஏண்டாப்பா சிவராமா! நாலு தடவை பெயிலான உனக்குக் கூட கதி மோட்சம் ஏற்பட்டு விட்டதே! எஸ். எஸ். எல். சி. பரீட்சையை ஆயுசு பூரா எவ்வளவு தடவை வேண்டுமானாலும் எழுதலாமாமே... என்ன மோப்பா .... தீர்க்காயுசா இருந்து பரீட்சை எழுதி முடி!

விட்டனவாம். அவருடன் பிறந்தவர்களுக்கு எங்கெங்கோ வேலையாகி, திருமணமாகிக் குழந்தை குட்டிகளுடன் தனித்தனியாகப் பிரிந்து வாழ்கிறார்களாம். இவர் மட்டும் வேலையிலிருந்து ஓய்வு பெற்று மனச்சாந்திக்காகச் சிறு பள்ளிக்கூடம் ஒன்று நடத்துகிறாராம். பள்ளிக்கூடம் என்றதும் நாராயணி வியப்பாகச் சிரித்துக் கொண்டாள். பள்ளிக்கூடக் குழந்தைகளைப் பார்த்த பிறகுகூட அவர் தம் மகனைப் பற்றி நினைக்காதது வியப்புக்குரிய விஷயமாக இருந்தது. பிறருக்கு இரங்கும் அவர் தம் சொந்த விஷயத்தில் கல்லினும் கடினமாகிவிட்ட விந்தையின் இரகசியம் நாராயணிக்குப் புரியவில்லை. ஒரு வேளை, பள்ளிக்கூடம், சேவை என்றெல்லாம் தம்மைத்தாமே ஏமாற்றிக் கொள்ளுகிறாரோ என்னமோ?

யாரோ அவரிடம் வந்து சொன்னார்கள், எங்கோ அனாதை ஆசிரமத்தில் மகன் சாப்பாட்டுக்காகக் கையில் அலுமினியத் தட்டை வைத்துக் கொண்டு வரிசையில் நின்று உணவு பெறுகிறான் என்று. அவனை — ஏன் அவளை — அப்படிக் கைவிட்டது நியாயம்தானா என்று அவரிடம் அவர் உள் மனம் இடித்துக் கேட்டது. அவரா கைவிட்டார்? மனைவிக்குரிய இடத்தை அவளுக்கு அவர் அளிக்கவில்லையே தவிர, தம் நிழலிலிருந்து விலகிப்போ என்று ஒரு நாளும் அவர் சொன்னதில்லை. அவளாகத்தான் உரிமை கோரி, தன் வழியே பிரிந்து வெளியே வந்தாள். எங்கோ ஓர் அனாதை விடுதியில் மகனுடன் வாழ்ந்தாள். அவனை ஆளாக்கியும் விட்டுவிட்டாள்.

ஜக்குவுக்காகப் பெண் கொடுக்க வந்தவர்கள் ஜக்குவின் தந்தையைப் பற்றி அறிய ஆவலாக இருந்தார்கள். உயிரோடு ஒரு மனிதர் கட்டிய மனைவியையும், பெற்ற மகனையும் துறந்து விட்டார் என்றால் அதை உலகம் ஒப்புக் கொள்ளத் தயாராக இல்லை. அப்படி அவர் துறவியாகப் போயிருந்தால் சரிதான். அவருக்கென்று மற்றவர்கள் விதம் விதமான உறவுகளில் நடமாடி வந்தார்கள். அவர்களுடன் அவரும் இணைந்து வாழ்கிறார்.

நாராயணிக்கு மகன் அவ்வாறு கூறிய பிறகு கண் உறக்கம் கொள்ளவில்லை. பட்ட மரம் போல் நின்று விட்ட தன் வாழ்க்கையில் பசுமை காணுவதானால் ஜக்குவின் திருமணம் தான் இனி அவள் குறிக்கோளாக இருக்க வேண்டும். அதற்கு அவரைப் போய்ப் பார்த்துப் பேச வேண்டும். அவரை எப்படிப் போய்ப் பார்ப்பது?

இந்தச் சமயத்தில்தான் அவளுக்கு ஒரு புதுச் செய்தி கிடைத்தது. நாராயணியின் மாமியார் வீட்டில் பல மாறுதல்கள் நடந்து

அடுத்த நாள் அலுவலகத்திலிருந்து வந்த ஜக்கு தன் தாயார் எங்கோ வெளியில் கிளம்ப ஆயத்தமாக நிற்பதைக் கண்டு, ''எங்கேயம்மா பிரயாணம்?'' என்று கூடக் கேட்டு விட்டான். நாராயணி சிறிது நேரம் மௌனமாக இருந்துவிட்டுப் பிறகு, முகத்தில் துணிவுடன், ''உன் அப்பாவை அழைத்து வரப் போகிறேனடா'' என்றாள்.

''அவரையா? அந்த மனிதரையா?''

''டேய், மடையா! உனக்கு அவர் என்னடா தீங்கிழைத்தார்? அவரிடம் நீ பெற வேண்டிய உரிமைகளை, அன்பை நான்தான் உன்னைப் பெற விடாதபடி பிரித்து அழைத்து வந்தேன். இன்று உனக்காக அவரைத் தேடிப் போகும் நான் அன்றே உனக்காக அவர் நிழலில் அல்லல்பட்டோ, அவதிப்பட்டோ வாழ்ந்திருக்கலாம்....''

நாராயணி ஊருக்குப் பிரயாணம் ஆன அன்றே அவளைத் தேடி ஒரு கடிதம் ஊருக்குப் பிரயாணப்பட்டுக் கொண்டிருந்தது. ஜக்குவின் தகப்பனார்தான் அந்தக் கடிதத்தை எழுதியிருந்தார். கடவுளால் ஏற்படுத்தப்பட்ட உறவுகளை உதறி, தம் கடமையை மறந்து வாழும் எவனுக்கும், மற்றப் பணிகளாலோ, சேவைகளினாலோ இன்பம் கிடைப்பதில்லை. என்னதான் நன்னலம் கருதாது சேவை செய்தாலும், ஊரும் உலகமும் அவரைத் தம் கடமையிலிருந்து நழுவி விட்டவர் என்று சுட்டிக் காட்டிப் பேசுகிறது. ஆகவே, இனிமேல் அவரும் நாராயணியைத் தேடி வந்து அவளுடன் தம் சேவை வாழ்க்கையை இணைத்துக் கொள்ள விழைகிறார் என்பது தான் கடிதத்தின் சாரமாக இருந்தது.

ஜக்கு கடிதத்தைப் பல முறைகள் பார்த்து விட்டு, ''பாவம்! அப்பா!'' என்று அவரைப் பற்றி முதன் முறையாக அனுதாபத்துடன் நினைத்தான்!

# அடுத்தபடியாக

# லிட்டர்

# அளவு வருகிறது

1963, ஏப்ரலிலிருந்து, லிட்டர், மில்லி லிட்டர் என்ற மெட்ரிக் முகத்தலளவைகள் நாடு முழுதும் கட்டாய அமுலில் இருககும் ● கிலோகிராம் என்ற நிறுத்தலளவையும், மீட்டர் என்ற நீட்டலள வையும் சென்ற ஆண்டு கட்டாய அமுலில் வந்தது. இதனுல் மெட்ரிக் முறை எடைகளும், அளவுகளும் மட்டுமே இந்தியாவில் சட்டப்படி அமுலில் இருக்கக்கூடிய ஒரே முறையாகும் ● மெட்ரிக் எடைகள், அளவுகளை (லிட்டர், மீட்டர், கிலோ) அதன் உண்மையான மதிப்பை அறிந்து அப்படியே உபயோகித்தால், மெட்ரிக் முறை எவ்வளவு சுலபமானது என்பது தெரியவரும் ● மெட்ரிக் அளவுகளை சேர், வீசை அல்லது ஆழாக்கு போன்ற பழைய அளவுகளுடன் ஒத்துப்பார்க்காதீர்கள்.

துரிதமான சேவைக்கும், நேர்மையான வர்த்தகத்திற்கும்

# முழு மெட்ரிக் யூனிட்டுகளில்

பொருள்களை வாங்குங்கள்

DA 62/778

## 6. அதிர்ச்சி பலவிதம்!




"ஸ்வாமி! ஆச்சரியமான விஷயம்! தலை சுற்றல் மயக்கங்களைப் பற்றி என்னென்னவோ பூர்வ பீடிகைகளைச் சொல்லிவிட்டு, நாகரிகப் போக்கைக் குறை சொல்லி, "நெஞ்சில் உரம் இருக்க வேண்டும். அதனால் நரம்புகளின் அழற்சியால் ஏற்படும் விபரீதங்களைத் (ரத்த அமுக்கம் உள்பட) தடுக்கலாம்" என்று சொல்லி, பொதுவாகத் தலை சுற்றல், மயக்கம் இவை ஏற்படுவதன் காரணங்களைப் பட்டியல் போட்டுச் சொல்லி, இனி இவ்விஷயபரமான விரிவுரைகளைப் பட்டியலில் கண்ட கிரமப்படி எழுதுவதாகத் தெரிவித்திருக்கிறீர்கள். ரொம்ப சந்தோஷம். ஆனால் "ஷாக்" "ஷாக்" என்று என்னமோ ஒன்றைச் சொல்கிறீர்கள். அதனாலும் இந்தத் தலை சுற்றல் மயக்கம் வரலாமே! அதைப் பற்றிச் சொல்லவே இல்லையே?...."

ஐயா! நல்ல கேள்விதான். நியாயமானதும்கூட. ரத்த ஓட்டத்தின் வேகமும் அமுக்கமும் அதிகரித்தலால் என்ற பத்தாவது தலைப்பின் கீழ் இவ்விஷயத்தை விவரிக்கலாம் என்றிருந்தேன். நீங்கள் இதைப் பற்றிக் கேட்டுவிட்டதால் இப்போதே விஷயத்தை விளக்கி விடுகிறேன்.

திடீரென்று ஏற்படும் அதிர்ச்சியை "ஷாக்" என்பர். இதனால் சில சமயம் ரத்த அமுக்கம் அதிகமாவதும் உண்டு. சில சமயம் குறைந்து போவதும் உண்டு. சாதாரணமாகத் தமது நினைவில்லாமல் கிடப்பது முதல் மரணமும் கூட இதனால் திடீரென்று ஏற்பட்டுவிடலாம். இதில் முதலில் ஏற்படுவது இருதயத் துடிப்பு. ஹிருதயம் 'ரேஸ்' குதிரையைப் போல் கன வேகத்தில் அடித்துக் கொள்ளும். கட்டாயமாக இதைத் தொடர்ந்து ரத்த அமுக்கம் அதிகரிக்கும். ஆனால் கொஞ்ச நேரமான பிறகு இது சிறிது சிறிதாகக் குறைந்து கொண்டே வரும். பிறகு கன வேகத்தில் ஓடிய குதிரை இளைப்பாறுவதைப் போல அதிவேகமாய்த் துடித்த ஹிருதயம் மிக மெதுவாக இயங்கத் தொடங்கும். இதைத் தொடர்ந்து ரத்த அமுக்கமும் இயற்கையாய் இருக்க வேண்டியதை விடக் குறைந்து விடும். ஆகவே இந்த 'ஷாக்'கினால் ஏற்படும் நிலையை ரத்த அமுக்கம் என்று நிச்சயமாகச் சொல்லி விட முடியாது. "ஷாக்" என்பது திடீரென்று ஏற்படும் அதிர்ச்சி என்று விளக்கியாயிற்று. இதற்குச் சிகிச்சை அமைதி. அதை உண்டாக்க முயல்வதுதான் செய்யத் தக்கதாகும். சில சமயம் ஓய்வு மட்டும் போதும். வேணுமானால் உற்சாகமூட்டும் சூழ்நிலை சந்தர்ப்பங்களையும் சமைக்கலாம். சில சமயம் ஒரு சிகிச்சையும் செய்ய வாய்ப்பிருக்காது. செய்தாலும் பலனளிக்காது.—இவற்றை விஸ்தாரமாக விளக்கிக் கொண்டிருப்பதை விட இரண்டு உதாரணங்களைச் சொன்னால் விஷயம் விளங்கிவிடும். முதல் உதாரணம்: சமீபத்தில் நேர்ந்த ஒரு சம்பவம். மற்றொன்று: சரித்திர வாயிலாகக் கிடைப்பது.

ஒரு பிரபல வைத்தியர் திருவிதாங்கூரைச் சேர்ந்தவர். ஏதோ வேலையாக வெளியூர் சென்றிருந்தவர். அன்று காலையில்தான் வீடு திரும்பினார். வந்ததும் அவருக்கு ஒரு திடுக்கிடும் செய்தி கிடைத்தது. நாராயணன் மாமாவுக்கு ஒரு லாரி விபத்து ஏற்பட்டது. விபத்து ஏற்பட்ட இடத்திலேயே மூர்ச்சையாகி விட்டார். 'அருகிலுள்ள ஒரு பிரைவேட் நர்ஸிங் ஹோமில் சேர்க்கப்பட்டார். இரண்டு நாட்களாக என்னென்னமோ சிகிச்சை ரத்த அமுக்கம் அதிகமாம்' என்றெல்லாம் தகவல் கிடைத்தது. வைத்தியருக்குச் சொல்லவொண்ணாத அனுதாபம். விபத்துக்குள்ளான அன்பரிடம் நெடு நாளைய நட்பு. விஷயத்தைக் கேட்டதும் உடனே அந்த நர்ஸிங் ஹோமுக்கு விரைந்தார். நண்பரைக் கண்டார். நிலைமையை அறிந்தார்.

"அதெல்லாம் சரி நாராயணன், அடிகிடி ஒன்றுமில்லாமல் போனது நல்ல காலம்..."

"அடியே படவில்லை. லாரி என்னைச் சீண்டக்கூட இல்லை. நெருக்கத்தில் வந்தது. ஒருகால் முட்டிவிடுமோ என்று எண்ணினேன். அப்படி ஏதாவது நேர்ந்திருந்தால் என் குடும்பம்..." என்று அழத் தொடங்கினார்.

வைத்தியருக்கு விஷயம் விளங்கிவிட்டது. லாரி அடித்து வந்ததும் திரு நாராயணன் தம்மீது லாரி ஏறிவிட்டதாகவே எண்ணிப் பயந்து விட்டார். அது மட்டுமா? அதனால் தாம் மரித்தால்... தம் குடும்பம் எப்படி அனாதரவாகத் தெருவில் நிற்கும் என்றெல்லாம் எண்ணம் ஒரு கணப் பொழுதில் இவ்வளவும் மனத்தில் எழவே, கலவரத்தால் உடம்பில் உள்ள ரத்தத்தில் பெரும் பகுதி மூளைக்குச் சென்றிருக்கிறது. அந்த அமுக்கம் தாளாமல் கண் இருட்டி, தலை சுற்றி, சைக்கிளிலிருந்து விழுந்து விட்டார். இதற்குள் லாரி நின்றுவிட்டது; மூர்ச்சையாகக் கிடந்தவரை அருகிலிருந்த நர்ஸிங் ஹோமில் யாரோ கொண்டு போய்ச் சேர்த்தது — இவை ஒன்றுமே திரு நாராயணனுக்குத் தெரியாது. டாக்டர் பார்த்தபோது ரத்த அமுக்கம் அதிகமிருந்தது. ஏதோ சிகிச்சைகள்...தன் நினைவு திரு நாராயணனுக்கு வந்தது. விஷயம் அவர் வீட்டுக்கு அனுப்பப்பட்டது. டாக்டர் மட்டும் அது ரத்த அமுக்கம்தான் என்ற தம் முடிவை மாற்றிக்கொள்ளவில்லை. பழ ரசம் ஆகாரம். சிறிதளவு திரவம். மருந்துகள். மற்றபடி உபவாசம். வைத்தியர் சென்று பார்த்தபோது திரு நாராயணன் நிலை "கஞ்சி வரதப்பா..." என்ற கதையாக இருந்தது.

இந்த ரத்த அமுக்கம் தாற்காலிகமாக ஏற்பட்ட நிலை. கொஞ்சம் தைரியமூட்டி ஆசுவாசப்படுத்தியிருந்தால் போதுமாயிருக்கும். வீணாகப் பட்டினி போட்டு ரத்த அமுக்கம் என்ற கவலையை அவர் மனத்தில்

டெலிபோனில்: ''ஹலோ! அது மூன்று, மூன்று, மூன்று, மூன்று ?''



''இல்லை; முப்பத்து மூன்று, முப்பத்து மூன்று !''

''ஓ! தவறான நம்பருக்குப் போன் செய்து விட்டேன், மன்னிக்கவும்!''

புகுத்தி... என்ன கஷ்டம்! வைத்தியருக்கு விஷயம் விளங்கி விட்டது. உடனே ஒரு தந்திரம் செய்தார்.

''சரிதான் நாராயணன். ஊரிலிருந்து வந்ததும் உன் விஷயத்தைக் கேட்டேன். உடனே இங்கே ஓடிவந்தேன். காப்பி கூடக் குடிக்கவில்லை. பசி காதை அடைக்கிறது. நான் போய்விட்டு வரட்டுமா?'' என்றார் வைத்தியர்.

''அடடா! நீங்கள் வந்து ஏதோ பேசினதிலிருந்து எனக்கு ஒரு நிம்மதி ஏற்பட்டிருக்கிறது. சிறிது நேரத்தில் டாக்டர் வந்து விடுவார். அவரையும் நேரில் பார்த்துவிட்டுப் போவீர்களானால் எனக்குத் திருப்தியாயிருக்கும். நான் சொல்லி அனுப்பி உங்களுக்கு இங்கேயே கொஞ்சம் காப்பியும் இட்டிலியும் வரவழைக்கிறேன்....''

''கொஞ்சம் காப்பி...இரண்டு இட்டிலி என்பதெல்லாம் எனக்குப் போதாதையா. நான் வீட்டுக்கே போகிறேன்!''

''இல்லை, இல்லை. ஒரு டஜன் இட்டிலி, ஒரு காலன் காப்பி. போதுமா? சற்றுப் பொறுங்கள்......''

இட்டிலி வந்தது. வைத்தியர் ''ஐயய்யே! நீ சும்மா பார்த்துக் கொண்டிருக்கும்போது நான் மட்டும் எப்படிச் சாப்பிடுவது? மனசு ஒப்பாது....'' என்று ஏதேதோ சொல்லி, நாராயணனையும் கூடவே சாப்பிடச் சொன்னார். பாவம் நாராயணன்...! வைத்தியர் தைரியத்தில் ஒரு கை பார்த்து விட்டார், இட்டிலி காப்பியை....—

டாக்டர் வந்தார். வைத்தியரோடு குசலப் பிரச்னம் ஆயிற்று. நாராயணன் ரத்த அமுக்கத்தைப் பார்த்தார். சந்தோஷத்தால் ஒரு குதி குதித்தார்.

''ஆச்சரியம்! ஆச்சரியம்!! இரண்டு மணி நேரத்துக்குள் அற்புதமாக ரத்த அமுக்கம் குறைந்து விட்டதே!'' என்று ஏதோ சொன்னார். பிறகு வைத்தியருடன் பேசி விவரமறிந்த பிறகு.....

''என்ன வைத்தியரே! நாராயணனை எனக்கு முன் பின் தெரியாதா? இங்கு வந்தபோது இருந்த ரத்தஅமுக்கத்தைப்பார்த்து.''

''அது தாற்காலிகமான அதிர்ச்சியால் ஏற்பட்டது. சிறிது ஆசுவாசப்படுத்தினால் போதுமே!'' என்றார் வைத்தியர்.

இதிலிருந்து வேறுபட்ட இனத்தைச்சேர்ந்த ஒரு வகை அதிர்ச்சி உண்டு. அதற்கும் ஓர் உதாரணத்தைச் சொன்னால் எளிதில் புரியும்.

வெள்ளைக்காரன் ஆட்சி நடந்து வந்த காலம்.

அர்பத் நட் பாங்க் என்று ஒன்று அக்காலத்தில் இருந்தது. மேல்நாட்டினர் தனித்து நடத்தி வந்த நிலையம். அதன் கிளை ஸ்தாபனங்கள் உலகத்தில் வெள்ளையன் இருந்த நாட்டிலெல்லாம் நிறுவப்பட்டு வெற்றிகரமாக நடந்து வந்தது. வியாபாரத் துறையில் ஏகபோகமாகத் தொழில் நடத்தி வந்த வெள்ளையருக்கு இந்தப் பாங்கி துணை புரிந்து வந்தது.

வியாபாரத் துறையில் 'வெள்ளையரோடு ஒன்றி வாழ்ந்தவர் நம் நாட்டிலும் பலர் இருந்தனர்.

சகோதர வியாபாரியிடம் தமக்கு அர்பத் நட் பாங்கில் இருக்கும் லேவாதேவி விஷயத்தைச் சொல்லிக் கொள்வதே தம் அந்தஸ்தை உயர்த்தும் விஷயமென்று அவர்கள் கருதி வந்தனர். நம்மவரின் பணமோ—ஏழை பணக்காரன் என்ற வித்தியாசம் இல்லாமல் எல்லோருடையதும்தான் மிக ஏராளமாக அந்தப் பாங்கியில் இருந்தது.

திடீரென்று ஒரு நாள் பாங்கி விழுந்து விட்டது. கதவை அடைத்து விட்டனர்.

சௌகார் பேட்டையில் பிரபல வியாபாரி ஒருவர். வடுகு பாஷை பேசும் வைசியர். அவருடைய ஏஜண்டு அன்று முதலாளியிடம் சென்றார்...

''அர்பத் நட் பாங்க் போயித்தண்டீ....!'' என்றார் ஏஜண்டு.

''ஆ! போயித்தா....'' என்று செட்டியார் மலர விழித்தார். ''போயித்தா....ஆ....'' என்று வாயைத் திறந்தவர் பிறகு திறந்த வாயை மூடவே இல்லை....

''ஷாக்'' அதிர்ச்சியில் பிரபல வியாபாரி மறைந்தார். இப்படி எத்தனை எத்தனையோ பேர் அச்சமயம் அந்த 'ஷாக்'குக்குப் பலியாயினர்.

தாற்காலிகமான அதிர்ச்சியினால் ஏற்படும் தாற்காலிக ரத்த அமுக்கத்தின் விளைவு இவர் மரணத்திலும் முடியலாம். இவ்வித ரத்த அமுக்கத்துக்குச் சிகிச்சை செய்ய நேரமும் வாய்ப்பும் ஏது?

ஆகவே, எல்லோருக்கும் பொதுவானதும் முக்கியமாக ரத்த அமுக்கம் உள்ளவர்களுக்கும் சொல்லத் தக்க ஒரு சிறந்த விஷயம் மனத்தின் எழுச்சி ஸுகபரமானதாயினும் சரி, துக்கபரமானதாயினும் சரி — ஆச்சரியபரமானதாயினும் சரி அற்புத அதிசயபரமானதாயினும் சரி அளவு கடந்து போக விடக் கூடாது. நிகழ்ச்சிகளையனுபவிப்பது தவிர்க்க முடியாததுதான். ஆயினும் மனவெழுச்சி அளவோடுதான் இருக்க வேணுமென்பதைக் கட்டுப்பாடுடன் செயலில் சீலித்திடப் பழக்கிக் கொள்வது ஒன்றுதான் இவ்வதிர்ச்சிகளின் விளைவுகளிலிருந்து தப்பிக்க வழி. இது ஒரே வழிதான் உள்ளது. சொல்வது சுலபம். சீலிப்பது சிரமம். ஆனால் இதைச் சீலித்திட முயல்வது கட்டாயம் செய்யத் தக்கது; செய்யக் கூடியது.




# பழையன கழிந்து
# புதியன புகுதல்
# வழுவல கால
# வகையினானே

நம் நாட்டுமக்கள் பலர் தங்கள்
சேமிப்புகளைத் தங்க
ஆபரணங்களாக வைத்திருந்த
காலம் கடந்துவிட்டது.
வியாபாரிகள், தொழிலதிபர்கள்,
மற்றும் பணக்காரர்கள்
மட்டுமே பாங்குகளை
உபயோகித்துக்கொண்ட
அந்நாட்களில் பாங்கு
அலுவல்களின் நன்மைகள்
சமுதாயத்திற்குப் பரவலாகக்
கிடைக்கவில்லை. இப்பொழுதோ
பல கிளைகள் திறக்கப்பட்டதனால்
பாங்கு அலுவல்களின்
பழக்கம் சமுதாயத்தின்
எல்லா பிரிவினரிடையேயும்
வியாபித்துவிட்டது.
உங்கள் கணக்கு சிறியதோ
பெரியதோ எப்பொழுதும்
உதவ உங்கள் பக்கத்திலேயே
எங்கள் பாங்கு உள்ளது.

**உங்கள் பிரச்சனை-பாங்கு
அலுவலோ அல்லது
சேமிப்பு திட்டங்களோ,
எதாயினும் எங்கள் கிளைகளில்
எதாவதொன்றுக்கு வருக.
அங்கு உங்களை வரவேற்று
உதவிபுரியும் அலுவலாளரைக்
காண்பீர்.**




# இந்தியன் பாங்க் லிட்.

(நிறுவனம்: 1907)

பதிவு அலுவலகம்:
**இந்தியன் சேம்பர் பில்டிங்ஸ், எஸ்பிளனேட், சென்னை-1.**

ஸ்ரீ. எஸ். சுந்தரம், காரியதரிசி.

அட்டைப் படக்கதை

# நாககாந்தாரி

''அடுத்ததாக நாக காந்தாரி ராகத்தில் ஸரஸிஜநாப ஸோதரி என்ற கீர்த்தனம்...'' என்று ரேடியோ அறிவிப்பு முழங்கிற்று. எங்கோ சிந்தனையும் ஏதோ நினைவுமாக, உலர்ந்த துணிகளைக் கொடியிலிருந்து எடுக்கும் பணியில் ஈடுபட்டிருந்த கல்யாணி அப்படியே அசைவற்று நின்று அந்த இசையிலே கருத்தைச் செலுத்தலானாள்.

அப்போது மணி ஐந்தே முக்கால். ரேடியோவில் மூன்றாவது ஒலிபரப்பு ஆரம்பமாகி நடந்து கொண்டிருந்தது. ஐந்தரை மணி முதல் யாரோ இளம் பாடகி பாடிக் கொண்டிருக்கிறாள். கல்யாணி ரேடியோ வைக்கவில்லை; பக்கத்து வீட்டிலிருந்து பாட்டின் ஒலி கேட்டுக் கொண்டிருந்தது. இதுவரையில் அதைப் பொருட்படுத்தாத கல்யாணி இப்போது கவனித்தாள்.

மெதுவான சாரீரம்தான். சிறிது குளுமை இருந்தது. கீர்த்தனத்தைத் தொடங்கிய காலப் பிரமாணம் சரியில்லை. அதனால் பல்லவி, அநுபல்லவி, சரணங்களில் ஓட்டமும் இழுப்புமாகப் பாட்டு என்னவோபோல் இருந்தது. சாஹித்திய உச்சரிப்புக்களில் அங்கங்கே இடம் பெற வேண்டிய அழுத்தம் இல்லை; 'சங்கதி'களும் திருப்திகரமாக இல்லை.

கல்யாணி புருவத்தை நெரித்தாள், உதட்டைப் பிதுக்கினாள்; சூள் கொட்டினாள்; பெருமூச்சு விட்டாள். 'நன்றாக இருக்கிறதோ, இல்லையோ; ரேடியோவில் சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது, பாடுகிறாள். மேடோ பள்ளமோ, பன்னெடுங் காலம் பாடிக் கொண்டு நன்றாக இருக்கட்டும்' என்று எண்ணியபடி துணிகளை எடுத்துக் கொண்டு கூடத்துக்கு வந்தாள். அவள் நினைவோட்டம் தொடர்ந்தது.

'ஆமாம்; பிரமாதம்! பிரமாதம்!' என்று பலரும் பாராட்ட, உற்சாகம் மீதூரப் பாடி நான் என்ன கண்டேன்? பத்து வயதிலிருந்தே பதக்கமும் கோப்பையுமாகப் பரிசு பல பெற்ற என் பாட்டின் நிலை என்னவாயிற்று? 'மூடு வாயை!' என்று அந்த உத்தமி ஒரு நாள் — எப்பேர்ப்பட்ட நாள்? வெள்ளிக் கிழமை! எத்தகைய நேரம்? சந்தியா காலம் — சொன்னாள். அன்று முதல் ஆயுள் முழுதும் வாயை மூடிக்கொண்டே இருக்கும்படி ஆகிவிட்டது....!

அவள் கண்களில் நீர் துளித்தது. நெஞ்சின் ஆழத்திலிருந்து அழுகை குமுறி வந்தது. அதன் விளைவாக உதடுகள் இலேசாகத் துடிக்கலாயின. மெல்ல உதட்டைக் கடித்து, மேலெழுந்து வந்த அழுகையை உள்ளுக்கே அமிழ்த்தினாள்.

பொருள்கள் கண்ணுக்குப் புலப்படாமல் மங்கி மறைவதிலிருந்து இருள் பரவி வருவதை உணர்ந்து கண்ணைத் துடைத்துக் கொண்டு சென்று விளக்கைப் பொருத்தினாள். நிமிர்ந்த அவள் பார்வையில் சோதனை போல் முதன் முதலில் தென்பட்டது அவளுடைய தம்புராதான். தாயற்ற ஏழைக் குழந்தை சலுகை ஏதும் கிட்டாத நிலையில் தனித்து ஒருபுறமாக நின்று ஏக்கத்துடன் பார்ப்பது போல் அறையின் மூலையில் நின்று அவளை நோக்கிற்று அது. அவள் அதைத் தீண்டி எவ்வளவு காலம் ஆயிற்று! திருமணம் நடந்து இல்லத்து அமர்ந்து பாலாஜியைப் பெற்றெடுக்கு முன் அது தானே அவளுக்குச் செல்வம்! குந்தி கன்னிகையாக இருக்கும் போது துர்வாஸர் அருளிய மந்திர சக்தியால் கர்ணனைச் செல்வனாக அடைந்தாள். அடடா! அவள் அதை எப்படி யெல்லாம்தான் போற்றிப் பாதுகாத்து வந்தாள்! காலையிலும், மாலையிலும் பார்த்துப் பார்த்துத் துடைப்பதும், சந்தனப் பொட்டும் குங்குமப் பொட்டும் இட்டு அலங்கரிப்பதும், வெள்ளி செவ்வாய் தவறாமல் பூ வாங்கிச் சூட்டி, சாம்பிராணிப் புகை காட்டி வணங்குவதுமாக எப்படித்தான் அதை ஆராதித்து வந்தாள்! இன்றைய அதன் நிலை? சன்னல் வழியே வந்து படியும் தெருப் புழுதி; நைந்து அழுக்கேறிய உறை; உள்ளே குடம், தண்டு, புருடை, தந்தி — ஆகியவற்றின் நிலை? ஆண்டவனுக்கே வெளிச்சம்! சீண்டுவாரற்று மூலையிலே நிற்கும் அதைப் பார்த்தபோது அவளுடைய அடிவயிற்றில் சங்கடம் உண்டாயிற்று; அதனுடன், 'நல்லதோர் வீணை செய்தே அதை நலங்கெடப் புழுதியில் எறிவதுண்டோ' என்ற பாரதி பாடலும் நெஞ்சிலே இடம் பெற்றது. தன் வசமிழந்த நிலையிலே அதனிடம் சென்றாள். அதை எடுத்து உறையைக் கழற்றினாள். மடியில் வைத்துக் கொண்டு உட்கார்ந்தாள். தந்திகளை மீட்ட எண்ணினாள். கையும் மெய்யும் ஒருங்கே நடுங்க அப்படியே சுவரில் சாய்ந்தாள். நினைவு அவளை இழுத்துக்கொண்டே போயிற்று.

''என்ன ஐயா, வேலை வேலை என்று எப்பொழுது பார்த்தாலும் ஆபீஸைக் கட்டி அழுதுகொண்டு! இன்று ஒரு நாள் லீவு கேட்டுத் தொலைத்து விட்டு அங்கே வந்திருந்தால் தான் என்ன? ஆயிரம் பேர் நிறைந்த சபையில் கூச்சமோ, அச்சமோ லவலேசமும் இன்றி, கணீரென்று பாடி, பரிசையும் தட்டி விட்டாளே ஐயா உம்முடைய பெண்! சின்னஞ் சிறு வயசிலே கலெக்டர் கையால் பரிசு வாங்கின சிறப்பு ஒருபுறம் இருக்கட்டும்; கலெக்டர் தம்பதிகளும் மற்றப் பெரிய மனிதர்களும் குழந்தையை மூச்சு விடாமல் பாராட்



டிருர்களே, அதையல்லவா சொல்லவேண்டும்! இதையெல்லாம் பார்க்கவும் கேட்கவும் நீர் கொடுத்து வைக்கவில்லே!''

உரிமையுடைய நண்பர் வந்து இவ்வாறு சொன்னபோது கல்யாணியின் தந்தை கணபதிராமனின் உள்ளம் உவகையால் பூரித்தது. ''அப்படியா? அடேயப்பா! இவ்வளவெல்லாம் நான் எதிர்பார்க்கவில்லே'' என்ருர் அவர்.

''இன்னும் நாலேந்து பெண்களும் பாடினுர்கள். இவளது 'ஸரஸிஜநாப ஸோதரி'க்கு முன்னுல் எதுவுமே எடுபடவில்லே. குழந்தைக்குத் திருஷ்டி கழித்துப் போடச் சொல்லும். அத்துடன் இன்னென்றும் சொல்கிறேன். சில பேரைப் போல் பால் மணம் மாருத பருவத்திலேயே 'கல்யாணம், கல்யாணம்' என்று அலேயாதேயும். இன்னும் தேட்டையான வாத்தியாராகப் பார்த்து ஏற்பாடு செய்து பாட்டை அபிவிருத்தி செய்யும். குழந்தை நன்ருகக் கச்சேரி செய்யட்டும்.''

இப்படிச் சொல்லிவிட்டு நண்பர் போய் விட்டார். கணபதிராமன் உள்ளே வந்தார். கல்யாணி பரிசு பெற்ற வெள்ளிக் குத்து விளக்கைத் தகப்பனரிடம் கொடுத்து நமஸ்கரித்தாள். அவள் முகம் சந்திர மண்டலம் போல் ஜொலித்தது.

கணபதிராமன் மறுநாளே கல்யாணி இசை பயிலப் பெரிய வித்துவான் ஒருவரிடம் பேசி முடித்து விட்டார். ''நடேச மாமா சொன்னது போல் நான் நன்ருகக் கற்றுத் தேறிக் கச்சேரி செய்கிறேன் அப்பா. நடுவிலே கல்யாணம் அது இது என்ருல் இந்த ஏற்பாடே வேண்டாம்'' என்ருள் கல்யாணி. ''சரி, சரி; அதைப் பற்றி இப்போது என்ன?'' என்ருர் கணபதிராமன். வித்துவான் மூலம் உயர்தரமான தம்புராவும் வாங்கியாகி விட்டது.

# எஸ்லார்வி

இரண்டு ஆண்டுகள் இரண்டு விநாடிகளைப்போல ஓடி மறைந்தன. கல்யாணி அரங்கேறி விட்டாள். அனேவரும் கொண்டாடக் கச்சேரி செய்யத் தொடங்கி விட்டாள்.

''அம்மா, கல்யாணி! சுருதி சுத்தமான இசை பரம்பொருளுக்கு உவந்தது. அப்படிப் பாடுகிறவர்களுக்கு ஆண்டவனின் அருள் எப்போதும் உண்டு. அடுத்தபடியாக லயம். அதில் மிகவும் கண்டிப்பாக இருக்க வேண்டும். 'சுருதிர்மாதா லய:பிதா'. இசைக்கு இவ்விரண்டும் இரண்டு கண்கள். அப்புறம் அழகு ததும்ப ஆலாபனம் செய்வதும் ஸ்வர விந்நியாஸம் செய்வதும் அவரவர் ஆற்றலேப் பொறுத்தவை. நீ சுருதி – லயம் பிசகாமல் பாட வேண்டும்'' என்ருர் அவளுடைய குரு. அவள் அப்படியே நடந்து கொண்டு வந்தாள்.

ஒவ்வொரு கச்சேரியிலும் அவள் தவருமல் 'ஸரஸிஜநாப ஸோதரி' பாடி வந்தாள். தனக்கு முதன் முதலில் பரிசு வாங்கித் தந்த பாட்டு என்று அவளுக்கு அதனிடம் அபிமானம்; பக்தி. எல்லாருக்குமே இந்த உண்மை தெரிய நியாயம் இல்லே. நாள் ஆக ஆக, அவள் அந்தப் பாட்டுக்கு உரிய ராகமான நாககாந்தாரியை இயன்ற வரையில் விஸ்தாரமாக ஆலாபனம் செய்யவும் தொடங்கி

## நீங்கள் போகலாம்!

அது ஒரு கிராமம். அங்கு உள்ள முக்கியமான சாலையில் ஒரு போலீஸ் கான்ஸ்டேபிள் நின்றுகொண்டு வருகிற கார்களையும் வண்டிகளையும் திருப்பி விட்டுக் கொண்டிருந்தார். அப்பொழுது வேகமாக ஒரு போலீஸ் ஜீப் வந்தது. அதையும் அந்தக் கான்ஸ்டேபிள் தடுத்து நிறுத்திவிட்டார்.

ஜீப்பை ஓட்டிக் கொண்டு வந்தவரின் முகம் கோபத்தால் சிவந்து விட்டது. ''நான் ஒரு போலீஸ் சார்ஜெண்ட் என்பது தெரிகிறதல்லவா?'' என்று உறுமினார்.

கான்ஸ்டேபிள் உடனே ஒரு சலாம் போட்டு விட்டு, ''தெரிகிறது ஸார்...! மன்னிக்க வேண்டும். இந்த வழியாகப்



போகும் எல்லா வண்டிகளையும் கார்களையும் நேர் ரஸ்தாவில் போகவிடாமல் திருப்பி விடும்படி உத்தரவு வந்திருக்கிறது. ஏனென்றால் நேர் ரஸ்தா வழியாகப் போனால் ஒரு பாலம் வருகிறது. அது எந்தச் சந்தர்ப்பத்திலும் இடிந்து விழுந்துவிடும். ஆனால் நீங்கள் சார்ஜெண்டா யிருப்பதனால் உங்களைத் தடுக்க வில்லை. நேரே போங்கள்....!'' என்று கூறி, சார்ஜெண்டை அனுப்பி வைக்கும் பாவனையில் மீண்டும் ஒரு சலாம் வைத்தார்.

---

னாள். அவள் அந்தப் பாட்டைப் பாடத் தொடங்கியதுமே 'அப்ளாஸ்' விழுவது சகஜமாகிவிட்டது. இசையறிந்த ரசிகர்கள் அவளை 'நாக காந்தாரி' என்றே குறிப்பிடலானார்கள். அதிலே அவளுக்கும் பெரு மகிழ்ச்சிதான்.

தாயாரோ, தகப்பனாரோ, மற்றுமுள்ளவரோ கல்யாணியின் கல்யாணம் பற்றி எண்ணவில்லை. அவளும் அதை அடியோடு மறந்த நிலையில் கர்ம வீராங்கனையாக எந்த நேரமும் இசையிலே மூழ்கிக் கிடந்தாள். இந்நிலையில் 'பல காலத்துக்குப் பின் வந்த விருந்தாளி'யாக வந்து சேர்ந்தார்கள் கணபதிராமனின் தமையனாரும் அவர் மனைவியும். தமையனார் ஒரே சொல்லில் கண்டித்தார்; அவர் மனைவி தொணதொணத்துத் தீர்த்தாள்.

''குரல் நன்றாயிருக்கிறது. பாட்டு வருகிறது. சிறிது வசதியும் இருக்கிறது என்றால் ஏதோ கற்றுக் கொண்டாயிற்று; சில காலம் மேடை ஏறிப் பாடியும் ஆயிற்று. இப்படியே தொடர்வது சரியன்று; ஒரு வரனைப் பார்; உடனே கல்யாணத்தை நடத்து'' என்றார் அண்ணா. அவர், கல்யாணி கச்சேரி செய்கிறாள் என்று கேள்விப்பட்டிருந்தார். நேரில் வந்து அவள் வளர்ச்சியைப் பார்த்ததும் இப்படிக் கட்டளை யிட்டார். தமையனையும், தமையன் மனைவியையும் பெற்றோரைப் போல் பாவித்துப் பயபக்தியுடன் ஒழுகி வந்த கணபதிராமனால் அந்தக் கட்டளையை மீற முடியவில்லை. உடனடியாகவே வரன் தேடத் தொடங்கினார். கல்யாணியின் முகமும் உள்ளமும் சாம்பத் தொடங்கின.

அதிக சிரமம் இல்லாமலே வரன் குதிர்ந்து விட்டது. பெண் பார்க்க வந்தவர்கள் 'ராங்கி'யாக நடந்து கொண்டார்கள். கல்யாணி பாடினாள். அவர்கள் பேசிக்கொண்டே இருந்தார்கள். வரனாக வந்திருந்த கல்யாணம் அழகனாக இருந்தான்; அமரிக்கையாக நடந்து கொண்டான். கண்ணை மூடியபடி இலேசாக விரலை அசைத்துத் தாளமிட்டுப் பாட்டை ரசித்தான். அது ஒன்றே ஒன்றுதான் கல்யாணிக்குச் சிறிது ஆறுதல் அளித்தது.

விமரிசையாகவே திருமணம் நடந்தது. கல்யாணி கணவன் வீட்டுக்குச் சென்றாள். அடக்கமாக நடந்து கொண்டாள். என்ன முயன்றும் மாமியார் ஒருத்தியை மட்டும் அவளால் திருப்தி செய்விக்க முடியவில்லை. ஆண்டவன் ஆட, மான் ஆடும், மழுவாடும், எல்லாமே ஆடும் என்பதுபோல அந்த வீட்டில் ஜானகி அம்மாள் ஆடினால் அனைத்துமே ஆடும். ஆகவே அந்த அம்மாளின் கையிலேதான் இருக்கிறது தன் வாழ்வு என்பதைக் கல்யாணி உடனடியாகவே தெரிந்துகொண்டு விட்டாள்.

ஏதோ ஒரு வைபவத்தை முன்னிட்டு எல்லாரும் வெளியே சென்றிருந்தார்கள். கல்யாணி தனியே வீட்டில் இருந்தாள். எதிர்பாராதவிதமாக மூன்று மணிக்கே வந்து நின்றான் கல்யாணம். அவள் திகைப்புடன் அவனை நோக்கினாள். அவன் சிரித்த முகத்துடன் தன் கைப் பொட்டணங்களை அவளிடம் கொடுத்தான். பாதம் அல்வா, பூரி கிழங்கு, பஜ்ஜி, வாசனைக் கதம்பம்! அவள் காப்பி தயாரித்தாள்.

''இன்று என்ன விசேஷம்? அரை நாள் லீவா?'' என்று கேட்டாள்.

''எனக்குத் தலைவலியாம்'' — அவன் சிரித்தான்.

''சுக்கு இழைத்துப் பற்றுப் போடவா?''

''நெற்றியை ஒரு தரம் உன் கையால் வருடினாலே போதும்.''

''இப்படி வந்ததற்கு அம்மா ஒன்றும் சொல்ல மாட்டார்களா?''

''நீ ஏதாவது உளறி வைக்கப் போகிறாய். உரிய நேரத்தில் நான் வந்ததாகத்தான் இருக்க வேண்டும்.''

''நீங்கள் தினமும் வருகிற நேரம் மாலை ஆறு மணி. அம்மாவும் மற்றவர்களும் அதற்கும் முன்பே வந்து விட்டால்?''

கல்யாணத்தின் உடம்பு ஒரு முறை குலுங்கிற்று. ''ஏதாவது சொல்லாதே! ஏழு மணிக்குத்தான் அவர்கள் வருவார்கள்.''

கல்யாணி கலகலவென்று சிரித்தாள். அவன் ரசித்தான். சிற்றுண்டி, காப்பி முடிந்




ஸ்ரீ கணேஷ்ராம்ஸ்

திடீர் Dhideer (INSTANT)

## தக்காளி சாம்பார் - ரசம்

(2 தனி பவுடர்கள்)

3 நிமிஷங்களில் தயார்

மேற்படி பவுடர்களை தண்ணீரில் கலந்து நிமிஷ கொதிப்புடன் உபயோகத்திற்குத் தயார் இயற்கையான மணம், ருசி மற்றும் வாசனை

ஸ்ரீ கணேஷ்ராம் & கோ. (போன் 28665) 46, தம்பு செட்டித் தெரு, சென்னை-1

## பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு (பிரைவேட்) லிட்.,

(சிறுவியது)

"விஷ்ணு விஹார்", 17-A, ஸயான் - மாதுங்கா எஸ்டேட்

(கிங்ஸ் ஸர்க்கிள் ரயில்வே ஸ்டேஷனுக்கு எதிரில்)

Post Bag No. 6759. பம்பாய் – 22 தந்தி: "GROWRICH"

போன் 471455

25 மாதங்கள் | குறுகிய கால ஏலச் சீட்டுகள் — 2-வது ஞாயிற்றுக்கிழமை ஏலங்கள் — 1963 ஏப்ரல் மாத ஸீரிஸ் | 25 அங்கத்தினர்கள்

சேரக் கடைசி தேதி 13-4-1963 ... முதல் ஏலத் தேதி 14-4-1963

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| A | ரூ. 200/- | ரூ. 5,000/- | F | ரூ. 25/- | ரூ. 625/- |
| B | ரூ. 100/- | ரூ. 2,500/- | G | ரூ. 20/- | ரூ. 500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250/- | J | ரூ. 10/- | ரூ. 250/- |

### நீண்டகால ஏலச் சீட்டுகள்

சேரக் கடைசி தேதி 13-4-1963 ... முதல் ஏலத் தேதி 14-4-1963

50 மாதங்கள் 50 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | குறித்த தள்ளுபடி |
|---|---|---|---|
| C | ரூ. 200/- | ரூ. 10,000/- | ரூ. 1,000/- |
| A | ரூ. 100/- | ரூ. 5,000/- | ரூ. 500/- |
| B | ரூ. 50/- | ரூ. 2,500/- | ரூ. 250/- |
| D | ரூ. 20/- | ரூ. 1,000/- | ரூ. 100/- |

விலாசம் தெளிவாக எழுதிக் கேட்பவர்களுக்கு எங்கள் விதிகள் இலவசமாக அனுப்பப்படும். சீட்டில் அங்கத்தினர்களைச் சேர்த்துக் கொள்ளும் உரிமை பண்டைச் சேர்ந்தது.

வெள்ளிக்கிழமை (வார விடுமுறை நாள்)

வேலை நேரம்: காலை 8 முதல் 11 மணி வரை; மாலை 4 முதல் 8 மணி வரை

(போர்டார் உத்திரவுப்படி) எம். வி. சுப்ரமணியம், மானேஜிங் டைரக்டர்

தலைமை ஆபீஸ்: "பாலுஸேரி பில்டிங்ஸ்", 3, சிங்காராச்சாரி தெரு, தபால் பெட்டி நெ. 414 திருவல்லிக்கேணி, மதராஸ்-5

இதர கிளைகள்:
1. 185, முதல் மாடி, ஆறுவது கிராஸ், காந்தி நகர், பெங்களூர்-9
2. "ஜான்ஸன் ஹவுஸ்", 1/24, ஆஸப் அலி ரோடு, புது டெல்லி-1
3. "பாலுஸேரி பில்டிங்", 14-A/4, W.E.A. கரோல்பாக், புது டெல்லி-5
4. 198, முதல் மாடி, ஜோர்பாக் நர்ஸரி, புது டெல்லி-3
5. 48, லேக் பிளேஸ், கல்கத்தா-29

**எங்கள் சேவை உங்களுக்குத் தேவை**



# நாட்டிற்கு உதவி செய்ய என்னால் என்ன செய்ய முடியும்?

வீரத்தின் விளைநிலம் பெண்கள். நாட்டுக்கான பணியில் வீரம் ஊட்டவும், துணிவு காட்டவும் இந்தியப் பெண்கள் என்றுமே பின்தங்கியதில்லை. வீட்டு முனையைப் பலப்படுத்துங்கள். உள்ளூர் பெண்கள் ஸ்தாபனங்கள் மூலம் பாதுகாப்பு நடவடிக்கையில் பங்கு கொள்ளுங்கள். தேசீயப் பாதுகாப்பு நிதிக்கு வாரி வழங்குங்கள். மற்றவர்களையும் கைநிறைய அளிக்கச்செய்யுங்கள். டிபென்ஸ் சர்டிபிகேட்டுகள் வாங்குங்கள். ஒழுக்கம், நடத்தை, நல்ல மனப்போக்கைக் கடைப்பிடியுங்கள்.

- *வீணடிக்கும் மனப்பான்மையை விட்டொழியுங்கள். குடும்பத் தேவைகளைக் குறைத்துக்கொள்ளுங்கள். விலைவாசி ஏறாதிருக்க உதவுங்கள்*
- *தங்கம் வாங்காதீர்கள். நாட்டின் நன்மைக்காக உங்களிடம் உள்ள தங்கத்தைத் தாருங்கள்*
- *எது நேர்ந்தாலும் சரி வேலையில் கருமமே கண்ணாயிருங்கள். திறமையாக செய்யப்பட்ட வேலை நாட்டின் பாதுகாப்பு முயற்சிக்கு உதவுகிறது.*
- *உதாஸீனம் வேண்டாம், உற்சாகமிருக்கட்டும்.*

# விழித்திருங்கள்

## —நாட்டின் பலம் அதிகரிக்க உழையுங்கள்

DA 62/F 7.

தன. அவள் தலை முகம் கழுவி, மையிட்டு, பொட்டிட்டுக் கொண்டு வந்தாள்.

"இளந் தம்பதிகள் பெரியோரின் மேற்பார்வையில் இருந்து கொண்டு இப்படித் திருட்டுத்தனமாக அளவளாவுவதில் ஒரு தனி இன்பம் இருக்கத்தான் செய்கிறது; இல்லையா கல்யாணி?" என்றான் கல்யாணம். 'ஆமாம்' என்கிற பாவனையில் தலையசைத்தாள் கல்யாணி.

"தம்புராவை எடுத்து வைத்துக் கொண்டு அந்த 'ஸரஸிஜநாப ஸோதரி' பாடு."

கல்யாணி மெல்லெனப் பெருமூச்செறிந்தாள். அவள் அங்கேவந்து இரண்டு மாதங்கள் ஆகிவிட்டன. தம்புரா சுருதியுடன் பாடி இரண்டு மாதங்களுக்கு மேல் ஆகிவிட்டன. வெள்ளி, செவ்வாயில் பூசாத்தும்போது தவிரத் தம்புராவைத் தீண்ட வாய்ப்பே இல்லை. இப்போது பாட வென்று அதை எடுத்தபோது அவள் உடம்பு புல்லரித்தது. உணர்ச்சிகளை அடக்கிக் கொண்டு தம்புராவுடன் அவன் அருகில் வந்து அமர்ந்து பாடினாள். அவன் ஒரே ஒரு பாட்டுக் கேட்டான்; அவள் மூன்று பாட்டுக்கள் பாடினாள். அவளுக்கே பாட வேண்டும் போல் ஆசையாக இருந்தது.

கடிகாரம் ஒலித்தது. "அட! இதற்குள் ஐந்தாகி விட்டதா? பொழுது போனதே தெரியவில்லை" என்றபடி தம்புராவைக் கண்ணில் ஒற்றிக் கொண்டு எழுந்தாள் கல்யாணி.

"நீ ஏன் பாடுவதே இல்லை?"

"அம்மா சொல்லவில்லையோ? நானாகப் பாடலாமா?"

"ஒன்றும் சொல்ல மாட்டாள். அடிக்கடி இல்லாவிட்டாலும் வாரத்தில் ஒரு நாள்; 'ஸரஸிஜநாப ஸோதரி' மட்டும் பாடு!"

"எனக்கு, ஏன் எல்லாருக்குமே அது பிடிக்கும். உங்களையும் அது பிடித்துக் கொண்டு விட்டது." அவள் சிரித்தாள்.

ஆறு மணிக்கு அவர்கள் வந்தார்கள். ஜானகி அம்மாள் மோப்பம் பிடித்தாள். புலன் எதுவும் கிடைக்கவில்லை.

அடுத்த வெள்ளிக் கிழமை. ஜானகி அம்மாள் கடுகடுத்தாள். "வாரத்தில் இரண்டு நாட்கள்; நாலணாப் பூ! எந்தக் குடும்பத்தில் கட்டுப்படியாகும்?" என்று அவள் தன் கணவரிடம் இரையத் தொடங்குவதற்கும் கல்யாணி சுவாமிக்கு நமஸ்காரம் செய்துவிட்டுத் தம்புராவுடன் உட்கார்ந்து பாட ஆரம்பிப்பதற்கும் சரியாக இருந்தது. பாடுவதை நிறுத்தி மாமியாரின் இரைச்சலைச் செவிமடுத்தாள். இதற்குள் ஜானகி அம்மாளே, "மூடு வாயை!" என்று அதட்டியபடி அங்கே வந்து விட்டாள். "அடுத்த வீட்டுக் குழந்தைக்கு உடம்பு சரியில்லை என்று தெரியாதா? யாருக்கு வேண்டும் பாட்டும் கூத்தும்?" என்றாள். கல்யாணி தம்புராவை எடுத்து வைத்து விட்டு அடுக்களைப் பக்கம் போய் விட்டாள். மீண்டும் தனிமை கிட்டியபோது, "நான் சொன்னேனே நீ பாடவேயில்லையே?" என்றான் கல்யாணம். அவள் நடந்ததைச் சொன்னாள். அவன் முகத்தில் ஈ ஆடவில்லை. "அம்மாவுக்கு விருப்பமில்லையானால் வேண்டாம்" என்று கூறி விட்டான்.

இந்நிலையிலே ஓராண்டு ஓடி மறைந்தது. கல்யாணி தாயானாள். குழந்தை பாலாஜி



கமலா : மாமி! இந்த மாலை இருபத்திரண்டு காரட்டிலே புதுசா பண்ணினேன்!

சீதா : இருபத்திரண்டு காரட்டிலேயா? என்ன மாலைன்னு பேரு?

கமலா : பல்லு மாலைன்னு பேரு... என் கணவர் பல் வைத்தியரோன்னோ. அவாளுக்குச் சர்க்காரிலே அசல் தங்கம் கொடுத்திருக்கா!

முகத்திலே ஒருவாறு தன் நஷ்டத்தை மறக்க முயன்று வந்தாள் அவள். ஆனால்...

என்ன சோதனை! கல்யாணம் நோய்ப்பட்டுப் படுத்தான். குடலில் ஏதோ கோளாறு என்றார்கள். இன்னும் என்னவோ சொன்னார்கள். சிகிச்சை நடந்து வந்தது.

ஒரு நாள். அன்றும் வீட்டில் யாருமில்லை. கல்யாணம் கல்யாணியிடம் கெஞ்சினான்; கொஞ்சினான். அவள் மனம் இரங்கினாள். அந்த ஒரே ஒரு பாட்டை — நாககாந்தாரி ராக உருப்படியை—த்தான் அவன் கேட்டான். அவளும் மனத்தை அடக்கிக் கொண்டு பாடத் தொடங்கினாள். 'ஸரஸிஜநாப ஸோதரி; சங்கரி — பாஹிமாம்' என்று முடிக்க வில்லை. வாசலில் டாக்ஸிச் சத்தம் எழுந்தது. ஜானகியம்மாளேதான். தம்புராவைக் கொண்டு போய்ச் சாத்திவிட்டு உள்ளே மறைந்து ஓடி விட்டாள் கல்யாணி.

மறு நாள் காலை 'டங்'கென்ற ஒலி கேட்டு ஓடி வந்தாள் கல்யாணி. தம்புராத் தந்தி ஒன்று சுருண்டு கிடந்தது. 'எப்படி அறுந்தது? இங்கே யாரும் இல்லையே!' அவள் திகைத்தாள். 'உன் திகைப்புக்கும் துயரத்துக்கும் இனி முடிவே இல்லை!' என்று யாரோ கூறுவதுபோல் ஒரு பிரமை. அன்றைக்கு எட்டாம் நாள் அது உண்மையாகி விட்டது. தம்புராத் தந்தி தானாகவே அறுந்தது; வாழ்க்கையின் ஆதார சுருதியைக் கல்யாணம் கலைத்து விட்டான்.

'பூர்வ சொத்து இருக்கிறது. நல்ல படிப்பு, நல்ல உத்தியோகம், மனிதர்கள் தங்கமானவர்கள்' என்றெல்லாம் கல்யாணம் நிச்சயித்த போது பேசியவர்கள் இப்போது எதையுமே காதில் போட்டுக் கொள்ளாமல் ஒதுங்கிப் போனார்கள். ஒரு கையில் பாலாஜியும் மற்றொரு கையில் தம்புராவுமாகப் பிறந்த வீட்டை அடைந்தாள் கல்யாணி. உணவின்றி, உறக்கம் இன்றி ஒருபுறமாக விழுந்து கிடந்தாள். இருக்கிறவர்கள் குழந்தையைக்

> வாழ்வைக் குறித்த ஒரே விதி—அன்பு. அன்புடையவன்தான் வாழ்கிறான். சுயநலக்காரன் செத்துக்கொண்டே இருக்கிறான். ஆதலால் அன்புக்காகவே அன்பு செய்.
>
> — ஸ்வாமி விவேகாநந்தர்

கவனித்துக் கொண்டார்கள். தாயாருக்கும் செய்க்கும் ஜீவன வழி? ஸாம, தான, பேத முறைகளில் எல்லாம் அவர்களை அணுகிப் பார்த்தாகி விட்டது. அவர்கள் உதட்டைப் பிதுக்கி விட்டு, ஏனைய பெண்கள், பின்னை களின் நல்வாழ்விலே மகிழ்ந்திருந்தார்கள்.

நடேச மாமா மீண்டும் வந்தார். "நடந்ததை யெல்லாம் கனவென்று மறந்துவிட வேண்டும். எத்தனை காலத்துக்கு அப்பா, அம்மா, அண்ணன், தம்பிகள் தாங்குவார்கள்? 'டிப்ளோமா'வெல்லாம் இனியாவது பயன் பெறட்டும். கச்சேரி செய்ய மனம் இல்லாவிட்டால் நாலு குழந்தைகளுக்குப் பாட்டுச் சொல்லி வைக்கலாம். ஜீவனோபாயமுமாகும்; மனசுக்கும் ஒரு சாந்தி" என்றார். உள்ளே படுத்திருந்த கல்யாணி சிரித்துக்கொண்டாள்.

'பிரமராட நியாயம்' என்பதுபோல் அன்று முதல் கணபதிராமன் நடேச மாமா சொல்லித் தந்த மூல மந்திரத்தையே இடைவிடாது உச்சரித்து வந்தார். தகப்பனாரிடம் நேருக்கு நேராக வெடுக்கென்று மறுக்க மனம் இன்றிக் கல்யாணி வாளாவிருந்தாள். 'மறுத்து விட்டு? காலமெல்லாம் இரண்டு ஜீவன்களை யார் காப்பாற்றுவார்கள்?' என்ற எண்ணமும் அடிமனத்தில் கொக்கி போட்டது.

'பாலாஜி கான நிலையம்' என்று பெயர்ப் பலகை ஒன்றையும் ஒரு நாள் தயாரித்துக் கொண்டு வந்து விட்டார் கணபதிராமன். கல்யாணி அதைப் பார்த்து ஒரு குரல் அழுதாள். அதன்பின்னர் யாருமே அவளிடம் அதுபற்றிப் பேசவில்லை.

கும்பகோணத்தில் கணபதிராமனின் தமையனுக்கு அறுபதாம் கல்யாணம். 'கட்டாயம் நீ அனைவரோடும் வரத்தான் வேண்டும்' என்று அவரே எழுதியிருந்தார். கல்யாணியின் கதி மாறிப் பத்து மாதங்களுக்கு மேல் ஆகி விட்டதாலும் அவளே போய் வரும்படி வற்புறுத்தியதாலும் கணபதிராமன் அனைவரோடும் சென்றிருந்தார். எப்போதுமே, 'அக்கா, அக்கா' என்று சூழும் அக்கம் பக்கத்துப் பெண் குழந்தைகளே இப்போதும் அவளுக்குத் துணை. பெரியோர் தூண்டுதலாலோ, தாமாகவோ அவர்கள் தங்களுக்குப் பாட்டு கற்றுத் தரும்படி கல்யாணியை நச்சரிப்பது வழக்கம். கல்யாணிக்குக் குழந்தைகள் என்றால் உயிராயிற்றே!

**ப**ழைய நிகழ்ச்சிகளில் மூழ்கியிருந்த கல்யாணி, "அக்கா!...." என்ற குரல் கேட்டு உணர்வு பெற்றாள். எதிர்வீட்டுச் சிறுமி ராஜம், "அம்மா பொழுதோடேயே சாப்பாட்டைப் போட்டுத் துரத்தி விட்டாள். உங்களுக்குத் துணையாகப் படுத்துக் கொள்ள வந்திருக்கிறேன்" என்றாள். கல்யாணி அவளைப் பார்த்து முறுவலித்தாள். கண்களின் விருந்து கன்னங்களில் நீர்த் துளிகள்; உதட்டில் சிரிப்பு. சிறுமிக்கு என்ன புரியும்? சிறிது அச்சமுற்றாள். அதை அறிந்த கல்யாணி கண்ணைத் துடைத்துக் கொண்டு எழுந்தாள். தட்டுமுட்டுச் சாமான்கள் கிடந்த இடத்துக்குப் போனாள். அங்கே புழுதி படிந்து கிடந்த பெயர்ப் பலகையை எடுத்தாள். முன்றானையாலேயே தட்டித் துடைத்தாள். தன் கையாலேயே அந்த வீட்டின் முகப்பில் மாட்டினாள்.

பெயரளவில் உணவை முடித்துக் கொண்டு படுத்த கல்யாணி, கதை சொல்லும்படி கேட்ட சிறுமியிடம் சொன்னாள்:

"காலையில் நீ எனக்கு இரண்டு காரியங்கள் செய்ய வேண்டும். நான் தரும் குறிப்பையும் ரூபாயையும் எடுத்துக்கொண்டு கடைவீதிக்குப் போக வேண்டும். அங்கே ஆர்மோனியக் கடை இருக்கிறது பார்; அதில் கொடுத்துத் தம்புராத் தந்தி வாங்கி வரவேண்டும். பிறகு, பாட்டு சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிற பெண்கள் இருக்கிறார்களே, கோமு, பாரு, சரசு, விலா — எல்லாரையும் அழைத்து —"

"நீங்கள் சொல்லித் தரப் போகிறீர்களா அக்கா?" என்றாள் ராஜம் வியப்புடன்.

"ஆமாம் கண்ணு. இசைக்குத் தொண்டு; பாலாஜி வளர வழி; என் பிறந்த வீட்டாரின் பளுவைக் குறைக்க வழி; என் உள்ளம் சாந்தி பெறவும் அதுவே மார்க்கம்."

"ரைட்டு!...." என்று குதூகலித்தாள் குழந்தை. சிறிது நேரத்துக்குப் பின் இருவரும் தூங்கிப் போனார்கள்.

**வா**சலில் வண்டி வந்து நின்றது. கணபதிராமனும் அவர் மனைவி, குழந்தைகளும் அதிலிருந்து இறங்கினார்கள். வீட்டினுள்ளிருந்து பாட்டுச் சத்தம் கேட்டது. வீட்டின் முகப்பிலே தொங்கிய 'பாலாஜி கான நிலையம்' என்ற பெயர்ப் பலகையும் கண்ணில்பட்டது. வியப்பே வடிவாய் அனைவரும் உள்ளே வந்தார்கள். ஏழெட்டுக் குழந்தைகள் சரளி வரிசை பாடிக் கொண்டிருந்தன. கல்யாணி கலைவாணியைப் போல் அமர்ந்து தம்புரா மீட்டிக் கொண்டிருந்தாள். 'பாவம், தானுகவே அவள் மனம் பரிபக்குவம் அடைந்து விட்டது போலும்!' என்று எண்ணிய பெற்றோர் அவளை எதுவும் கேளாது உள்ளே சென்றனர். பாலாஜி தளர் நடையில் சென்று தாயைக் கட்டிக் கொண்டான்.

பயிற்சி முடிந்தது. குழந்தைகள் சென்றார்கள். பிறகும் தம்புரா சுருதி ஒலித்துக் கொண்டே இருந்தது. கல்யாணி ராகம் பாடினாள்; நாககாந்தாரி. 'ஓ!...ஸரஸிஜ நாப பாடப் போகிறாள் போலிருக்கிறது' என்று பெற்றோர் நினைத்தனர்; பெருமூச்சுவிட்டனர். ஆனால் கல்யாணி இலேசில் ராக ஆலாபனையை முடித்துக் கீர்த்தனையைத் தொடங்க வில்லை. அவளுடைய அப்போதைய நெஞ்சார்ந்த உணர்ச்சி காரணமாக அந்த அபூர்வ ராகத்திலும் அத்தனை சஞ்சாரத்துக்கு அவளுடைய மனோதர்மம் இடம் கொடுத்துக் கொண்டிருந்தது. அந்த வீடெங்கும் நிறைந்து தெருவெல்லாம் முழங்கிற்று அவள் பாடிய நாககாந்தாரி.

---

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.

